# பாரதப் பெரியார்கள்

(மூன்றும் பாகம்)

ஹிந்தியிலிருந்து தமிழாக்கம் :
வி. எஸ். சுந்தரராஜன்

பப்ளிகேஷன்ஸ் டிவிஷன்
தகவல்—ஒலிபரப்பு அமைச்சகம்
இந்திய சர்க்கார்

# பதிப்புரை

"பாரதப் பெரியார்கள்" வரிசையின் முதல் இரண்டு பாகங்களில் பெரும்பாலும் பழங்காலப் பெரியார்களே இடம் பெற்றிருந்தனர். இந்த மூன்றும் பாகம் அக்பரின் காலம் தொடங்கி தயானந்தர் காலம் வரை நம்மை அழைத்துச் செல்லுகிறது. முன்போலவே இத்தொகுதியிலும், பல்வேறு துறைகளைச் சேர்ந்த பெரியார்களின் ஆதாரபூர்வமான வரலாறுகளைச் சுருக்கமாகக் கொடுத்திருக்கிறோம். தென் இந்தியா உட்பட நாட்டின் எல்லாப் பிராந்தியங்களைச் சேர்ந்த மஹா புருஷர்களையும் இத்த வரிசையில் காண லாம்.

இம்முயற்சியை வாசகர்கள் வரவேற்பார்கள் என்றும், குற்றங்குறைகள் இருந்தால் எங்களுக்கு எடுத்துக் காட்டுவர் என்றும் நம்புகிறோம்.

பிரசுரகர்த்தர்கள்

# பொருளடக்கம்



## அக்பர்

தாம் வாழ்ந்த காலத்தில் தமது அரசை விரிந்து பரவச்செய்த பேரரசர்கள் பலர் பாரத நாட்டில் இருந்திருக் கின்றனர். அவர்களது ஆற்றலைக்கண்டு பகைவர்கள் அஞ்சினர்; பணியாளர்களும் அவையினரும் அவர்களிடம் கைகட்டி மரியாதையுடன் நடந்து வந்தனர். எனினும் அத்தகையவர்கள் இறந்த பின்பு அவர்களை யாரும் மதிக்க வில்லை; யாரும் அவர்களை நினைவு கூரவேயில்லை. ஆனால் அசோகரும் அக்பரும் இதற்கு விலக்கானவர்கள். அவர் களது பெயர்களை மக்கள் இன்றும் மதிப்புடனும் மரியாதை புடனும் கூறுகின்றனர். அவர்களைப் பெருமக்களாகப் போற்றுகின்றனர்.

அக்பரது தந்தை ஹுமாயூனுடைய அரசு பறிபோய் விட்டது. எவரேனும் ஓர் அரசரிடமிருந்து உதவி பெற எண்ணி ஹுமாயூன் அங்கும் இங்கும் ஓடித் திரிந்துவந்தார். அப்படித் திரிகையிலே அவர் அமர்கோட் அரசரிடம் போய்ச்சேர்ந்தார். அப்போதுதான், சிந்துப் பிரதேசத்தின் பாலைவனப் பகுதியில் கி. பி. 1542 நவம்பர் 23ஆம் தேதி அக்பர் பிறந்தார். இச் செய்தியைக் கேட்ட போது ஹுமாயூனிடம் கொஞ்சம் கஸதூரி மாத்திரமே இருந்தது; அதை அவர் தம்முடன் இருந்தோர்க்குப் பகிர்ந்து வழங்கிவிட்டுக் கூறினார்: "நான் தில்லியில் இப்போது சக்கரவர்த்தியாக இருந்திருப்பின், இம் மகிழ்ச்சி வேளையில் வைரங்களையும், இரத்தினங்களையும் வாரி வழங்கி யிருப்பேன். இப்போதோ, என்னிடம் இக் கஸ்தூரிதான் உள்ளது. நீங்கள் யாவரும் இதையே பெற்றுக்கொண்டு, குழந்தைக்கு ஆசி கூறுங்கள்."

துணையிருந்தோர் கூறினர்: "பேரரசே! கவலைப் படாதீர்கள். இம் மைந்தனது பெருமை கஸ்தூரியின் நறு மணம் போன்று, இவ் வுலகமெங்கும் பரவப் போகின்றது."

அமர்கோட்டின் அரசர் உதவியேதும் அளிக்க வில்லை. ஹுமாயூன் இந்தியாவை விட்டு, ஈரான் (பாரசீகம்) சென்று விட்டார். பாரசீக அரசர் தஹ்மாஸ்ப் ஹுமாயூனுக்குப் பதினான்கு ஆயிரம் வீரர் கொண்ட படையை அளித்தார். இப் படையின் உதவியுடன், ஹுமாயூன் தமது சகோதரர்களான, காமரான், ஹிந்தால், அஸ்கரி மூவருடனும் போர் புரிந்து, வெற்றி கொண்டு காபுலையும் காந்தாரத்தையும் கைப்பற்றினார்.

ஷெர்ஷாவின் பிள்ளைகளும் 'பேரப்பிள்ளைகளும்'

தில்லியின் அரியணைக்காக ஒருவரோடொருவர் சண்டை யிட்டுக் கொண்டிருக்கும் செய்தி ஹுமாயூனுக்குப் பின்னர் தெரிய வந்தது. இது ஒரு வாய்ப்பாக அமைந்தது. ஹுமாயூன் இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார். 1555 பிப்பிரவரியில் அவர் சிகந்தர் ஸுரிடமிருந்து லாகூரைக் கைப்பற்றினர். ஜுலையில் ஆக்ரா, தில்லி நகரங்களையும் பிடித்துக் கொண்டார். ஆனல் தமது அர சாட்சியை நன்கு துவங்கும் முன்பே, 1556 ஜனவரி 24ந் தேதி தில்லி அரண்மனைப் படிகளிலிருந்து வீழ்ந்து அவர் மரணமெய்தி விட்டார். அச் சமயத்தில் அக்பர் பைரம் கானுடன் பஞ்சாபில் இருந்தார். 1556 பிப்பிரவரி 14ந் தேதி அக்பர் பேரரசராகப் பிரகடனப் படுத்தப்பட்டார்.

அப்போது அக்பருக்குப் பதின்மூன்று வயதுதான் ஆகியிருந்தது. இச் சமயத்தில் ஆதில்ஷா ஸுரின் திறமைவாய்ந்த படைத்தலைவனும் மந்திரியுமான ஹேமு என்பவன், முகலாய கவர்னர் தார்திபேக்கைத் தோற் கடித்துத் தில்லியையும், ஆக்ராவையும் கைப்பற்றிக்கொண் டான். எவர் கையில் தில்லி இருந்ததோ, அவரே இந் தியாவின் சக்கரவர்த்தி எனக் கருதப்பட்டார். ஆகவே, அக்பரும் பைரம்கானும் ஹேமுவுடன் யுத்தம் செய்யத் தீர்மானித்தனர். அவர்கள் பஞ்சாபிலிருந்து பானிபத் திற்கு வந்தனர். அங்குதான் இருதரப்புப் படைகளும் சந் தித்தன. ஆரம்பத்தில், பகைவனது படை வென்று கொண்டிருந்தது; ஆனல் அக்பர் குறிபார்த்து எய்த ஓர் அம்பு ஹேமுவின் கண்ணில் தைத்துவிட்டது. அம்பு பட்டதும் அவன் மூர்ச்சித்து வீழ்ந்து விட்டான். தலைவன் விழுந்ததைக் கண்டதும் ஸுரின் படை பின்வாங்கி ஓடி விட்டது. முகலாயர்கள் வெற்றி பெற்றனர்.

ஹேமு பிடிபட்டு விட்டான். அவனைப் பைரம்கான் சங்கிலியால் பிணைத்து அக்பர் முன்பு கொணர்ந்து நிறுத்திக் கூறினன்: "பேரரசே! இது தாங்கள் பெற்றுள்ள முதல் வெற்றி. எனவே, பகைவனது தலையைத் தங்களது வாளினல் வெட்டி வீழ்த்தி, வெற்றி விழாக் கொண்டாடுங்கள்."

ஆனல், அக்பரோ "தோற்றுப்போய்க் கைதியாக நிற்கும் பகைவனது தலையை வெட்டுவது வீரமாகாது. நமது வாள் இச் செயலைப் புரியாது. இவனை அழைத்துச் செல்" என்று கூறிவிட்டார்.

பின்பு பைரம்கான் தனது கையால் ஹேமுவின் சிரத்தை வெட்டினன் என்று கூறப்படுகிறது. ஆனல், மக்கள் யாவரும் அக்பரது வார்த்தையைக் கேள்வியுற்று, அவரை மிகவும் புகழ்ந்தனர்.

தில்லியும் ஆக்ராவும் முகலாயரின் வசமாயின. அக்பர் இந்தியாவின் சக்கரவர்த்தி ஆகிவிட்டார். ஆயினும் அரசாங்க அதிகாரம் முழுவதும் பைரம்கான் கையிலேயே இருந்தது. பைரம்கான் ஹுமாயூனின் நம்பிக்கைக்குப் பாத்திரமான பழைய சேனைத்தலைவன் என்ற காரணத்தினல், தன் மனம் போன போக்கில் செயல் புரிந்து வந்தான். முகலாயப் பேரரசை நன்கு வேரூன்றச் செய்தவன் அவன். அவனே அக்பரை அரியணைமீது அமர்த்தினன், பானிபத் யுத்தத்தில் வெற்றி தேடித் தந்தான், மேலும் அரசின் பகைவர்களையெல்லாம் மிகுந்த துணிவுடன் முறியடித்தான். ஆனல், நாளடைவில் அவன் கட்டுக்கடங்காத சர்வாதிகாரியாகி விட்டான், வாலிப அரசரது ஆணையையும் பொருட்படுத்துவதில்லை. இவ் விஷயம்

அக்பரது மனத்தை மிகவும் உறுத்தியது. பதினெட்டு வயதானதும் அக்பர் தாமே அரசாட்சியை நடத்த விரும்பினர். எனவே அக்பர் பைரம்கானை அழைத்துக் கூறினர்: "ஐயா! நானும் முகலாயப் பேரரசும் தங்களுக்கு மிகவும் கடன் பட்டுள்ளோம். தாங்கள் செய்த நன்மைகளை நான் என்றுமே மறக்க முடியாது. அவற்றுக்குக் கைம்மாறு செய்வதும் இயலாது. ஆனல், தற்சமயம் தாங்கள் முதுமை அடைந்து விட்டீர்கள். அரச காரியங்களை இனி நானே கவனித்துக் கொள்கிறேன். தாங்கள் ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டுமென்பது என் விருப்பம். தாங்கள் மெக்காவிற்குப் புனித யாத்திரை செய்து வாருங்கள்."

பைரம்கான்: அரசே! தாங்கள் என்ன சொன்னீர்கள்? நான் 'ஹஜ்' யாத்திரை செல்ல வேண்டுமா?

அக்பர்: ஆம். இம் முதிய பிராயத்தில் தாங்கள் 'ஹஜ்' யாத்திரை போவதே தகுந்த செயலாகும்.

பைரம்: அரச காரியங்களை நீங்கள் மேற்பார்த்து விடுவீர்களா?

அக்பர்: தாங்கள் கவலையுற வேண்டாம், நம்பிக்கையுடன் செல்லுங்கள். நான் இப்போது நல்ல அனுபவம் பெற்றுள்ளேன்.

பைரம்கானல் பதில் கூற முடியவில்லை. அவன் ஹஜ் யாத்திரை புறப்பட்டான். ஆனல், தில்லியிலிருந்து சிறிது தூரம் சென்றதுமே மன்னருக்கு எதிராகக் கலகத்தைத் துவக்கிவிட்டான். அக்பருக்கு முன்பே அவனது

எண்ணம் தெரியும். அவருடைய படை பைரம்கானைப் பின்தொடரத் தயாராகவே இருந்தது. அவன் ஜலந்தருக் கருகில் தோற்கடிக்கப்பட்டு, அக்பர் முன்னிலையில் கொண்டு வரப்பட்டான். அக்பர், தமது ஆசிரியரும் பாதுகாவலரு மான பைரம்கானது பணிகளை மறக்கவில்லை. அவர் மிக்க பணிவுடன் கூறினர்: "பெரியவரே, நான் இப்போது குழந்தை யில்லை, வாலிபம் அடைந்து விட்டேன். மேலும் நான் இந்தியாவின் பேரரசன் என்பதைத் தங்களிடம் கூறினேன். ஆனால், தங்களுக்கு எனது வார்த்தையில் நம்பிக்கை பிறக்கவில்லை."

பைரம்: நான் முற்றிலும் குற்றவாளிதான்.

அக்பர்: அப்படியானல் இக் குற்றத்திற்குத் தண்டனை ?

பைரம்: மரண தண்டனைதான். (பைரம்கான் தலைதாழ்த்தி விட்டான்.)

அக்பர் சிரித்துக் கொண்டே கூறினர்: பெரியா ராகிய தங்களுக்கு நான் ஒரு தண்டனையும் அளிக்கமாட் டேன். அரசாங்கத்தை அக்பரால் நிருவகிக்க முடியும் என்று இப்போது தங்களுக்குப் புரிந்திருக்கும். எனவே நம்பிக்கையுடன் தாங்கள் மெக்கா யாத்திரை செல்லுங்கள். அங்கே தங்களது இந்தக் குற்றத்திற்கு மன்னிப்புக் கிடைத்து விடும்.

1561 ஜனவரியில் பைரம்கான் மெக்கா செல்லும் வழியில் ஓர் ஆப்கானியனால் கொல்லப்பட்டான். முன்பு பைரம்கானல் தன் தந்தை கொலையுண்டதற்கு இப்போது அந்த ஆப்கானியன் பழிவாங்கிவிட்டான்.

இவ்வாறு, அக்பர் ஆட்சிப் பொறுப்பு முழுவதையும் ஏற்றுக்கொண்டார். இதுவரை பைரம்கானைப் பற்றி அரசனிடம் கோள் சொல்லி வந்த சில படைத் தலை வர்களே, இப்போது தங்கள் இஷ்டப்படி நடக்க ஆரம் பித்தனர். இச் சிறுவன் என்ன அரசாட்சி செய்து விடுவான் என்பது அவர்களுடைய எண்ணம். ஆனால், அக்பர் யாவற் றையும் அறிந்திருந்தார். தாமே சுதந்திரமான முறையில் அரசு செலுத்த முடிவு செய்திருந்தார். அடங்காமல் நடந்துகொண்ட சேனைத் தலைவர்களுள் ஆதம்கான் என் பவன் முக்கியமானவன். அவனையும் தமது பாதையி லிருந்து விலக்க வேண்டிய நிலை அக்பருக்கு ஏற்பட்டது. அக்பர் கல்வி கற்காவிடினும் அனுபவத்தினால் பல விஷ யங்களை அறிந்திருந்தார். எனவே அவர் புதிய ஆலோ சகர்களுடன் அரசு செலுத்த விரும்பினார்.

இந்தியா பற்பல சிறு ராஜ்யங்களாகப் பிரிந்திருந் தது. ஒரு பக்கம், தில்லியின் அரியணைமீது கண் வைத் திருந்த ஸூர் வம்சத்துப் படைத்தலைவர்கள் இருந்தனர் ; மறுபுறம், வீரத்திற்கும் துணிவிற்கும் பெயர் பெற்ற ராஜ புத்திர அரசர்கள் இருந்தனர். எதிரிகளை அடக்குவ தற்காக அக்பர் தமது படைபலத்தை உறுதிப்படுத்தினார். ராஜபுத்திர வீரர்களைத் தம்முடன் சேர்த்துக் கொண்டு விட்டால், முகலாய அரசின் அஸ்திவாரம் என்றைக்கும் உறுதி குலையாதென்பதை அவர் பின்னர் கண்டார். அக்பர் பல ஆண்டுகள் யுத்தம் செய்து கொண்டிருந்தார். குஜராத், மேவார், காட்டியாவார் முதலிய ராஜ்யங்களை வென்றார். பின்னர், ராஜபுத்திரருடன் திருமண உறவு கொண்டு அவர்களைத் தமது சபையில் பெரும் பதவிகளில் அமர்த்தினார் ; அவர்களிடம் பொறுப்பான காரியங்களை

ஒப்படைத்தார். ராஜா மான்சிங் அவருடைய பிரதான மந்திரியாக இருந்தார். படிப்படியாக ராஜபுத்திரர்கள் யாவருமே அக்பருக்கு உள்ளடங்கி விட்டனர். சித்தூர் ராணு உதய சிம்மரும், ராணு பிரதாப்பும்தான் முகலாய ஆட்சியை மதிக்கவில்லை. அக்பர், ராஜபுத்திரர்களுடைய துணைகொண்டு பல சண்டைகளில் வெற்றியடைந்து நாட்டில் ஒற்றுமையை நிலைநாட்டினுர்.

அமைதியையும் ஒற்றுமையையும் நிலைநாட்டியதுடன் சீர்த்திருத்தங்கள், அபிவிருத்திப் பணிகள் ஆகியவற்றிலும் அக்பர் கவனம் செலுத்தினுர். மிகுந்த பெருமை படைத்த நாடு பாரதம் என்பதை அவர் உணர்ந்திருந்தார். பாரதத்தின் வள முறைகளும், பண்பாடும் உயர்ந்தவையென்பதை அவர் அறிந்திருந்தார். இந்தியாவின் பெரும்பான்மை மக்கள் இந்துக்களே. அவர்களது வாழ்க்கை முறை தனிப்பட்டது, அவர்களது பழக்க வழக்கங்கள் தனிப்பட்டவை. உண்மையில் முகலாயர்கள் நிலைத்து நின்று இந்தியாவில் ஆட்சி புரியவேண்டுமாயின், இந் நாட்டின் பழக்கங்கள், புண்பாடு இவற்றைத் தமதாக்கிக் கொள்ள வேண்டும். இங்குள்ள மக்களின் பழக்க வழக்கங்களுக்கு மதிப்பளித்து, அவர்களது மனத்தைக் கவரவேண்டும். இக் கருத்துடன் அக்பர் இந்தியாவின் பழக்க வழக்கங்கள் பலவற்றை ஏற்றுக்கொண்டார்.

மதங்களிடையே நிலவிய சச்சரவுகளை நீக்க அக்பர் விரும்பினுர். தாம் படிக்காதவராக இருப்பினும், பல மதங்களைச் சார்ந்த மிக நல்ல புத்தகங்களைப் பிறரைப்படிக்கச் சொல்லி அவர் கேட்டு வந்தார். பல மதத்தலைவர்களையும் வரவழைத்து வாதங்கள் நடத்தச் செய்தார்;

தாமும் அவற்றில் பங்கு கொண்டார். இவ் விவாதங்களுக்காக, பதேப்புர் ஸீக்ரி நகரத்தில் ஒரு சபா மண்டபத்தை அக்பர் அமைத்திருந்தார்.

மதம், கலாசாரம் ஆகிய விஷயங்களில் ஆலோசனை கூறுவதற்கு, அபுல்பஜல், பைஜி என்ற இரு சகோதரர்கள் இருந்தனர். விவாதங்கள் யாவும் எழுதப்பட்டு வந்தன. பின்னர், அக்பர் அவற்றை ஆராய்ந்து பார்ப்பார். வாத விவாதங்களைக் கேட்டுக் கேட்டு அக்பருக்கு மதங்களைப் பற்றிய போதிய அறிவு கிடைத்ததும், ஒரு நாள் அவர் பைஜியிடம், "மதங்கள் யாவற்றிலிருந்தும் நல்ல விஷயங்களைத் திரட்டிஒரு புதிய மதத்தை நிறுவ விரும்புகிறேன்" என்றுகூறினர்.

அபுல் பஜல்: தங்கள் எண்ணம் சரியே. ஆனல் அரசே, இதை மக்கள் ஒப்புவார்களா ?

அக்பர்: ஒரு நிர்ப்பந்தமும் இல்லை. விரும்புபவர் ஏற்கட்டும்; விரும்பாதவர் ஏற்க வேண்டாம். இதன் பயனாக ஒருவரோடு ஒருவர் சண்டையிடுவது குறையும்; மேலும் மக்களுக்கு எல்லா மதங்களின் நல்ல விஷயங்களும் ஒரே மதத்தினுள் கிடைக்க வழியுண்டு.

இக் கருத்துடன் அக்பர் 'தீன் இலாஹி' என்ற புதிய மதத்தை உருவாக்கினர். அதில் எல்லா மதங்களுடைய நல்ல விஷயங்களும் கலந்திருந்தன. இந்து மதத்தின் பற்பல கோட்பாடுகள் அதில் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தன. அக்பர் சூரிய வழிபாடு செய்து வந்தார்,

அரண்மனையின் ஓர் சாளரத்தில் அமர்ந்து மக்களுக்கு அவர் தரிசனம் கொடுப்பதுண்டு.

அக்பர் காலத்தில், 'தீன் இலாஹி' அரசவையின் மதமாக இருந்தது. ஆனால், அக்பருக்குப் பின் அது நிலைக்கவில்லை. தீன் இலாஹியினால் ஒரு பயன் கிட்டியது. அதாவது, இதற்கு முன்பு அரசியல் தலைவர்கள் பேரரசர்களாக இருந்தனர், மதத்தலைவர்கள் ஆலோசகர்களாக இருந்தனர். அரசாட்சியில் இவர்களது தலையீடு அதிகமாக இருந்தது. ஆனால், தீன் இலாஹி தோன்றியபின் அக்பர் தாமே மதத்தலைவராகவும் ஆகி விட்டார். எனவே, மத ஆலோசகர்களின் கை தாழ்ந்து விட்டது. பதேப்புர் சீக்ரியில் இருந்த இஸ்லாமிய மத குருவை நீக்கிவிட்டு. அக்பர் தமது பெயரிலேயே வழிபாடு படிக்கச் செய்தார். மதச் சண்டைகளில் சக்கரவர்த்தியே நேரில் தீர்ப்பு வழங்குவார் என்றும் பறையறைந்து விட்டார். இதனால், மத குருக்கள் மிகவும் ஆத்திரமடைந்தனர்; இருப்பினும் யாரும் ஏதும் செய்ய இயலவில்லை.

எவ்வாறு அக்பர் எல்லா மதங்களின் நல்ல விஷயங்களையும் எடுத்துக்கொள்ளத் தனியார்வம் கொண்டாரோ, அவ்வாறே கலை, இலக்கிய மரபுகளிலுள்ள நல்ல அம்சங்களையும் இணைக்க வேண்டுமென்ற கருத்துக் கொண்டிருந்தார். வடமொழி நூல்கள் பலவற்றை அக்பர் மொழிபெயர்க்கச் செய்தார். அவருடைய அவையில் பல ஓவியர்கள் இருந்தனர். அவர்களுள் முஸ்லிம்களைவிட இந்துக்களே அதிகம். அவர் பதேப்புர் ஸீக்ரியில் கட்டிய கட்டிடங்கள் மிகவும் அழகு வாய்ந்தவை. பெருமையும் எடுப்பும் கொண்ட இந்துக் கோயில்களின் சட்டிட

முறையைத் தமதாக்கிக் கொண்டு அதில் பாரசீகக் கட்டிடக் கலையின் சிறப்பியல்புகளையும் அக்பர் கலக்கச் செய்ததே இதற்குக் காரணம். தில்லியிலுள்ள ஹுமாயூனின் கல்லறை இம்மாதிரியில் அமைந்ததுதான். அதில் பாரசீகக் கலையின் கலப்பு மிகுதியுண்டு. ஆனால், அதன் கீழ்ப்பாக அமைப்பு இந்திய மரபைச் சேர்ந்தது. மேலும், வெள்ளைச் சலவைக் கற்களும் இந்தியப் பாணியிலேயே பதிக்கப் பெற்றுள்ளன.

மிகப் பெரிய கட்டிடங்கள் தவிர, பற்பல கோட்டைகளையும், சத்திரம் சாவடிகளையும், பள்ளிகளையும், குளம் கிணறுகளையும் அக்பர் ஆக்கி வைத்தார். பாரதத்தின் பண்பாட்டையும், பழக்க வழக்கங்களையும் அவர் எவ்வளவு ஏற்றிருந்தார் என்பதை இதிலிருந்து அறிய முடிகிறது. அக்பர் உண்மையிலேயே, ராஜபுத்திரர் முதலிய இந்துக்களின் மனதைக் கவர்வதில் வெற்றி பெற்றார். அக்பர் சிறந்த ரசிகரானபடியால், அவரது அவைக்களத்தில் நற்குண சீலர்களும், புலவர்கள் பலரும் கூடியிருந்தனர். அங்கு இருந்த நவரத்தினங்களுள் அபுல் பஜல், பைஜி, ராஜா மான்சிங், ராஜா வீரபல், ராஜா தோடர்மல், தான்சேன் ஆகியோர் மிகவும் பிரசித்தமானவர்கள்.

இந்த நவரத்தினங்களின் வாயிலாக நாட்டிற்கு எல்லா வகையிலும் முன்னேற்றமளிக்கும் பற்பல காரியங்களை அக்பர் நிறைவேற்றினார். மான்சிங் ஒரு பெரும் வீரர்; அவர் பல போர்களில் வென்று நாட்டில் ஒற்றுமையையும் அமைதியையும் நிலைநிறுத்த உதவி புரிந்தார். ராஜா தோடர்மலின் துணைகொண்டு புதிய நிலச்சட்டம் ஒன்றை அக்பர் வகுத்தார். இதன் பலனாக விவசாயம் விருத்தியடைந்தது. அபுல் பஜலும், பைஜியும் வீரர்களாக

இருந்ததோடு, பாரசீகம், வடமொழி ஆகியவற்றில் புலவர்களாகவு மிருந்தனர். மதம், கலாசாரம் ஆகிய விஷயங்களில் அக்பருக்கு அவர்கள் யோசனை கூறினர். தான்சேன் பெயர்பெற்ற பாடகராக விளங்கினுர். பாரத நாட்டின் இசைத் துறையில் தான்சேனுக்கு உயர்ந்த இடமுண்டு. அவரது பண்கள் மிகப் பிரசித்தமானவை, வீரபல் அரசாங்கச் சிக்கல்களை விடுவிப்பதில் நிபுணராக இருந்ததுடன், நகைச்சுவை மிகுந்தவராகவும் விளங்கினுர். அக்பர், வீரபல் இவர்களிடையே நிகழ்ந்த வேடிக்கைப் பேச்சுக்கள் பிரசித்தமானவை.

இத்தனை புலவர்களை ஓரிடத்தில் ஒன்றுசேர்த்து, அவரவருக்குத் தக்க பொறுப்புகளையும் தந்தது அக்பரின் தனிச் சிறப்பாகும். இதனுல் பொருளாதாரம், அரசியல், கலாசாரம் ஆகியவற்றில் நாடு முன்னேற்றம் எய்தியது. இம் முன்னேற்றம் காரணமாகவே அக்பரை மகத்தானவர் என்று கருதுகிறோம்.

1605 அக்டோபர் 17ந் தேதி அக்பர் விண்ணுலகு சேர்ந்தார். அவருக்குப் பின், அவரது மகன் ஸலீம், 'ஜஹாங்கீர்' என்னும் பெயருடன் அரியணையில் அமர்ந்தான்.



# தோடர்மல்

பாரதத்தின் தலைசிறந்த ஆட்சியாளருள் ஒருவர் தோடர்மல். அவர் அரச குடும்பத்தில் பிறந்தவரல்ல; எனினும் தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட எந்தக் காரியத்தையும் வெகு நேர்த்தியாகச் செய்து வந்தார். இதன் காரணமாக, ஒரு சாதாரணக் குமாஸ்தா வேலையிலிருந்து முன்னேறி அக்பருடைய பேரரசில் மிக உயர்ந்த பதவியைப் பெற்று விட்டார். அக்பர் அவருக்கு 'ராஜா' என்ற பட்டமும் வழங்கினுர். அக்பரது அவைக்களத்தின் ஒன்பது ரத்தினங்களில் ஒருவராக அவர் மதிக்கப்படுகின்ருர்.

உத்திரப்பிரதேசத்தில், சீதாபுர் மாவட்டத்தைச் சேர்ந்த லஹர்புர் என்னும் கிராமத்தில் பிறந்தவர் தோடர்மல். அந் நாட்களில், அரசாங்க அலுவலர்கள் விவசாயிகளுக்கு மிகுந்த அநியாயம் புரிந்து வந்தனர்; தமது இஷ்டப்படி அவர்கள் வரி வசூலித்தனர். இவ்வாறு விவசாயி

களுக்கு அநீதி இழைக்கக்கூடாது என்று தோடர்மல் எண்ணினர். ஆகவே அரசாங்கப் பொக்கிஷத்தில் மிகுதி யான பணம் சேரவும், அதே சமயத்தில் விவசாய மக்கள் அநியாயத்திலிருந்து தப்புவதற்கும் உரிய ஆலோசனை களைத் தமது மேலதிகாரிகளுக்கு அவர் கூறுவதுண்டு. நாளடைவில் அவருடைய பெயர் அக்பர் பாதுஷாவின் காதுகளை எட்டியது. கி. பி. 1573-ஆம் ஆண்டு அக்பர் குஜராத்தை வென்றதும், அம் மாகாணத்தின் நிலங்களைப் பாதுகாக்கும் பொருட்டுத் தோடர்மல்லையே அனுப்பி வைத் தார். அங்கு, தோடர்மல் வயல்களை நன்கு அளந்து மதிப்பிட்டு, நிலத்தின் தரம், அளவு, விளைவு ஆகியவற்றைக் கணக்கிட்டு, அவற்றுக்குத் தக்கவாறு வரிகளை நிர்ணயித் தார். இரண்டு ஆண்டுகளிலேயே குஜராத்தில் அமைதி நிலைபெற்று விட்டது. விவசாயிகளுக்குத் திருப்தி ஏற்பட் டது. அரசாங்கப் பொக்கிஷத்திலும் போதிய பணம் சேர்ந் தது. இதனால் பெரு மகிழ்ச்சி கொண்ட அக்பர் தமது சாம்ராஜ்யம் முழுவதிலும் உள்ள நிலங்களின் பொறுப்பைத் தோடர்மல்லிடம் ஒப்படைத்து விட்டார்.

தோடர்மல், சாம்ராஜ்யம் முழுவதையும் 182 மண்ட லங்களாகப் பிரித்தார். ஒவ்வோர் மண்டலத்திலிருந்தும் ஆண்டுதோறும் ஒரு கோடி ரூபாய் வரிப்பணமாகக் கிடைத் தது. 'கரோடி' என்று அழைக்கப்பட்ட ஓர் அதிகாரியின் கீழ் ஒவ்வொரு மண்டலமும் அடங்கியிருந்தது. ஆனால் இவ் வதிகாரிகள் பேராசைக்காரர்களாக இருந்தனர். தமது இஷ்டப்படி விவசாயிகளிடம் அவர்கள் வரிவசூல் செய்து வந்தனர். இதுபற்றிய புகார் அக்பருக்குப் போய்ச் சேர்ந்த தும் அவர் தோடர்மல்லை நிதி இலாகாவின் தலைமையதி காரியாக நியமித்தார். வேண்டிய சீர்த்திருத்தங்களை

இயற்றுவதற்கான அதிகாரத்தையும் தோடர்மல்லுக்கு அவர் வழங்கினர்.

தோடர்மல் 'கரோடி' களுக்குக் கடுந்தண்டனை கொடுக்கத் துவங்கினர். பல கரோடிகள் சிறையில் தள்ளப் பட்டனர். சிலர், சிறையிலேயே இறந்தும் விட்டனர். முன்பெல்லாம் நிலங்களைச் சணல் கயிற்றல் அளந்து வந்தனர். இதனல் பெருங்குழப்பம் ஏற்பட்டது. நனைந்து விட்டால் இக் கயிறுகள் சுருங்கிவிடும், உலர்ந்தால் விரிந்து பெரிதாகிவிடும். எனவே அவற்றைக் கொண்டு சரியாக அளக்க இயலாமலிருந்தது. ஆகையால் தோடர்மல் இரும்புப்பட்டை கட்டிய மூங்கில் அளவுத் தடிகளைத் தயாரித்தார். இவைகளால் நிலமெல்லாம் அளக்கப் பெற்றது. கிராம மணியக்காரர்கள், அவரவர் பகுதி நிலங்களை நன்கு அளந்து பதிவுசெய்து, அவற்றின் நகல்களை நிதி இலாகாவுக்கு அனுப்பவேண்டுமென்று உத்தரவிடப்பட்டது. ஆனல், வரி எவ்வளவு விதிப்பது என்ற பிரச்சனையைத் தீர்த்து வைக்க இது மட்டும் போது மானதாக இல்லை. சில நிலங்களின் விளைச்சல் அதிகமாக வும், சிலவற்றில் சாதாரணமாகவும், வேறு சில நிலங்கள் உழவிற்கே தகுதியற்றவையாகவும் இருந்தன. அதனல் நிலங்களைத் தோடர்மல் நான்கு வகையாகப் பிரித்து, "போலஜ், பட்தீ, சாசர், பஞ்ஜர்" என்ற நான்கு பெய ருமிட்டார். முதல் வகை, மிக உயர்ந்த ரக நிலமாகும். அங்கு வருடம் இரு போகம் பயிர் செய்யப்பட்டது. ஒரு முறை பயிர் செய்தபின், அடுத்த ஆண்டு தரிசு போடப் பட்ட நிலங்கள் இரண்டாவது வகையில் அடங்கின. ஒரு தடவை விளைந்தபின்பு மூன்று நான்கு ஆண்டுகள் தரிசாக

விட்டு வைக்கப்படும் நிலங்கள் மூன்ரும் வகையைச் சார்ந்தவை. அவற்றின் விளைவும் மிகக் குறைவே.

பின்பு, எல்லா வகை வயல்களிலும், ஒரு ஏக்கரின் சராசரி விளைவு கணக்கிடப்பட்டு வரி விதிக்கப்பட்டது. முன்பெல்லாம் பண்ட உருவில் வரி ஏற்கப்பட்டு வந்தது. முந்திய பத்தாண்டுகளில் நேர்ந்த தானியங்களின் விலையேற்ற இறக்கங்களைச் சராசரி கணக்கிட்டு, ரொக்க வரி செலுத்தும் வழக்கத்தைத் தோடர்மல் ஏற்படுத்தினர். விவசாயிகள் விரும்பிஞல் தானியமாகவும் வரி கொடுக்கலாமென்று அவர் வசதி செய்தார்.

தோடர்மல் இத்துடன் நின்று விடவில்லை. பஞ்சமோ, வேறு நெருக்கடி நிலையோ நேர்ந்த போது, வரிகளைக் குறைப்பது அல்லது ஒரேயடியாக வஜா செய்வது என்ற வழக்கத்தையும் ஏற்படுத்தினர். இதுவே, 'தக்காவி' கடனுதவி என்று அழைக்கப்படுகிறது.

இதன் விளைவாக, தோடர்மல்லை விவசாயிகள் தெய்வமாகப் போற்றினர். விவசாயிகளுக்குத் தீங்கு செய்யும் அரசாங்க அதிகாரிகளுக்கு அவர் யமனுகக் காட்சியளித்தார்.

அரசாங்க வேலைகளில் முஸ்லிம்களைப் போன்று இந்துக்களும் பங்கு கொண்டு பெரிய பெரிய பதவிகளைப் பெற வேண்டுமென்று தோடர்மல் விருப்பம் கொண்டிருந்தார். எனவே, அவர் வரி வசூல் சம்பந்தமான புத்தகங்களைப் பாரசீக மொழியில் வெளியிட ஆரம்பித்தார். அப்போது இந்துக்களும் பாரசீக மொழி கற்க நேரிட்டது. இதனுல் அவர்களுக்கு லாபம் ஏற்பட்டது. அவர்களுக்கும் பெரிய பெரிய அரசாங்கப் பதவிகள் கிடைக்கலாயின.

அக்காலத்தில் மதத்தை அரசியலிலிருந்து பிரிப்ப தென்பது மிகவும் கடினமாக இருந்தது. ஆனல், தோடர்மல் இவ்விஷயத்திலும் கவனம் செலுத்தினர். இந்துக்கள் மீது மாத்திரம் போடப்பட்டிருந்த ஜஸியா என்ற தலை வரியை அவர் விரும்பவே இல்லை. இதனை அக்பருக்கு எடுத்துக் கூறி அவ்வரியைத் தோடர்மல் நீக்கி விட்டார்.

தோடர்மல் பழுத்த இந்துவாக இருந்தார். இதை அவர் மறைத்ததேயில்லை. தினமும் பூஜை செய்து வந்தார்; பூஜையை முடிக்காமல் எந்த வேலையையும் செய்யவே மாட்டார். இதோடு, காலப்போக்கையும் அவர் உணர்ந்திருந்தார். வீட்டில் அவர் சட்டையும் வேட்டியும் அணிந்திருப்பார். ஆயின், அரசவைக்குச் செல்லும் போது பைஜாமாவும் அங்கியும் அணிந்து கொள்வார். துருக்க ராஜ்யமானபடியால், அவரும் துருக்கர்போல் உடையணிந்து குதிரை சவாரி செய்யத் துவங்கினர். துருக்கரது மொழியைக் கற்பதாலும், அவர்களது உடையை உடுத்துவதாலும் எந்த இந்துவும் துருக்கனுகிவிடமாட் டான் என்று அவர் கூறுவார். தமது மதத்தைப் பேணிக் கொண்டே இந்துக்கள் துருக்கரின் அரசாங்கத்தில் பங்கு கொள்ளலாம் என்பது அவர் கருத்து. அக்பரது தீன் இலாஹி மதத்தை அபுல் பஜல் போன்ற தீவிர முஸ்லீம் களும், வீரபல் போன்ற தீவிர இந்துக்களும் ஆதரித்த போதிலும், தோடர்மல் அதை ஏற்றுக் கொள்ளவில்லை.

தோடர்மல் நிதி இலாகாவை மட்டுமே நிருவகித் தார் என்பது இல்லை. அவர் ஓர் நல்ல படைத் தலைவரும் கூட. மற்றச் சேனுதிபதிகள் தோல்வியுற்ற சமயங்களில்

அச்சண்டைகளை நடத்துவதற்காக அவரை அக்பர் பல முறை அனுப்பியதுண்டு. தலைநகரிலிருந்து வெகு தொலைவில் இருந்ததன் காரணமாக, வங்காளத்தில் அடிக்கடி கலகம் ஏற்பட்டு வந்தது. இறுதியில் அதனை அடக்குவதற்குத் தோடர்மல்லையே அக்பர் அனுப்பினார். தோடர்மல் நான்கு ஆண்டுகள் கடுமையாக உழைத்து வங்காளத்தில் அமைதியை நிலைநாட்டினார். இவ்வாறே அவர் குஜராத்தில் சுல்தான் ஜபரைத் தோற்கடித்து, அங்கு அமைதியை ஏற்படுத்தினார்.

தோடர்மல் அக்பரது படைபலத்தை வலுப்படுத்தினார். அந்நாட்களில் 'மன்ஸப்தாரி' என்ற வழக்கமிருந்தது. சக்கரவர்த்தி மன்ஸப்தார்களை நியமித்து அவர்களுக்குச் சம்பளம் அளித்து வந்தார். மன்ஸப்தார்கள் தமது தரப்பில் குதிரைப் படை, தரைப் படைகளை வைத்திருந்தனர். ஆனால் இவர்கள் யாவரும் சம்பளத்தை நன்கு தின்றுவிட்டு, நேரம் வரும்போது வாடகைக் குதிரைகளைக் கொணர்ந்து எண்ணிக் காட்டி வந்தனர். இதைத் தடுப்பதற்காக குதிரைகளுக்குச் சூடு போடும் வழக்கத்தைத் தோடர்மல் ஏற்படுத்தினார். மன்ஸப்தார்கள், அவர்களது படை வீரர்களின் பெயர்ப் பட்டியல்களை வைத்திருக்க வேண்டும் என்றும் அவர் விதி செய்தார்.

ஆப்கானியர், பட்டாணியருடன் சியாத் சமவெளியில் அக்பர் போர் புரிய நேரிட்டது. அக்பர் நடத்திய யுத்தங்களிலேயே மிகப் பெரியது இதுதான். அக்பர் காஷ்மீரத்தை வெல்ல விரும்பினார். அதற்குமுன் இச்சமவெளியைப் பிடிக்க வேண்டியிருந்தது. இதற்காகத் தமது மிகச் சிறந்த படைத்தலைவனை ஜைன்கானை அக்பர் அனுப்பினார். ஜைன்கானால் ஏதும் முடியவில்லை. உதவிப்

படை வேண்டும் என்று அவன் கோரினன். சுமார் 16,000 படை வீரருடன் வீரபல் அனுப்பப்பட்டார். இப் போரில் பாதிக்கு மேற்பட்ட படை வீரர்கள் கொல்லப்பட்டனர். அவர்களுடன் வீரபல்லும் உயிரிழந்தார். பின்பு தோடர் மல்லை அரசர் அனுப்பினர். தோடர்மல், பகைவரை அடியோடு தோற்கடித்தார். தோடர்மல்லின் சிறந்த முன்னேற்பாடுகளே வெற்றிக்குக் காரணம். மன்ஸப்தாரி வழக்கம் காரணமாகத் தாம் விரும்பிய அளவில் ஏற்பாடுகளைச் செய்ய அவரால் இயலவில்லை என்பது உண்மையே; ஆயினும் படைவீரர்கள் போர்க்களம் செல்லும்போது, அவர்களனைவருக்கும் வேண்டிய ஆயுதங்களும் உணவுப் பொருளும் கிடைப்பதற்கு அவர் திறம்பட ஏற்பாடு செய்திருந்தார். படையை உருவாக்குவது உண்மையிலேயே மிகப் பெரிய காரியமாகும்; ஆனல் படையினர் அனைவருக்கும் உணவுப் பொருள் கிடைக்கச் செய்வது அதை விடப் பெரிய காரியம் என்பதை அவர் உணர்ந்திருந்தார்.

தோடர்மல்லிடம் அக்பர் மிகுந்த நம்பிக்கை வைத்திருந்தார். கி. பி. 1589-ல் அக்பர் காஷ்மீர் யாத்திரை சென்றபோது தமது ராஜ்யப் பொறுப்பையும், தலைநகர்ப் பாதுகாப்புப் பொறுப்பையும் தோடர்மல்லிடமே ஒப்படைத்துச் சென்ருர். தோடர்மல்லிடம் விரோதம் கொண்டிருந்த அபுல் பஜல் முதலியோரும்கூட அவரது துணிவையும் ஆட்சி முறையையும் வெகுவாகப் பாராட்டிப் பேசினர்.

தோடர்மல் முதியவராகி விட்டார். அக்பருடைய அரசாட்சியும் அமைதியாக நடைபெறலாயிற்று. அப்போது அவர் தமது அந்திம காலத்தை ஹரித்வாரத்திலிருந்து கொண்டு ஈசுவர பஜனையில் கழிக்க விரும்புவதாகக் கூறினர். அக்பர் அவரது வேண்டுகோளை ஏற்றுக்

கொண்டார். அவர் ஹரித்வாரத்திற்குப் புறப்பட்டார். ஆனல், புறப்படும் வேளையில் அரசரிடமிருந்து வேருேர் ஆணை வந்தது. கடவுளின் படைப்பான மனிதருக்குப் புரியும் தொண்டே உண்மையான கடவுள் வழிபாடாகும் என்று அந்த ஆணையில் எழுதப்பட்டிருந்தது. இன்னும் சில காலம் தோடர்மல் அரசாங்கப் பணியில் உதவி செய்ய வேண்டுமெனச் சக்கரவர்த்தி விரும்பினுர். தோடர்மல்லும் திரும்பிவிட்டார். ஆனல் பதினெரு நாட்கள் கழிந்ததும், அவரினத்தைச் சார்ந்த ஒருவனுலேயே அவர் கொல்லப் பட்டு விட்டார். முன்பு ஏதோ ஒரு குற்றத்திற்காக அவரிடம் தண்டனை பெற்றவன் அவன். இவ்வாறு கி. பி. 1589ல் தோடர்மல்லின் வாழ்க்கை விளையாட்டு முற்றுப்பெற்றது.

மக்களின் நன்மையையே எப்பொழுதும் பிரதான மாகக் கருதி, சட்ட திட்டங்களில் வெகு உறுதியாக இருந் தமைதான், தோடர்மல்லினுடைய வெற்றியின் இரகசியம். தீவிர இந்துவாக இருந்தபோதிலும் அவர் முஸ்லிம் பேரரசில் மிக உயர்ந்த பதவியைப் பெற்ருர். அரசாங்கப் பணிக்கு ஓர் மனிதனுடைய திறமையைத்தான் அடிப் படையாகக் கருத வேண்டுமே தவிர, அவனது இனத்தையோ மதத்தையோ பார்க்கக் கூடாதென்பதை தம் வாழ்க்கையால் அவர் நிரூபித்துக் காட்டினுர். அக்பரது அரசில் அவர் மற்றவர்களையெல்லாம்விடச் சிறந்த நிர் வாகியாக விளங்கினுர். இவ்வகையில் அவரது பெயர் பாரத நாட்டின் சரித்திரத்திலேயே என்றும் அழியாமல் இருந்து வரும்.



## மஹா ராணு பிரதாப்

வாருங்கள் குழந்தைகளே! இன்று உங்களுக்கு ராஜஸ்தானத்தின் ஓர் பெருமைக் கதையை, மேவாரின் சிறப்புக் கதையை, சித்தூரின் பெருமித வரலாற்றைக் கூறப் போகிறேன். மீரா போன்ற பக்தரையும், பன்ணு போன்ற விசுவாச ஊழியரையும், ராணு பிரதாப் போன்ற தேச பக்த ரையும் நாட்டிற்குத் தந்த அதே சித்தூரின் கதைதான் இதுவும்.

கி. பி. 1540, மே மாதம் ஒன்பதாம் நாள் மிகவும் பாக்கியம் பெற்றது; பாரத நாட்டின் நினைவில் நீங்காமல் விளங்கும் நன்ணுள். ஏனெனில் அன்றுதான் உதயபூரில் ராணு ஸங்காவின் (சங்கிராமசிங்) பேரனும், உதய சிங்கின் நல்மகனுமாகிய மாவீரர் பிரதாப் பிறந்தார்.

துரதிருஷ்டவசமாக, உதய சிங் ஒரு கேளிக்கைப் பிரியராக இருந்தார். அவர் இருபது திருமணங்கள் செய்து

கொண்டார். அவருக்குப் பல பிள்ளைகள் பிறந்தனர். இவர்களில், பிரதாப் சிங், ஜக்மால், சக்தி சிங் ஆகியோர் விசேடமாகக் குறிப்பிடத்தக்கவர்கள். உதய சிங்கின் தீய பழக்கங்களில் இன்னொரு உருவத்தை இதோ பாருங்கள்: தாம் இறப்பதற்கு முன்பு, அவர் தம் மூத்த மகன் பிரதாபிற்குப் பதில் தனது அன்புக் கிழத்தி பட்யானி என்பவளது மகனும், கேளிக்கைப் பிரியனுமான ஜக்மாலையே அரியணையில் அமர்த்தினார்.

உதய சிங்கின் ஆட்சிக் காலத்தில், சிவபூர், கோடா, சித்தூர் முதலிய கோட்டைகள் அக்பருக்கு ஆதீனமாகி, விட்டன. மேவார் ராஜ்யம் மேன்மேலும் க்ஷீணிப்பதைக் காண ராஜபுத்திரர்களால் சகிக்க முடியவில்லை. "உல்லாசப் பிரியனான அரசன் நாட்டிற்கு என்ன சேவை செய்து விடுவான்?" என்று அவர்கள் சந்தாவத் கிருஷ்ணரது தலைமையில் வினவ ஆரம்பித்தனர். அரசனோ செவிடனாயிருந்தான், நாட்டின் குரலுக்குச் செவி சாய்க்கவில்லை. நாட்டின் தீங்கைக் கண்டுகொள்ளாத குருடனாக, நாட்டைக் காக்க முடியாத கோழையாக இருந்தான். அரசன் பிரஜைகளைக் காப்பவனே யொழிய, விழுங்குபவனல்லன் என்பதை அவன் உணர்ந்திருக்கவில்லை.

மேவாரினால் இந்த ஒழுக்கக்கேட்டைப் பொறுத்திருக்க இயலவில்லை.

பிரதாப்பின் மீது எல்லோருடைய நோக்கும் படிந்திருந்தது. ஏன்? பிரதாப் இளமையிலேயே ராணா ஸங்காவின் வீரம், தீக்குளித்த பத்மினியின் தீரம் ஆகியவை பற்றிய கதைகளைக் கேட்டிருந்தார். மேலும் சித்தூருக்கு நேர்ந்த அவல நிலையைத் தம் கண்ணாலேயே கண்டிருந்

தார். பாரதத்தின் பெருமைக் கீதங்களைக் கேள்விப்பட்டிருந்தார். ராஜபுத்திரரது கடமை, நாட்டிற்காக வாழ்வையே அர்ப்பணிப்பதுதான் என்ற கருத்தை அவர் கொண்டிருந்தார்.

மேலும் அவர், 'சித்தூரைத் திரும்ப அடைந்தே தீருவேன்' என்று பிரதிக்ஞை செய்திருந்தார்.

அம்பு எய்தல், வாள் பயிற்சி, குதிரையேற்றம், ஆகியவைதாம் ராணா பிரதாப்பின் குழந்தைப் பருவ விளையாடல்கள்; போர்க்கலையில் அவர் கை தேர்ந்தவராயிருந்தார். இத்தகைய பண்புகள் நிறைந்த பிரதாப் உண்மையிலேயே ஒரு மஹா ராணாவாக விளங்கினார்.

பிரதாப், மேவாரின் அரியணையில் அமர்த்தப்பட்டார். அப்போது அவர் பின்வருமாறு சபதம் செய்தார். "சித்தூரை மீட்பது நமது இலட்சியம். உயிர்ப் பணயம் நமது வழி. கடல் தனது எல்லையை மீறினும் சரி, இமயம் உயர்வை இழப்பினும் சரி, சூரியனே ஒளியை விடினும் சரி, பிரதாப் உயிரையே துறப்பினும் தனது பிரதிக்ஞையிலிருந்து பிறழான். சித்தூர் சுதந்திரமடையும் வரை, நான் பொன் வெள்ளிப் பாத்திரங்களில் உணவருந்தேன், பட்டுப் போன்ற படுக்கையில் துயிலேன், அரண்மனைகளில் வசியேன், விழாவேதும் கொண்டாட மாட்டேன்; போரில் சுய பெருமையைப் பறைசாற்ற மாட்டேன்; என் மீசைகளையும் முறுக்கிக் கொள்ளமாட்டேன்."

மேவாரின் மலைகளையே கோட்டையாகவும் ஆங்குள்ள குகைகளையே அரண்மனையாகவும், ராணா எண்ணினார் என்பதற்குச் சரித்திரம் சான்றாகும். இலைகளைத் தட்டாகவும், குளங்களைக் கிணறாகவும், பாறைகளைத்

தலையணையாகவும், சந்திரனை விளக்காகவும், ஆகாயத்தையே மேற்கூரையாகவும் கொண்டு நாட்டின் பெருமையையும் மதத்தின் மாட்சியையும் இனத்தின் மானத்தையும் காத்து நின்று, ராணா தம் வாழ்நாளைக்கழித்து வந்தார்.

பிரதாப்பைப் பற்றிப் பின்கண்ட கதை வழங்கி வருகிறது: ஷோலாப்பூர்ப் போரில் வெற்றி பெற்றதும், அக்பரின் பெரிய சேனைத் தலைவரான மான்சிங், "சரி, இப்போது பிரதாப்பைச் சந்திப்போம். ஒரு வேளை, பிரதாப் எனது அந்தஸ்தையும் கௌரவத்தையும் கண்டு என் சொல் கேட்டு அக்பருடன் நட்புக் கொண்டாலும் கொள்ளலாம்" என்று எண்ணினராம். உடனே பிரதாப்புக்கு அவர் தூது அனுப்பினர்.

மான் சிங்கின் செய்தி கிடைத்ததும், அவரை உபசரிக்க உதயசாகர் ஏரி வரை பிரதாப் வந்தார். பிரதாப்பிற்கு மான்சிங் பலவாறு அறிவுறுத்த முயன்றுர் என்று சரித்திர ஆசிரியர்கள் கூறுகின்றனர். " நிலைமையை உணருங்கள். அக்பர் இந்துக்களின் நன்மையில் நாட்டங்கொண்டவராகக் காண்கிறுர். தமது திருமணத்தை அவர் இந்து முறையிலேயே நடத்திக் கொண்டார். அவர் ஜஸியா வரியை ரத்து செய்து விட்டார். பசுவதைத் தடைக்கு முயன்று வருகிறுர். தமது அரசவையில் தோடர்மல் போன்ற கணித சாஸ்திரிகள், பிருதிவிசிம்மர் போன்ற கவிகள், வீரபல் போன்ற அறிஞர்கள், முதலிய இந்துக்களுடன் இருந்து அவர் இந்துக்கள் போலவே ஆகிவிட்டார். எனக்கோ, அவர் முற்பிறப்பில் இந்து என்றே தெரிகிறது. எனவே தாங்கள் நட்புக் கொள்வதற்கு, அவர் தகுந்தவரே. இல்லையெனில், அவருடன் எப்போதும் போர் நிகழ்த்தி நம்மை நாமே

அழித்துக் கொள்ள வேண்டியதுதான்." என்று மான்சிங் சொன்னர்.

இதைக் கேட்டு ராணு கூறினர்: "எது நேரினும் சரி, நான் எனது பாதையினின்றும் பிறழ மாட்டேன். நமது புராதனப் பெருமையை அழித்துவிடக்கூடிய இவ் வாதம் எனக்குப் புரியவேயில்லை."

ராணு பிரதாப்பின் விடையைக் கேட்டதும் மான் சிங் வாயடைத்துப் போனர். எனினும் மஹா ராணுவின் விருந் தழைப்பை அவர் ஏற்றுக்கொண்டார்.

அரசாங்க ஆடம்பரத்துடன் தங்கம், வெள்ளிப் பாத்திரங்களில் உணவு பரிமாறப் பெற்றது. மான் சிங் வந்ததும், தம்மை வரவேற்கப் பிரதாப்பின் பிள்ளை அமர் சிங் மட்டுமே இருப்பதைக் கண்டு திகைத்தார்.

"மஹா ராணு என்னேடு உணவருந்த மாட்டாரா?" என்று அவர் கேட்டார். அமர்: மகாராஜ்! தலைவலி காரணமாக அவர் வர இயலவில்லை. மான்: (கம்பீரமாக) அவரது இந்தத் திடீர்த் தலைவலியைச் சிறிது புரிந்து கொண்டேன்.

அமர்: அவர் கட்டுப்பாடு உள்ளவர் மகாராஜ்!

மான்: அப்படியானல் நானும் கட்டுப்பாடுள்ள வன்தான்.

இதற்குமேல் ராணு தெளிவாகவே சொல்லியனுப்பி விட்டார்; "உண்பதிலிருந்து திருமணம்வரை துருக்கருடன் எவர் உறவு கொண்டு விட்டாரோ, அவரோடு உணவருந்து வது என் குலப் பெருமைக்கு அவமானம்."

உணவிற்கு அவமானம் செய்யக் கூடாதென, மான் சிங் இரண்டு மூன்று சோற்றுப் பருக்கைகளை எடுத்துத் தன் தலைப்பாகையில் வைத்துக்கொண்டு செல்லும்போது கூறினார்: "பிரதாப்! நான் உனது மானத்திற்காக எனது மானத்தையே முழுதும் விட்டுக் கொடுத்தேன். இனி உன்னை அவமானப் படுத்தவில்லையெனில், என் பெயர் மான் சிங் அல்ல."

பிரதாப்: அடுத்த தடவை உன்னைப் போர்க்களத்தில் வாள் முனையில் வரவேற்பேன்.

ஆனால், சரித்திர ஆசிரியர்கள் இந் நிகழ்ச்சியை உண்மையெனக் கருதவில்லை. கட்டுக் கதைகள் போன்ற இம்மாதிரியான மிகைப்பட்ட நிகழ்ச்சிகள் சரித்திர பூர்வமாக நிகழ்ந்தவை என்பதற்குச் சான்றில்லை. பல்லாண்டுகளுக்குப் பின்பு பிரதாப் சம்பந்தமாகத் தோன்றிய எத்தனையோ கற்பனைக் கதைகளுள் ஒன்றாகவேதான் இதனையும் மதிக்கவேண்டும் என்று அவர்கள் கூறுகின்றனர்.

இதற்கிடையே மற்றுமோர் சம்பவம் நடந்தது. வசந்த காலத்தில் 'அஹரியா' என்ற விழாவின்போது, மஹா ராணாவும் சக்தி சிங்கும், வேட்டைக்குச் சென்றனர். இருவரும் ஒரு பயங்கரமான காட்டுப் பன்றியைக்கொன்றனர். இதில் வாக்குவாதம் ஏற்பட்டுவிட்டது. பிரதாப், தமது அம்பே முதலில் தைத்ததாகக் கூறினார்.

சக்தி: பன்றி செத்தது என் அம்பினால்தான். தாங்கள் உரிமை கொண்டாடுவது முற்றிலும் தவறு.

"பார் சக்தி சிங்! பிரதாப்பின் கோபாக்கினியில் உன்னை நீயே இரையாக்க முயலாதே" என்று பிரதாப் கர்ஜித்தார்.

சக்தி: பிரதாப் தமது பிரதாபத்தில் செருக்குக் கொண்டிருந்தால், சக்தி சிங்குக்கும் தனது சக்தியில் செருக்கு உண்டு.

வாள்கள் உறைகளினின்றும் வெளியே வந்தன. அப்போது, ஒரு ராஜகுரு அவ்விடம் வந்து சேர்ந்தார். அவர் எவ்வளவோ அறிவுறுத்தியும் சக்தி சிங் "உறையிலிருந்து வாள் வெளியே வந்து விட்டால், ரத்தம் குடிக்காமலிராது" என்று கூறிவிட்டான்.

வாள்கள் இரண்டும் உராய்ந்தன. இருவருக்கும் மத்தியில் ராஜகுரு புகுந்து விட்டார். ராஜகுருவின் உயிர்த் தியாகத்தால் வாள்களின் தாகம் அடங்கிற்று. போர் ஓய்ந்தது. ஆனால் ராணா, சக்தி சிங்கிடம் கூறினார்: "இவ்வறிஞரது கொலைக் குற்றம் உன் தலையில் வீழ்ந்துள்ளது. நான் உனக்கு மரண தண்டனை அளிக்கவேண்டும், இருப்பினும் மன்னித்துவிடுகிறேன். போ, இப்போதே மேவார் ராஜ்யத்தின் எல்லையைத் தாண்டிப் போய்விடு."

"மன்னிப்பு! இது மிகவும் கசப்பான மன்னிப்பு பிரதாப்! நினைவில் வைத்துக் கொள், என்றேனுமோர் நாள் துணையிழந்து நீ தனித்து இருக்கும்போது உனக்கு இது திருப்பித் தரப்படும்" என்று கூறிவிட்டு, சக்தி சிங் டில்லி நோக்கிச் சென்று விட்டான்.

பிரதாப் பரந்த மனம் படைத்தவரல்லர் என்று இதிலிருந்து நாம் எண்ணிவிடக் கூடாது. அவரது உதார உள்ளத்தைக் காட்டும் ஒரு கதையையும் கேளுங்கள்.

உதய சிம்மர் ஒரு நாள் ஒரு வாளின் கூர்மையைப் பரீட்சிக்க எண்ணி "இதை நூல்கண்டின்மீது வீசு," என்று ஒருவனிடம் கூறினார்

ஐந்தே ஆண்டு நிரம்பியிருந்த சக்தி சிங்கினால் இதை கேட்கப் பொறுக்கவில்லை. "எங்காவது நூல்கண்டில் வாளினைச் சோதிப்பார்களா? கொண்டு வாருங்கள்; இதோ இதன் கூர்மையைக் கண்டு விடுகிறேன்," என்றான் அவன்.

உடனே, வாளினால் அவன் தனது விரலை வெட்டி விட்டான். உதய சிங் இதைத் தமக்கு அவமானமாகக் கருதி, இது பையனது அடங்காச் செயல் என்றும் எண்ணினார்- அப்போதே அவர் சிறுவனது தலையை வெட்டி விட உத்தரவிட்டார். எல்லோரும் திடுக்கிட்டனர். சக்தி சிங் தலை குனிந்தான். சாலும்பரா அரசர்க்குக் குழந்தைகள் இல்லை. அருகிலிருந்த அவர், "மகாராஜ்! தாங்கள் பல தடவை மகிழ்வுற்று எனக்குப் பரிசு கொடுக்க விரும்பினீர்கள். ஆனால் நானேதும் பெற்றுக்கொள்ளவில்லை. இன்று இச் சிறுவனை எனக்குத் தானம் செய்து விடுங்கள்," என்று வேண்டினார்.

சில ஆண்டுகள் கழிந்த பின்னர், அவ் வரசருக்குச் சொந்த மகனே பிறந்தான். அப்போது சக்தி சிங் அவருக்குப் பாரமாகிவிட்டான். பாருங்கள், இங்குதான் ராணா பிரதாப்பின் பரந்த உள்ளத்தைக் காண்கிறோம். சக்தி சிங்கைத் தருவிக்க அவர் ஆளனுப்பினார். "பிரதாப்பிடம் அவர் தம்பியைத் திரும்ப அளித்துவிடுங்கள்," என்று சாலும்பரா அரசரிடம் அவர் கூறினார்.

மான் சிங் அவமானமடைந்ததையும், சக்தி சிங் விரட்டப்பட்டதையும் அக்பர் அறிந்து, ராணா பிரதாப்பை அவமானப்படுத்தத் தீர்மானித்தார். மான் சிங்கின் தலைமையில், முகலாயப் படையினரும், அக்பரின் ராஜ

புத்திர வீரரும் மேவாரின்மீது படையெடுத்து விட்டனர். ராணுவிடம் மிகக் குறைவான வீரர்களே இருந்தனர். ஹல்தீகாடியில் பயங்கரமான போர் நடந்தது. ராணுவின் ராஜபுத்திரர்கள் முகலாயரைக் கடுமையாகத் தாக்கினர்.

இப் போரைப் பற்றி ஒரு கதை வழங்குகிறது. ராணு கடிவாளத்தைச் சுண்டியதும் சேதக் என்ற அவரது வீரக் குதிரை முகலாய இளவரசன் ஸலீமின் யானைமீது பாய்ந் ததாம். அதன் முன்னங்காற் குளம்புகள் யானையின் மத்த கத்தில் பட்டதும் மஹாராணு ஸலீமின்மீது ஈட்டியை எறிந் தார். ஸலீம் அம்பாரிக்குள் குனிந்து கொண்டான். யானை அவனைச் சுமந்துகொண்டு ஓட்டமெடுத்தது. யானை யின் துதிக்கையடியினுல் சேதக் காயமடைந்திருந்தது. மகாராணு திரும்பிக் கொண்டிருந்தபோது இரு முகலாயர் கள் அவரைப் பின்தொடர்ந்தனர். அவர்களைச் சக்தி சிங் கண்டுவிட்டான். சகோதர பாசம் அவனது உடல் முழு வதும் பாய்ந்து துள்ளியது. சகோதராபிமானம், தன் கட்சிக்கே விரோதம் செய்யத் தூண்டிவிட்டது ; அவனுல் வாளாவிருக்க முடியவில்லை. ஓரிமைப் பொழுதில் அவ் விரு முகலாயர்களையும் நான்கு துண்டுகளாக வெட்டிவிட்டான். சக்தி சிங் மேவாரை, 'அம்மா' என்றழைக்க விரும்பினுன். பிரதாப் 'அண்ணு!' என்ற குரலைக் கேட்கத் துடித்தார். பிரிந்திருந்த உள்ளங்கள் ஒன்று கூடின. ஹல்தீகாடி யிலிருந்து இரண்டு மைல் தொலைவிலுள்ள 'பலீசா' என்ற கிராமத்தின் அருகில் ஓர் ஓடையைத் தாண்டும்போது, சேதக் வீழ்ந்து உயிரை விட்டு விட்டது. அந்தவிடத்தில் பிரதாப் தமது அன்புக்குரிய சேதக்கின் நினைவாக ஒரு மேடை அமைத்தாராம். முதலில் அமைத்த மேடை இப் போது இல்லை ; ஆனுல், அவ்விடத்தில் ஒரு மண்மேடை

இன்றுமுள்ளது. அதன்மீது ஒரு குதிரை வீரனது உரு வமும் அமைக்கப்பட்டுள்ளது.

முகலாயப் படையில் சேர்ந்திருப்பினும், சக்தி சிங் முகலாய வீரரைக் கொன்று அண்ணனுக்கு உதவினன் என்ற செய்தி நாடகத் தன்மை நிறைந்ததுதான் ஆயினும், நம்பத் தக்கதென்று கூற இயலவில்லை. இந்தப் போரின் போது சக்கரவர்த்தியின் படையுடன் சக்தி சிங் சென்றிருந் தால், அபுல் பஜல் முதலிய முஸ்லிம் சரித்திர ஆசிரியர்கள், முகலாயப் படையுடன் சென்ற பிரபலமான ராஜபுத்திரர் களுள் சக்தி சிங்கின் பெயரையும் குறிப்பிடாமல் இருந் திருக்க மாட்டார்கள்.

ராணுவுடன் சேர்ந்து சக்தி சிங்கும் இப்போது முகலாயர்க்குப் பெருந் தொந்தரவைக் கொடுக்கத் துவங் கினன். ஹல்தீகாடியின் பயங்கரப் போர் முடிவுற்றது. ராணு சோதா மலைத்தொடரில் படைவீட்டை அமைத்துக் கொண்டார். போர் நடந்த போது, வெற்றியில் நம் பிக்கையை இழந்ததும் ராணு பின்வருமாறு ஆணையிட் டிருந்தார்: "பயிர்களையெல்லாம் எரித்து விடுங்கள். வயல்களை யெல்லாம் அழித்துவிடுங்கள். பகைவர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள் கிடைத்து அவர்கள் அதிக வலிமை பெற்றுவிடக் கூடாது."

இப்போது பிரதாப்பிடம் எஞ்சியிருந்த படையினரும் பசி தாளாமல் துன்புறும் நிலை நேர்ந்து விட்டது. ராணு வீட்டிலுமே புல்லாலான ரொட்டிகள் சுடப்பட்டன. அரண் மனையையும் சுகபோகங்களையும் துறந்து, இந்தப் புல் ரொட்டியை உண்ண வேண்டுமென்று அவருக்குத் தலை விதி இருந்தது. அதுவும் கிடைக்காத நிலையும் பின்னர்

வந்துவிட்டது. ஓர் நாள் மகாராணி பிரபாமயி தனது சிறு பெண்ணிற்குப் புல் ரொட்டியைக் கொடுத்திருந்த போது, ஓர் கடுவன் பூனை அதைப் பறித்துக் கொண்டு ஓடி விட்டது. குழந்தையால் பசி தாங்க முடியவில்லை ; "பசிக்கிறது அம்மா ! எனக்கு ரொட்டி தா அம்மா !" என்று அழத் துவங்கிற்று.

பிரதாப்பும் மனிதர் தானே ? கண்ணீரை அடக்க முடியவில்லை. இரு துளிகள் கீழேயும் சிந்தின. என்னதானிருப்பினும் அவர் ஒரு தந்தை. அவரது மார்பினுள்ளும் இருதயமிருந்தது ; அவ் விருதயத்தில் அன்பு இருந்தது. மஹாராணு அப்போதே அக்பருக்கு ஒப்பந்தக் கடிதம் எழுதினுர். "நான் காட்டுப் பிச்சைக்காரனுகவே மாறி விடுவேன். ஆனுல், இந்த மலர் போன்ற குழந்தைகள் காட்டிலே அலையுமாறும், பசியால் தவிக்கவும், தாகத்தால் புலம்பியழவும் என்ன பாவம் செய்தனர் ?" என்று அவர் குறிப்பிட்டார்.

ஒப்பந்தக் கடிதம் அக்பருக்குப் போய்ச் சேர்ந்தது. அக்பர் கண்ட கனவு நனவாயிற்று.

பிருதிவிராசர் அக்பரது அவைக்களக் கவிஞர். அவர் பிரதாப்பின் கடிதம் பற்றிய செய்தியறிந்ததும் திகைத்து விட்டார். அவரால் பொறுக்க முடியவில்லை. இமயம் தரை நோக்கித் தலைதாழ்த்தி, புழுதி மண்ணுடன் உடன்படுக்கை செய்து கொள்வதா ? ராஜஸ்தானின் மதிப்புப் பறி போவதை அவரால் காணவே முடியவில்லை. அவர் ஓர் உபாயத்தை எண்ணினுர். அரசரிடம் கூறினுர் : "பேரரசே ! இக் கடிதம் பிரதாப் எழுதியிருப்பாரென நான் நம்பவில்லை. இது பகைவரது வஞ்சனை. நான் அவரது

கையெழுத்தை நன்கு அறிவேன். இது அவர் கையெழுத் தல்ல.''

அக்பரது கனவு சிதறி விட்டது, பிருதிவிராசர். பிரதிக்கினை புரிந்தார். ''நான் என் கவிதைத் தூண்டு கோலால் கைதாழும் பிரதாப்பைக் காப்பேன்.''

பிரதாப்பிற்கு அவர் கடிதம் அனுப்பினர். தூங்கிய சிங்கம் விழிப்புற்றது. மறுபடியும் தன்மானம் காக்கும் ஆசை அவர் மனத்தில் அலைமோதத் துவங்கிவிட்டது. ''பிருத்வி, நீர் வழிகாட்டியதற்கு நான் நன்றி செலுத்துகி றேன்,'' என்று அவர் மனத்துக்குள் சொல்லிக் கொண்டார்.

பிரதாப் பதிலனுப்பினர்: ''பிருத்வி! உமது கடிதத்திற்கு முழு விடை பேனுவால் அல்ல, வாளினுல் அளிப்பேன்.''

நாட்டுப்பற்று பிள்ளைப் பாசத்தை வென்றுவிட்டது. படைதிரட்டும் பெருந்திறமை கொண்ட பிரதாப், மறுபடியும் வேடுவ இனத்தாரை ஒன்றுசேர்த்து, அவர்களுக்குப் படைப் பயிற்சி அளித்தார். மேவார் அமைச்சர் பாமாஷா தம் வாழ்க்கை முழுவதும் ஈட்டிய செல்வமனைத்தையும் ராணுவின் பாதங்களில் அர்ப்பணம் செய்து விட்டார். சக்தி சிங்கும் வேண்டிய மட்டும் பணம் திரட்டி மஹாராணுவிற்கு, காணிக்கை செலுத்தினன். அமர சிங்கும் இப்போது போர்க்களத்தில் குதிக்கத் தகுந்த பிராயம் பெற்றிருந்தான். மஹாராணுவின் அழைப்பின் பேரில் எத்தனையோ அரசர் கள் தமது படைகளையும், செல்வத்தையும் ஒப்படைத்தனர்.

அந் நாட்களில் நிகழ்ந்த இன்னொரு நிகழ்ச்சி பிர. தாப்பினுடைய நல்லொழுக்கத்தின் ஓர் ஒளிக்கதிர், அவரு டைய உள்ளப்பாங்கிற்கோர் எடுத்துக்காட்டு. மஹாராணு

பிரதாப்பின் மகன் அமர சிங், ரஹீம்கான் கானுவின் படை வீட்டை முற்றுகையிட்டான். மது போதையில் மூழ்கிக் கிடந்த முகலாயர்களை கறிகாய் வெட்டுவது போன்று எமன் வாயில் தள்ளினன். இது முகலாயர்களுக்கு அவர்களுடைய பாணியிலேயே அளித்த விடையாக அமைந்தது. திரும்பும் போது அமரன் தன்னுடன் பலவகை ஆயுதங்களை எடுத்து வந்ததுடன், ரஹீமின் மனைவி ஜீனத் என்பவளையும் கைது செய்து கொணர்ந்தான். பிரதாப் இச் செய்தியை அறிந்த துமே கடுஞ்சினம் கொண்டு முழங்கினர்: "அமர்! இவ் வாறு செய்வதற்கு முன்பே நீ இறந்திருந்தால் நன்ருக யிருந்திருக்கும். உனது விவேகம் ஓடியொளிந்து விட்டதா? ஒரு பெண்ணைக் கைது செய்யும்போது நீ வெட்கப் படவில்லையா? சொல், ஏன் மௌனமாயிருக்கிருய்?"

அமர் பதிலிறுத்தான்: உண்மைதான்; நான் பெருந்தவறு செய்து விட்டேன். ஆனல், இவையனைத் தையும் நான் முகலாயருக்குப் பாடங்கற்பிக்க எண்ணியே செய்தேன். அவர்கள் நமது பெண்மணியிடம் எவ்வளவு தீய முறையில் நடந்து கொண்டனர்? இப்போது அவர்க ளும், தமது பெண்மக்களை இழந்து மனம் எவ்வாறு துடிக் கின்றது, எப்படி வெதும்புகிறது என்பதை உணர்வார்கள்."

அப் பெண்ணை ரஹீமின் இருப்பிடத்தில் மரியாதை யுடன் கொண்டு விடும்படி பிரதாப் உத்தரவிட்டார்.

இதன் பின்னர் ஒன்றன் பின் ஒன்ருகப் பல போர்கள் நடந்தன. சிறிது சிறிதாக, மஹாராணு 32 கோட்டைகளை வென்ருர், ஆனல் சித்தூர்க் கோட்டையைக் கைப்பற்று வதற்கு முன்பே, அவர் விண்ணுலகமெய்திவிட்டார்.



# தான்சேன்

பெருமைவாய்ந்த பாடகர் தான்சேனின் பெயர் பாரத நாட்டில் மிகமிகப் பிரசித்தி பெற்றுள்ளது. இவரது முன்னோர்கள் லாகூரிலிருந்து (பஞ்சாப்) வந்து டில்லியிலும், குவாலியரிலும் குடியேறியிருந்தனர். தான்சேன் கி. பி. 1506-ல் குவாலியரிலிருந்து ஏழு மைலில் உள்ள 'பேஹட்' என்ற கிராமத்தில் பிறந்தார். (சிலர் இவர் கி. பி. 1532 அல்லது 1520-ல் பிறந்ததாகக் கருதுகின்றனர்.) அவரது தகப்பனுர் பெயர் மகரந்த பாண்டே என்பது. சிலர் அவரை மிச்ரா என்றும் அழைத்து வந்தனர். தான்சேனுக்கு இளமையில் ராம்தானு, திரிலோசன், தந்நாமிச்ரா, தன்சுக் முதலிய பல பெயர்கள் இருந்தன. பின்னுளில் அவர்,

அதா அலிகான் எனவும், மியா தான்சேன் எனவும் பிர சித்தியடைந்தார். தான்சேனின் பெரிய தந்தையாரான பாபா ராம்தாசர் ஓர் பெரிய பாடகராகவும், பிருந்தாவன வாசியான சுவாமி ஹரிதாசரது சீடராகவும் இருந்தார். தான்சேன் இளமையிலேயே குவாலியரில் அவரருகி லிருந்து சங்கீதம் கற்று வந்தார். குவாலியரில் வசித்த பீர்கௌஸ் முகமதுக்கும், ராமதாசருக்கும் நெருங்கிய நட்பு இருந்தது. பீர்சாகிப் பெரிய இசையன்பராக இருந்தார். சுவாமி ஹரிதாசருடனும் அவருக்கு நல்ல பழக்கம் இருந்தது. அவர் சிறுவன் தான்சேனது அற்புதமான நுண்ணறிவில் மிகுந்த ஈடுபாடு கொண்டார். அவர் கூறிய யோசனைப்படிதான் ராம்தாசர் தன்சுக்கைப் பிருந்தாவனத் திற்கு ஹரிதாசரிடம் அனுப்பிவைத்தார். அங்கு, தன்சுக் பன்னிரண்டு ஆண்டுகள் வரை நாதப்பிரம்ம யோகியான சுவாமி ஹரிதாசரிடம் பாடல்களைக் கற்றார்; மற்றும் சாத்திரம், இலக்கியம் ஆகியவற்றையும் பயின்றார்.

சுவாமி ஹரிதாசர் தம்காலத்தில் மிகச் சிறந்த சங்கீத ஆசிரியராகவும் கவியாகவும் இருந்தார். அவர் ஸ்ரீ கிருஷ்ணனிடம் ஒப்பற்ற பக்தி கொண்டிருந்தார். பிருந்தாவன நகரத்தில் அவரது ஆசிரமம் இருந்தது. அங்கு, அறிவுத்திறன் பெற்ற நன்மாணக்கர்களுக்கு சாஸ்திரீய சங்கீதத்தை அவர் போதித்து வந்தார்.

பன்னிரண்டு ஆண்டுகள் வரை தொடர்ந்து பயிற்சி பெற்ற பின்பு, குருவின் ஆணை பெற்று, தான்சேன் பெயர் பெற்ற சங்கீதத் தலங்களுக்கு யாத்திரை கிளம்பினார். பல இடங்களிலுள்ள இசைக் கலைஞருடன் கருத்துப் பரிமாறிக்

கொண்டே இளவேனிற் பருவத்தில் புந்தேல்கண்டின் தலை நகர் ரீவா நகரத்தை அடைந்தார். ரீவாவின் மகா ராஜாவான ராமசந்திரர், சுவாமி ராமதாசரின் பக்தர், தான்சேன் அவரைச் சந்திக்கச் சென்றபோது, அரசர் அரண்மனைப் பூஜையறையில் இருந்தார். வாயில் காப்போன், அரசரிடம் தான்சேன் வந்திருப்பதை அறி விக்கத் தயக்கம் காட்டினான். அவ்வமயம் தான்சேன் அரண்மனைக்குப் பின்பக்கமுள்ள சோலையிலமர்ந்து, தமது குரு இயற்றிய 'நாத் கட்கட்' என்ற துருபதத்தை இந்தோள ராகத்தில் பாட ஆரமபித்தார். அக் குரல் அரண்மனையை எட்டியதும், அரசர் தாகமுள்ள மானைப் போன்று வச மிழந்து, காலணிகூட அணியாமலே சோலைக்கு ஓடோடியும் வந்தார். வாயில்காப்போர் செய்வதறியாமல் திகைத்து நின்றனர். அப்போது அரசர் 'அருமை நண்பரே!' என்று சொல்லி தான்சேனை மார்புறத் தழுவிக் கொண்டார். அரசருக்குண்டான ஆனந்தத்திற்கோர் அளவில்லை. அவர் கண்களில் அன்புக் கண்ணீர் முட்டிற்று. இருவருக்கும், தாம் பிருந்தாவனத்தில் ஹரிதாசரது ஆசிரமத்தில் சந்தித்த கடந்த காலத்தின் நினைவு வந்தது. அரசர் தன்சுக்கைத் தக்க மரியாதையுடன் அரண்மனையில் தங்க வைத்தார். இப்போது அரண்மனை இசைமாளிகையாகிவிட்டது. அரசரது அன்புப் பிடிவாதத்தால் தன்சுக் ரீவாவைத் தமது தலைமையிடமாக்கிக் கொள்ளச் சம்மதித்தார். அவரது மனங்கவரும் இசையில் மயங்கி, அரசர் அவரைத் தமது அரசாங்கத்தின் தலைமைப் பாடகராக ஆக்கி, அவரது பெயரையும் மாற்றி, 'தான்சேன்' என்ற பெயரைப் பறை சாற்றினார். தமது ஐம்பதாவது வயது வரை தான்சேன்

சுகமாக ரீவாவிலேயே இருந்தார். அரசாங்க சம் மானத்தையும், சுகத்தையும் பெற்றிருந்த போதும், தான்சேனுடைய இசை வழிபாட்டிற்கு ஒருவித இடை யூறும் நேரவில்லை. சுவாமி ஹரிதாசரது தொண்டிலே ஈடுபட்டிருந்தமை காரணமாக அவரிடம் கடவுள் வழிபாடும் பக்தியும் பதிந்து போயிருந்தன. தான்சேன் கோவில் களுக்குச் சென்று பக்தப் பெருமக்களுக்குத் தமது அழகிய இசையை வாரி வழங்கினர். ஆண்டவனைத் துதிக்கும் பல துருபத கீதங்களை அவர் இயற்றினர்.

ஐம்பதாண்டு வயதுவரை தான்சேன் ரீவாவில்தான் இருந்தாரென்றாலும், அவரது மனங்கவர் இசையின் பிரசித்தி எங்கணும் பரவியிருந்தது. அக்பர் பாதுஷா அவரது புகழைக் கேள்விப்பட்டதும், ரீவா அரசருக்குக் கடிதம் எழுதினர். "தான்சேன் போன்ற இசைக் கலைஞர் ஐம்பது வயதுவரை தங்களவையில் இருந்தாயிற்று. தாங்கள் அவரது அழகிய இசையை வருடக் கணக்காகக் கேட்டிருக்கின்றீர்கள். இத்தகைய கலைஞர் சக்கர வர்த்தியின் அவைப்புலவர் ஆகவேண்டும். இதன் மூலமே அவரது ஒளி பெருகும். எனவே, கட்டாயம் தான்சேனை அனுப்பிவையுங்கள்."

இக் கடிதத்தைப் படித்ததும் ரீவா அரசருக்கும் தான் சேனுக்கும் இடி வீழ்ந்தது போலாகி விட்டது. எவர் தாம் ஓர் அரசராக இருப்பினும் ஒரு கலைஞரை அன்புச் சகோதர ராக மதித்தனரோ, எவரை அண்டியிருந்து அக் கலைஞர் தமது ஐம்பதாவது வயது வரை கலைவழிபாடு செய்து வந்தனரோ, எவ்வரசரது பிரஜைகளும் அக் கலைஞரைத்

தெய்வமெனப் போற்றி அவரது கலையைப் பக்தியுடன் பூஜித்து வந்தனரோர், அத்தகையவரை என்றுமே பிரிந்து விடுவது ஒரு கல்நெஞ்சனுக்கு ஒருவேளை சாத்தியமாகலாம்; ஆனால் இதயம் படைத்த கலைஞருக்குச் சாத்தியமாகுமோ? இச் செய்தி மக்களிடையே பரவிற்று. புந்தேல்கண்டின் தலைநகரது மங்களமான சூழ்நிலை துயரம் நிறைந்ததாக மாறிவிட்டது. தான்சேன் திடீரென உடல் நலம் குன்றி விட்டாரென கெட்ட செய்தியும் நகர் முழுவதும், மறுதினமே பரவிவிட்டது. அரசாங்க வைத்தியர், கொஞ்சகாலமாகவே தான்சேனது உடல்நிலை சரியாக இல்லையென்று செய்தி கூறி, அக்பரின் தூதுவரை மரியாதையுடன் அனுப்பி வைத்தார். "நான் அவருக்குச் சிகிச்சை அளித்து வருகிறேன். உடல்நிலை தேறியதும் ரீவா அரசர் தான்சேனை, உடனே சக்ரவர்த்தியினது பணிக்காக ஆக்ரா வுக்கு அனுப்பிவைப்பார்," என்று வைத்தியர் தெரிவித்தார்.

தூதுவன் ஆக்ரா சென்று அக்பர் பாதுஷாவிடம், ரீவா அரசரது பதிலையும், ரீவா மக்களுடைய துயர நிலையை யும் எடுத்துரைத்தனன். பேரரசின் பிடிவாதமோ மிகவும் பிரபலமானது. சிலகாலம் கழிந்ததும் அக்பர் வீரபல்லின் யோசனை பேரில் ரீவா அரசருக்கு ஒரு பெரிய ராணுவ அதிகாரி வாயிலாகக் கடிதம் அனுப்பினர். அதில் கண் டிருந்தது: "தான்சேனது பாட்டைக் கேட்கச் சக்ரவர்த்தி யும் அவையினரும் மிகுந்த ஆவல் கொண்டுள்ளனர். அவரது உடல்நிலை இப்போது சரியாகியிருக்குமென நம்புகிறோம். இன்னும் உடல்நிலை குன்றியே இருந்தால் ஆக்ராவிலுள்ள அரசாங்க வைத்தியர் அவரைப் பூரணமாகக் குணமாக்கி விடுவார். ரீவா அரசரும், அவரது மக்களும்

தான்சேனை மிகவும் நேசிக்கின்றனர் என்பதை நாம் அறிகிறோம். தான்சேனுக்கு எப்பொழுதும் ரீவா சென்றுவரச் சுதந்திரமுண்டு. தான்சேனும் தாம் பாரதச் சக்ரவர்த்தியின் ஆஸ்தான வித்வான் என்று அழைக்கப்படுவதை ஒரு கௌரவமாகக் கருத வேண்டும். ரீவா அரசர் இந்தியாவின் பேரரசரது புகழை ஓங்கச் செய்து மகிழ்ச்சி யடைவதே அவருக்குத் தகுந்த செயலாகும்.''

அக்பர் பாதுஷாவின் இந்த ஆணையைப் படித்தபின், ரீவா அரசர் தான்சேனுடனும், மந்திரிகளுடனும் வெகு நேரம் ஆலோசனை செய்தார். தான்சேன் ரீவா அரசரையும், அவருடைய மக்களையும் சங்கட நிலையிலிருந்து பாதுகாப்பதற்காக ஆக்ரா செல்லச் சம்மதித்து விட்டார்.

தான்சேன் விடைபெற்ற காட்சி இதயத்தைப் பிளப்பதாக அமைந்தது என்று கூறுகின்றனர். ஒரு கிராமத் தலைவரும் கிராமவாசிகளும் தலைவரின் பெண்ணைப் பல்லக்கில் ஏற்றி அனுப்பும்போது அழுவதுபோல் புந்தேல் கண்டின் வேந்தரும், தலை நகர மக்களும் அப்போது அழுதனராம். பல்லக்கில் அமர்ந்திருந்த தான்சேன் இவற்றையெல்லாம் காணப்பொருமல் தம் கண்களை மூடிக்கொண்டார். கொஞ்சநேரமானதும் பல்லக்கு சற்றே நின்றது. தான்சேன் வெளியே எட்டிப் பார்த்தார். பார்த்தால், ரசிகமணி ரீவா அரசர் பல்லக்கைத் தமது வலது தோளில் தாங்கிக்கொண்டிருந்தார். உடனே, பல்லக்கிலிருந்து தான்சேன் கீழே குதித்து அரண்மனை திரும்புமாறு அரசரை வற்புறுத்தி வேண்டிக்கொண்டார். அதோடு பின்வருமாறு சபதமும் உரைத்தார்: "மகாராஜாதி ராஜர் ராமசந்திரர்

என் பல்லக்கைத் தமது வலது தோளினால் சுமந்து என்னைச் சொல்லொணா அவமானத்திற்கு ஆளாக்கி விட்டார். ஆகவே நான் இனி எனது வலது கையினால் எந்தப் பேரரசருக்கும் சலாம் செய்ய மாட்டேன்.''

பதேப்பூர் ஸீக்ரி போய்ச் சேர்ந்ததும், அடிமை மனப்பான்மை கொண்ட ஒரு ராணுவ அதிகாரி, தான்சேன் செய்த சபதத்தை அக்பரிடம் சற்றுத் திரித்துக் கூறினான். அரசவையை அடைந்ததும் தான்சேன் அக்பருக்கு வலது கையால் சலாம் செய்யாமல், இடது கையினாலேயே செய்தார். அக்பர் இதனைக் கண்டு புன்முறுவலுடன் கூறினார்: '' தான்சேன் இங்குப் புதியவராய் வந்துள்ளார். ஆனால் அவர் புத்திசாலி. மிக விரைவிலேயே அரசவை சம்பிரதாயங்களைக் கற்றுக் கொண்டு விடுவார். சரி இப்போது பாட்டைத் துவக்கலாம்.''

அப்போது ஓர் அதிகாரி தான்சேனைத் தரையிலமர்ந்து பாடும்படி கூறினார். தான்சேன் இதைத் தமக்கு மட்டுமல்ல, இசைக்கலைக்கே அவமானமாகக் கருதினார். மனமில்லாமலிருந்தும் அவர் ஓர் துருபத கீதத்தைப் பாடத் துவங்கினார். அதன் இறுதி அடியில், 'இம் முதற்பாட்டை பைரவ ராகத்தில் பாடி, அக்பர் அதைக் கேட்டாரென தான்சேன் கூறுகிறார்' என்ற பொருள் இருந்தது.

மிகுந்த இனிமையும் கம்பீரமும் வாய்ந்த குரலையும், மனங்கவரும் இசையையும் செவிமடுத்து அவையினரனைவரும் பேரானந்தமெய்தினர். நாற்புறமிருந்தும் பலவகை பாராட்டொலிகள் வரத் துவங்கின. சபை கலைந்ததும் தான்சேன் தமது இருப்பிடம் சேர்ந்து, நோயென்ற

சாக்கில் படுத்துக் கொண்டார். மறுநாளே அவரது நோய்ச் செய்தி பரவிவிட்டது. ஒரு நாள் ராஜா வீரபல் வந்து, பேரரசரின் சார்பில் அனுதாபம் தொனிக்கும் வார்த்தைகளால் நோயின் காரணத்தை வினவினர். அப்போது தான்சேன் சொன்னர் : "இங்கு என் மனம் ஈடுபடவில்லே. இதனுல்தான் என் உடல்நிலேயும் குன்ற ஆரம்பித்து விட்டது. ரீவா அரசர் என்னே உறவினராக மதித்து அரசவையில் உயர்ந்த இடத்தை அளித்திருந்தார். இங்கு அரசவையில் தரையிலமர்ந்து பாடுவதால் எனக்கு மட்டு மல்ல, மிகச் சிறந்த இசைக்கலேக்கும் இழுக்கு ஏற்பட்டு விட்டது. ஆண்டவன் ஆணேயாக எனக்கு இங்கிருந்து விடை தரச் செய்யுங்கள்."

வீரபல் கூறினர் : "அக்பர் சிறந்த ரசிகர். தங்களது இசையில் அவர் மயங்கிவிட்டார். தங்களேப் போன்ற கலேஞர் தலேநகரிலேதான் இருக்க வேண்டும். தங்களது அற்புத இசை ஆண்டவனளித்த வரதானம். ஆண்டவனது கருணேயினுலேயே, அக்பரும் இந்தியாவின் சக்கரவர்த்தி யாகியுள்ளார். தங்கட்கும் அரசவையின் இரத்தினம் என்ற உயர்ந்த இடம் அளிக்கப்படவேண்டுமென நான் அவரைக் கேட்டுக் கொள்வேன். அவர் என் சொல்லே எப்போதுமே கேட்பவர். மிகவும் பரந்த உள்ளம் படைத்தவர்."

வீரபல் கூறிய யோசனேப்படி தான்சேனேத் தமது அவைக்கள இரத்தினமாக்குவதற்கு அக்பர் உடன்பட்டார். ஆனுல் அதற்காகத் தான்சேன் அக்பருடைய ஆண்டு நிறைவு விழாவின்போது மறுபடியும் பாட வேண்டுமென நிபந்தனே விதிக்கப்பட்டது.

இச் செய்தி ஆக்ராவில் பரவியதுமே, தான்சேனுடன் இசை பயின்றவர்களான சாந்த்கானும் (முன்பு சோமநாத்) சூரஜ்கானும் (முன்பு பண்டித திவாகர்), வேறு பல கலைஞர்களும் மிகுந்த பொருமை அடைந்தனர். அரசவையில் எல்லாப் பாடகர்களின் முன்னிலையிலும் சாந்த் கானையும், சூரஜ்கானையும் போட்டியில் தான்சேன் தோல்வியுறச் செய்தால்தான், அவரை 'இரத்தினம்' என ஏற்றுத் தக்க இனமும் அளிக்கப்படுமென்று அமைச்சர்களின் வாயிலாக அக்பரைச் சம்மதிக்கச் செய்தனர்.

அக்பரது பிறந்த தின விழாவின் போது, மூன்று நாட்கள் தொடர்ந்து இசையரங்கு நடைபெற்றது. தாமிருவரும் பாட முடியாத ஒரு ராகத்தைத் தான்சேன் பாட வேண்டுமென, சாந்த்கானும், சூரஜ்கானும் அரசவையில் தெரிவித்தனர்.

பதிலளிக்கும் விதத்தில் தான்சேன் கம்பீரமாகக் கூறினர்: "இவ்விரு கலைஞர்களுமே எனது குருநாதர் ஹரிதாசருடைய சீடர்கள். குருநாதர் எம்மனைவருக்கும் வஞ்சனையேதுமின்றிப் பயிற்சியளித்துள்ளார். என்னைவிட இவர்கள் அதிகம் அறிந்திருப்பின், நான் பாட இயலாத ஒரு ராகத்தை இவ்விருவரும் பாட வேண்டும்."

இதைக் கேட்டதும் அவ்விருவரது முகங்களும் களையிழந்து விட்டன. அவ்வமயம் தான்சேன் அவையரங்கில் அமர்ந்து இரண்டொரு ராகங்களைப் பாடினர். அவற்றை முன்பு கேட்டதாகவே யாருக்கும் நினைவில்லை. சாந்த்கான் முதலிய விரோதிகள் கூட்டம், 'இது அவராகக்

கற்பித்த ராகம்' என்று கூறினர். ஆனால், தான்சேன் தாம் பாடியவை சாஸ்திர சம்மதமான ராகங்களே என்பதை நிலைநாட்டி, எல்லோரையும் வாயடைக்கச் செய்தார். தான்சேனுக்கு அவைக்கள இரத்தினப் பதவியும், ஒரு லட்ச ரூபாய் பரிசுத் தொகையும் அளிக்கப்பெற்றன. தான்சேன் அந்த ஓர் லட்ச ரூபாயும் ஆக்ராவின் ஏழை மக்களுக்குத் தானம் செய்து விட்டார். இதைப்பற்றி வீரபல் கேட்டபோது, "சக்கரவர்த்தி இவ்வளவு பெருந் தொகையை எக்கலைஞனுக்கும் இதுவரை அளித்ததில்லை; எந்தக் கலைஞனும் இதுவரை இவ்வளவு பெரும் தானத்தைச் செய்ததுமில்லை," என்று அவர் கூறினார்.

அவைக்களத்தில் வீணைக் கலைஞரான (வைணிகரான) டாகுர் சன்முக் சிங்குக்குப் பெரு மதிப்புண்டு. இவரது அற்புதமான வீணைவாசிப்பைக் கேட்டுவிட்டு மயங்கி இவருக்கு மிச்ரி சிங் (கற்கண்டு சிங்) என்ற பட்டப்பெயர் சூட்டியிருந்தனர். தான்சேனிடம் தோற்றுப்போன விரோதிக்குழு டாகுர் மிச்ரி சிங்கிடம் கோள் சொல்லியது. டாகுரும் தான்சேனுக்கு விரோதி யாகிவிட்டார். ஒருநாள் அக்பரது தீவான்-ஏ-காஸ் சபையில் டாகுர் வீணைவாசித்துக் கொண்டே, தான்சேனைப் போட்டிக்கு வருமாறு தூண்டினார். தான்சேன் உடனேயே அவர் வீணையில் வாசித்த ஸ்வர வரிசைகளைப் பாடிக் காட்டினார். டாகுர் சினங்கொண்டு தகாத சில சொற்களைக் கூறி விட்டார். அக்பர் டாகுரை உடனே வெளியேறுமாறு உத்தரவிட்டார். சில காலத்துக்குப்பின் அக்பரும் வீர பல்லும் சேர்ந்து, தான்சேனுக்கும் டாகுருக்கும் இடையே நல்லுறவை ஏற்படுத்தினர்.

கயால் என்ற வகைக் கீதங்களை முதன்முதலில் இயற்றிய சதாரங்கர் என்பவர் டாகுர் மிச்ரி சிங்கின் வழித் தோன்றலே ஆவார். இந்தியர், பாரசீகர், தூரானியர், அரேபியர் முதலிய 36 கலைஞர்கள் அவையிலிருந்தன ரெனவும், தான்சேன் அனைவரையும் மிஞ்சி விளங்கினர் எனவும் அக்பர் தர்பார் பற்றிய தமது நூலில் அபுல் பஜல் குறித்துள்ளார். தான்சேனுடன் விரோதம் பாராட்டிய வர்கள் யாவரும் இறுதியில் தோல்வியே அடைந்தனர். கடந்த ஓராயிரம் ஆண்டுகளில் தான்சேன் போன்ற ஓர் இசைப்புலவர் தோன்றியதில்லை என்றே யாவரும் கருதினர். இவ் விஷயத்தை ஜஹாங்கீரும் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார்.

ஒரு முறை அக்பர் தான்சேனிடம் கேட்டார் : "உம்மைவிடச் சிறந்த பாடர் எவரேனுமுண்டோ ?"

தான்சேன் : எனது இசையாசிரியர் சுவாமி ஹரிதாசர் யாவரிலும் மேம்பட்ட பாடகராவர்.

உடனே அக்பர் சுவாமியின் இசையைக் கேட்க இச்சைப்படுவதாகக் கூறினர். ஆனல் சுவாமி எந்த அரசவையிலும் பாடமாட்டார் ; ஸ்ரீ கிருஷ்ணனது விக் கிரத்திற்கு எதிரில் அமர்ந்துதான் பாடுவார் என்று தான்சேன் சொன்னர்.

ஒரு சமயம் அக்பர் ஆக்ராவிலிருந்து டில்லி செல்லும் வழியில் பிருந்தாவனத்தில் தங்கினர். அக்பர் சாதாரண உடையணிந்து தான்சேனுடன் மாலைப் பூஜை வேளையில் சுவாமியின் ஆசிரமத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

சுவாமி கோவிலினுள், கண்ணனைத் துதிக்கும் துருபத கீதமொன்றைக் கல்யாண் என்ற பண்ணிலே பாடிக் கொண்டிருந்தார். தான்சேனும், அக்பரும் வெளியி லமர்ந்தே கேட்டனர். பாட்டு முடிந்த பின்னரும், அக்பர் கண்களை மூடி லயித்து உட்கார்ந்திருந்தார். தான்சேனை நோக்கி, "அக்பர் பாதுஷாவை ஆசிரமத்திற்கு அழைத்துச் செல்" என்று சுவாமி கூறினர். சுவாமியின் உள் ளறிவைக் கண்டு, தான்சேனும் அக்பரும் பெருவியப் படைந்தனர். அக்பரும் தான்சேனும் பணிவுடன் வேண்டிக் கொண்டமையால் சுவாமி தொடர்ந்து பாடலானர். தான்சேன் குருநாதருக்குத் தம்பூராவில் சுருதி கூட்டினர். அங்கிருந்து விடைபெற்றுப் போகும் போது, "சுவாமியின் குரல் முன்பு உமது குரல் எடுபடாமைக்கு யாது காரணம்?" என்று தான்சேனிடம் அக்பர் வேடிக்கையாகக் கேட்டார்.

தான்சேன் : "நான் மனித சமுதாயத்தை மகிழ் விக்க இசை பாடுகிறேன். மதிப்புக்குரிய சுவாமிஜியோ பேரின்பத்தைக் காண்பதற்காகப் பாடுகின்றார்."

தான்சேனுக்கு அக்பரது அவையில் மிகுந்த மதிப்புக் கிடைத்தது. பல நாடுகளில் அவரது புகழ் பரவிற்று. ஆனல், ரீவா ராஜ்யத்தில் அவர் அனுபவித்த அமைதி அக்பருடைய அரசவையில் கிடைக்கவில்லை. தமது மனைவி இறந்தவுடன் அவர் துறவியாகிப் பிருந்தாவனம் செல்ல ஆயத்தமானர். ஆனல் வீரபல் பலவாறு சமாதானம் செய்தமையால் பயணத்தை நிறுத்தி விட்டார்.

பல காரணங்களால் அவர் தம்முடைய மதத்தை மாற்றிக் கொள்ள நேர்ந்தது. ஆனாலும் அவரது இசைக் கலையில் இதனால் மாற்றம் எதுவும் ஏற்பட்டு விடவில்லை.

கி. பி. 1589-ல் அவர் மரணமடைந்தார். அவர் விருப்பப்படியே அவரது சமாதி குவாலியரில் பீர் கௌஸ் முகம்மது சாகேபின் கல்லறைக்கு அருகிலே அமைக்கப் பட்டது.

தான்சேன் வாழ்ந்த காலத்திலேயே, சூர்தாஸரும், பைஜு பாவ்ராவும் (பைஜ்நாதரும்) பெயர்பெற்ற பாடகர்களாக இருந்தனர். அவர்களிடையே நெருங்கிய நட்பு நிலவியது. சூர்தாஸரைப் புகழ்ந்து தான்சேன் ஒரு பாடம் இயற்றியுள்ளார். அதற்குப் பதிலாக, சூர்தாஸரும் தான்சேனது இனிய இசையைப் பாராட்டிப் பாடியுள்ளார்.



## சாந்த்பீபி

சாந்த் பீபி மிகுந்த திறமையும், துணிவும் வாய்ந்த வீரப்பெண்மணியாக விளங்கினாள். எனவே, அவளைச் 'சாந்த் பீபி' என்று சொல்லாமல் 'சாந்த் சுல்தானா' (சாந்த் பேரரசி) என்று அழைத்தால், அது மிகையாகாது. அவள் அக்பர் பாதுஷாவின் மாபெரும் படையை எதிர்த்துப் போராடிய வீரத்திற்கு உதாரணம் உலகிலேயே கிடைப்பது அரிது.

கி. பி. 1591-ல் அக்பர் பாதுஷா தென்னிந்தியா முழுவதையும் கைப்பற்றுவதற்குத் திட்டம் வகுத்தார். அக் காலத்தில் தென்னாட்டில் நான்கு பெரிய ராஜ்யங்கள் இருந்தன. அகமத் நகர், கான்தேஷ், பீஜப்பூர், கோல்

கொண்டா என்பவை அவை. இந் நான்கு ராஜயங்களின் அரசவைக்கும் அக்பர் தூது அனுப்பினுர். அக்பருடைய பேரரசிற்கு அடங்கியிருக்குமாறு அவர்களிடம் தூதுவர்கள் தெரிவித்தனர்.

அகமத்நகர், கோல்கொண்டா, பீஜப்பூர் இவற்றின் சுல்தான்கள் இதனுல் மிகுந்த கோபமடைந்தனர். அவர்கள் அக்பருடைய மேலதிகாரத்தை ஒப்புக்கொள்ள மறுத்து விட்டனர். ஆனுல், கான்தேஷின் அரசன் மிகவும் வலிமை குன்றியவனுக இருந்தான். மிகப் பெரிய முகலாயப் படையை எதிர்த்துப் போர் செய்ய அவனுல் இயலாது. எனவே அவன் அக்பரிடம் தஞ்சம் புகுந்து விட்டான்.

தக்ஷிணத்திலுள்ள மூன்று ராஜயங்கள் தம்முடைய ஆட்சியை ஏற்றுக் கொள்ளவில்லை என்று கேட்டதுமே அக்பர் தமது மகன் முராத் என்பவனை அனுப்பினுர் அவற்றை வென்று வருவதற்கு. கி. பி. 1595-ல் முராத்தின் படை அகமது நகரை நாற்புறத்திலும் முற்றுகையிட்டது.

நடைமுறையில் அகமது நகரில் சாந்த் பீபியின் ஆட்சியே நடைபெற்று வந்தது. அவ்வரசாங்கத்திற்கு அவளே உரிமையுள்ளவளாக இருந்தாள்.

அவள் ஹுசேன் நிஜாம்ஷாவின் பெண்ணும், அலி ஆதில்ஷாவின் மனைவியுமாவாள். நற்குடிப்பிறப்பின் காரணமாக நல்லொழுக்கம் மிக்கவளாக இருந்ததுடன், அவளிடம் நுண்ணறிவு, போர்த்திறமை, அரசியல் தேர்ச்சி ஆகிய பண்புகளும் குறைவின்றி விளங்கின,

னைவேதான் அவள் அக்காலத்தில் ஈடிணையற்ற பெண் மணி என்று கருதப்பட்டனள். தன்னுடைய நாடு பறிக் கப்படலாம் என்றதுமே அவளது இரத்தம் கொதித்தது. அவள் கவசமணிந்து, கையிலே வாளேந்தி போர்க்களத் திற்குப் புறப்பட்டாள்.

துர்ப்பாக்கிய வசமாக அப்போது அகமத்நகர் மக்களிடையே பிளவு ஏற்பட்டிருந்தது. ஷியா என்றும் ஸுன்னி என்றும் முஸ்லிம்களிடையே இரண்டு கட்சிகள் ஏற்பட்டிருந்தன. தேசத் துரோகிகள் சிலர் முராத்திற்கு உதவி புரிவதாகச் செய்தி அனுப்பினர். இதனால், நிலைமை மோசமாகிவிட்டது. ஆயினும் சாந்த் பீபி தைரியமிழக்க வில்லை. அவள் நகரின் பெரும் பணக்காரர்களை யெல்லாம் ஒன்றுகூட்டி மிக்கத் திறமையுடன் அவர்களைச் சாந்தப் படுத்திவிட்டாள். அப்போதுதான் அவர்களுக்குக் கண் திறந்தது; அக்பருடைய பெரும் படையினை எண்ணிப் பார்த்தனர். முராத்திற்குத் தாங்கள் வாக்குக் கொடுத் தமை பற்றி அவர்கள் மிகவும் வருத்தப்பட்டனர். மக்கள் யாவரும் ஒன்றுதிரண்டு, சாந்த் பீபியே. ராஜ்யத்தின் வாரிசாக அமைந்து கோட்டைக்குள் இருக்கவேண்டு மெனவும், தாங்கள் முழுமூச்சுடன் போர்க்களத்தில் புகுந்து எவ்வாறுவது அகமது நகரைக் காத்து நிற்பது எனவும் தீர்மானம் செய்தனர்.

ஆனால் சாந்த் பீபி பேசாமல் உட்கார்ந்து விட வில்லை. அவளது உள்ளத்தில் நாட்டுப் பற்று அலை மோதிக் கொண்டிருந்தது. அவள் எவ்வாறேனும் பகை வரை முறியடிக்க விரும்பினாள். பலவிடங்களில் அலைந்து திரிந்து உணவுத் தானியங்களையும் யுத்த தளவாடங்

களையும் சேகரிக்கத் துவங்கினுள். தனது ராஜ தந்திரத்தினுல் அவையிலிருந்த பெருஞ் செல்வர்களை யெல்லாம் அவள் மகிழ்வுறச் செய்தாள். தானே கவனித்து வெகு நல்ல முறையில் படையணிகளை அமைத்தாள். அதனுல் அகமது நகரின் படையணிகள் உறுதிபெற்று விட்டன.

இதன் பின்னர் அவள் இப்ராகிம்ஷாவினுடைய புதல்வன் பகாதுர்ஷாவை பெயரளவிற்குச் சுல்தானுக்கி அரியணையில் அமர்த்திவிட்டு, பீஜப்பூர் சுல்தான் இப்ராகிம் ஆதில்ஷாவுடன் உடன்படிக்கை செய்து கொண்டாள். இவ்வாறு, அவளுடைய ஆயத்தங்கள் எல்லாம் பூர்த்தி பெற்றன.

அக்காலத்தில் அகமது நகர்ப் படைகளைப் பார்த்த வர்கள், அவற்றில் சாந்த் பீபியின் தேசபக்தியின் முத்திரை நன்கு விளங்கியதைக் கண்டனர். ஒரு வீர சேனுதிபதி போல் அவள் கவசம் தரித்து, கைகளில் வாளும் கேடயமும் ஏந்தி எதிரிகள்மீது பாய்ந்து சென்ருள். அவளது தீரத்தைக் கண்டு பெரிய பெரிய படை வீரர்களும் வியப் படைந்தனர். அவள் தானே படை வீரர்களுக்கு முன் னின்று தலைமை தாங்கினுள். அவள், போர்க் களத்தில் படையினருக்கு நிகழ்த்திய வீரவுரைகளைக் கேட்டபின், கோழையிலும் கோழைகள் கூடப் பின்தங்கி விடவில்லை.

சாந்த் பீபி ராஜபுத்திரப் பெண்டிர் பலருடைய வீரக் கதைகளைக் கேட்டிருந்தாள். ராஜபுத்திர அரசிகள் போர்க்காலத்தில் தம்முடைய உணர்ச்சிமிக்க உரைகளால், படையினரை நாட்டிற்காக வீரப் போர் புரியத் தூண்டினர் என்பதையும் அவள் செவியுற்றிருந்தாள். ஆனுல் சாந்த்

பீபி அவர்களையும் ஒரு படி மிஞ்சிவிட்டாள். அவள் படை வீரர்களைத் திரட்டிக் கூறினாள்: "இது நம் அனைவருக்குமே ஒரு மான-அவமானப் பிரச்சினை; சுதந்திர-அடிமைப் பிரச்சினையாகும். என்னுடன் நீங்களும் வாருங்கள்; நாட்டிற்காக வீரத்துடன் போரிடுங்கள்."

இந்நிலையில் எந்த மனிதன்தான் அவளுக்குத் துணை புரியாமல் இருந்திருப்பான்? துர்க்கைதேவி போன்று தன் ராணி முன்னேறிப் பாய்வதைக் கண்டுவிட்டு, எவன்தான் பின்வாங்குவான்? தன்னுயிரை மதியாமல், நெஞ்சுரம் கொண்டு செல்லும் ராணி சாந்தின் அழைப்பைப் புறக்கணித்துவிட்டு எவன்தான் தன்னுயிரைக் காக்க முற்பட்டிருப்பான்?

மலர் போன்ற மென்மை வாய்ந்த சாந்த் பீபி தனது படையுடன் முன்னேறி முராதின் படைமீது கழுகு பாய்வது போல் பாய்ந்தனள். துணிவு நிறைந்த வீராங்கனை தமக்கு முன்னால் போர்க்களத்தில் நின்று எதிர்க்கின்ற காட்சியைக் கண்ட பகைவர்களெல்லாம் திகைத்துப் போயினர். இத்தகை போர்த் திறமையையும், துணிவையும் அவர்கள் இதற்குமுன் எங்கும் கண்டதில்லை. அதிலும் அரண்மனைச் சுவர்களுக்குள் அடங்கிக் கிடந்து மலர் போன்ற சொகுசான வாழ்க்கையில் வளர்ந்த ஒரு பெண் இந்தப்போடு போட்டாள் என்றால்!

பல நாட்கள் இந்தப் போர் நடந்தது. ஒரு நாள் முராதின் படை வீரர்கள் சுரங்கம் தோண்டி, சாநத பீபியின் கோட்டையினுடைய ஒரு பக்க மதிலைத் தகர்த்து விட்டனர். கோட்டைக்குள் இருந்தவர்கள் ஓடத் தலைப்பட்டனர். மக்களெல்லாம் தப்பியோடுவதற்கு வழி பார்க்கலாயினர்.

ஆனால், சாந்த் பீபியின் துணிவுதான் என்னே ! பெண் சிங்கம் போன்ற அம்மாதரசி தனது கவசத்தைக் கழற்றி யெறிந்து விட்டு, பளபளக்கும் வாள் மட்டும் ஏந்தி, கோட்டையின் மேல் தளத்தில் சென்று நின்று கொண்டாள். இம்மாதிரி ஒரு நிலை ஏற்படுமென்பதை அவள் முன்பே உணர்ந்திருந்தாள். எனவே தடிகள், பலகைகள், மூங்கில் முதலிய பொருள்களையெல்லாம் சேகரித்து வைத்திருந்தாள். கோட்டையின் சிதைந்த மதிலின் மீது அவளே ஏறி நின்று கொண்டாள். மக்களுக்குப் பண ஆசை காட்டியும், அதட்டி மிரட்டியும் வெகு திறமையுடன் மதிலைச் செப்பனிடும் பணியில் ஈடுபடுத்தி விட்டாள். ஆண் பெண்கள், அனைவரும் வேலையில் முனைந்தனர். சில மணி நேரத்தில் கோட்டை மதிலை மறுபடியும் உருவாக்கி அதன் மீது பீரங்கிகளையும் ஏற்றி விட்டாள்,சாந்த் பீபி..

முராதின் படைகள் வேலை செய்யும் மக்கள் மீது பாய்ந்து தாக்கியபோது, அவர்களைப் பீரங்கி வெடிகளால் பின்னே தள்ளினர்.

மாலை நேரத்தில் முராதின் படைகள் பாசறைக்குத் திரும்பிய பின், சாந்த் பீபி ஆயிரக்கணக்கான தச்சரையும், கொத்தனார்களையும், கூலியாட்களையும் அழைத்து வந்து தானும் மதிலடியில் நின்று கொண்டாள். மதிலை உறுதி யாக்கும் பணி துவங்கிற்று. அவள் குதிரைமீது அமர்ந் திருந்தாள். நாற்புறம் தீவட்டிகள் எரிந்து கொண் டிருந்தன. செப்பனிடும் பணி வெகு துரிதமாக நடை பெற்றது.

சாந்த் பீபி தொழிலாளர்களுக்குப் பிடிபிடியாக மோகராக்களை அள்ளிக் கொடுத்தனள். இதைக் கண்ட தொழிலாளர்கள் யாவரும் முனைந்து பாடுபட்டனர்.

மறுநாள் பகைவர்களின் படை களத்திற்கு வந்ததும், மூன்று கெஜ அகலமும் ஐம்பது கெஜ உயரமும் கொண்ட கோட்டை மதில் முன் போன்றே கட்டப்பட்டு நிற்பதைக் கண்டனர். அவர்கள் பெருந்திகைப்படைந்து, மனதிற்குள் ராணியின் திறமையைப் பாராட்டினர். இப் போரின் போது, ஒரு சமயம் சாந்த் பீபியினிடமிருந்த வெடி மருந்தெல்லாம் காலியாகி விட்டது. பண்டங்கள் வந்துபோகும் பாதைகளெல்லாம் அடைபட்டிருந்தமையால், எங்கிருந்தும் உதவி கிடைக்க வழியில்லை. அப்போது ராணி வெள்ளியாலும், பொன்னாலும் குண்டுகள் செய் வித்து, அவைகளைக் கொண்டு எதிரிப் படைகளை அடிக்கத் துவங்கினள்.

இறுதியில் அவள் வீரம் பயனளித்து விட்டது. முராதின் படைகளைப் பின் வாங்கச் செய்து விட்டாள். அகமத் நகர் காப்பாற்றப்பட்டது.

தனது தந்திரமேதும் ராணியிடம் பலிக்காது என்பதை நன்கு புரிந்து கொண்ட முராத், அவளுடன் ஒப்பந்தம் செய்து கொண்டான். இவ் வொப்பந்தப்படி, சாந்த் பீபி 'பரார்' என்ற இலாகாவை அக்பருக்கு அளித்து விடச் சம்மதித்தாள்.

இதன்பின் ஐந்தாண்டுகள் வரை அக்பர் அகமது நகர்மீது படையெடுக்கத் துணிவு கொள்ளவில்லை.

ஐந்தாண்டுகளுக்குப் பின்னர், அக்பரது கடைசி மகன் அகமது நகரை வென்ருன். அப்போது, அவனை எதிர்க்கச் சாந்த் பீபி அங்கு இல்லாமையே அவன் வென்றதற்குக் காரணம். ஏனெனில் இப் படையெடுப்பிற்கு முன்பே சாந்த் பீபியின் அவையிலிருந்த பிரபுக்கள் சிலரும் படைத் தலைவரும் சேர்ந்து அவளைக் கொன்று விட்டனர். புனிதமும் நல்லொழுக்கமும் நிறைந்த அந்த வீரராணியின் வாழ்க்கை இவ்வாறு முடிவுற்றது. சாந்த் பீபி தான் வாழ்ந்த காலத்தில் நாட்டு மக்களது உள்ளங்களில் தேச பக்திச் சுவாலையைப் பொங்கி எழச் செய்தனள். கோழை யிலும் கோழையான மனிதனைக்கூட அவள் வீரனுக்கி விட்டாள். கழுகு போன்று எதிரிப் படையிடையே அவள் பாய்ந்து சென்ற காட்சியைக் கண்டவரெல்லாம், அதனை யென்றுமே மறக்க முடியவில்லை. அவள் போர்த் திட் டங்களை வகுத்ததுடன் மட்டும் நின்றுவிடவில்லை, அவற்றை யெல்லாம் அமல் நடத்தவும் செய்தாள்.

சாந்த் பீபியின் பகைவர்கள் உள்ளூற அவளிடம் பயமே கொண்டிருந்தனர். அவளது பெயரைக் கேட்டதுமே அவர்கள் அஞ்சி நடுங்கினர். சாந்த் பீபி வீரத்திலும் தீரத்திலும் ஆண்பாலருடன் போட்டியிட்டனள் என்பது மட்டுமல்ல ; அவர்களை எவ்வளவோ விஞ்சியும் விளங்கினுள்.

அக்பரும்கூட தமது மனத்துள் அவள்மீது மதிப்புக் கொண்டிருந்தார். எனவேதான், அகமத்நகர் பிடிபட்டதும் முதல் காரியமாக அவளைக் கொன்ற கொலை காரர்களைத் தேடிக் கண்டுபிடித்தார். அவர்களனைவரையும்

கழுவிலேற்றும் வரை அக்பர் நிம்மதி கொள்ளவில்லை. சாந்த் பீபியைக் கொன்றவர்கள் நன்ருகச் சித்திரவதை செய்யப்பட்டனர் என்ற செய்தியைக் கேட்டபிறகே அவர் நிம்மதிப் பெருமூச்சுவிட்டார்.

சாந்த் பீபி தனது உயிரையே அர்ப்பணித்து நமக்கெல்லாம் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கிஞள். அவளை எந்தத் தேச பக்தனும் என்றுமே மறக்க முடியாது.



# குரு ராமதாசர்

சமர்த்த ராமதாசர் சிவாஜியின் குரு ஆவார். மகா ராஷ்டிர ராஜ்யத்தில், ஔரங்காபாத் மாவட்டத்தைச் சார்ந்த ஆம்பட் தாலூகாவில், ஜாமீப் என்ற ஒரு கிராமம். இங்குதான் கி.பி. 1608-ல் சுவாமி ராமதாசர் பிறந்தார். இவரது உண்மைப் பெயர் நாராயண் என்பது. ராமதாசர் இளமையில் மிகவும் சூட்டிகையாக இருந்தார். தமது நேரத்தையெல்லாம் மாடிகள், மரங்கள்மீது ஏறுவதிலும், வேறு விஷமங்கள் செய்வதிலுமே கழித்து வந்தார்.

ராமதாசரது தந்தையார் பெயர் சூர்யஜி பந்த்; தாயின் பெயர் ரனுபாய். இருவரும் மதத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள். வெகு நாட்கள்வரை அவர்களுக்கு மகப்பேறு இல்லாமல் இருந்தது. இதனால் அவர்கள் துயரம் கொண்டிருந்தனர். பின்னர் அவர்கள் ஓர் யாகம் நடத்தினர். அப்போது ரனுபாய் ஓர் கனவு கண்டாள். அவளுக்கு

இரண்டு புத்திரர்கள் பிறப்பார்கள் என்று கனவில் யாரோ கூறினர். அவ்வாறே இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். இளைய பிள்ளையின் பெயர்தான் நாராயண்.

ஒரு நாள் தாயார் நாராயணிடம் திருமணம் புரிந்து கொள்ளும்படி கூறினர். அப்போது அவரது வயது பன்னிரண்டு. ஒருவகையாக அவர் தாயின் கட்டளையை ஏற்றுக் கொண்டார். மிக ஆடம்பரமாகத் திருமணச் சடங்குகள் நடைபெற்று வந்தன. பெண்ணின் கைபிடிக்கும் வேளை வந்ததும், புரோகிதர்கள் மந்திரமோதினர். மந்திரத்தின் பொருள் "கால்களில் இல்லறமாகிய விலங்கை மாட்டிக் கொண்டிருக்கிருய், ஜாக்கிரதையுடன் இரு" என்பது. இம்மந்திரத்தைக் கேட்டதும் அவர் யோசித்தார்; "நான் ஜாக்கிரதையாகத்தானே இருக்கிறேன். இன்னமும் நான் எவ்வாறு இருக்க வேண்டுமென இம்மனிதர்கள் எதிர்பார்க்கிருர்கள்?"

இவ்வாறு எண்ணியதும், ராமதாசர் அங்கிருந்து ஓடி விட்டார். மக்கள் பலர் பின்தொடர்ந்து ஓடினர். ஆனல், யாராலும் அவரைப் பிடிக்க முடியவில்லை. இதன்பின் அவர் பஞ்சவடியைச் சார்ந்த டாக்லி என்ற கிராமத்தில் வசிக்கலாயினர். அங்கு அவர் தினமும் கோதாவரி நதியில் நீராடச் சென்று வந்தார். சில நாட்களில் மதியம் வரை நீரில் நின்று ஜபம் செய்வார்; மீன்கள் கடித்தாலும் அவருக்குத் தெரியாது. பிச்சையெடுத்து உணவருந்தி வந்தார். பதினெரு ஆண்டுகளை இவ்விதம் அவர் கழித்தார்.

பின்னர் க்ஷேத்திர யாத்திரைக்கு அவர் புறப்பட்டார். ஆங்காங்கு, பல சாதுக்களையும் துறவிகளையும் சந்தித்து

ஞானம் பெற்ருர். நாட்டின் நிலையையும் நன்கு தெரிந்து கொண்டார். தம் பிரிவாற்ருமையால் தம்முடைய தாய் அழுது அழுது குருடாகி விட்டாளென்று அவர் ஒருநாள் கேள்விப்பட்டார். உடனே தாயைக் காணச் சென்ருர். பல ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் வீட்டிற்கு வந்து சேர்ந்தமை பற்றி தாய் அளவிலா மகிழ்வு கொண்டனள், ஆனல் கண்கள் போய்விட்டபடியால் அவரைக் கண்டு மகிழ இயலவில்லை. தாய் சொன்ஞள்: குழந்தாய் நாரா யண்! நீ இப்போது எவ்வளவு பெரியவனுகியிருப்பாய்! கண்ணிழந்தமையால் இன்று உன்னைக் காண முடிய வில்லையே!"

தாயின் துன்பத்தினுல் ராமதாசரும் மிகவும் வருத்த மடைந்து அவளது பாதங்களில் வீழ்ந்தார்.

ராமதாசர் பல இடங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து சமுதாயத்தை உறுதிப் படுத்திஞர். தருமத்தை உபதேசித்தார். ஆங்காங்கே தகுதிவாய்ந்த சீடர்களிடம் மடங்களின் பொறுப்பை ஒப்படைத்து விட்டு, அடுத்த இடங்களுக்கு அவர் சென்று விடுவார். இவ்வாறு தினமும் சீடர்களின் தொகை பெருகி வந்தமையால் அவரது புகழும் வெகு விரைவில் பரவ ஆரம்பித்தது. பாரதம் முழுவதிலு மிருந்து பல பெரியார்கள் ராமதாசரைத் தரிசிக்க வர லாயினர்.

ராமதாசர் மிகப்பெரிய மஹானுக இருந்ததுடன், கவியாகவும் அறிஞராகவும் அரசியல் ஞானியாகவும் விளங் கிஞர். அவர் எழுதியுள்ள 'தாசபோதம்' என்ற நூல் பல விஷயங்களைப் பற்றிய அறிவுக் களஞ்சியமாகும். அதை ஒரு வகை உலக அகராதி யெனலாம். எல்லாவகைப்

பழக்கவழக்கங்களைப்பற்றியும் அதில் கற்கமுடியும். அவர் இயற்றிய வேறு பல நூல்களும் உள்ளன. துளசிதாசர் இயற்றிய ராமாயணத்தைவிட இரு மடங்கு பெரிய ராமாயணத்தையும் அவர் எழுதி யிருக்கின்றார்.

ராமதாசர் வர்ணாசிர தர்மத்தை ஏற்றுக்கொண்டார். ஆனால், ஆண்டவனது நோக்கில் யாவரும் சமமே என்றும் அவர் உபதேசித்து வந்தார். ஆண்டவன் பக்திப் பசி மட்டுமே கொண்டவன். தனி மனிதன் தன் இச்சைப்படி நடந்து கொள்ளாமல் ஏதாவது ஒரு வகையில் சமுதாய சேவை செய்யவேண்டும் என்பது அவர் கருத்து.

சுவாமி ராமதாசர் தமது வாழ்நாள் முழுவதையும் பரோபகாரத்திலேயே கழித்தார். அவரது வாழ்க்கை சேவைக்கும், தியாகத்திற்கும் ஓர் உன்னதமான எடுத்துக் காட்டாகும்,

ஒரு சமயம் சுவாமிஜியின் குடிலுக்குப் பல விருந்தினர்கள் வந்து சேர்ந்தனர். உக்கிராணத்தில் (சாமானறை) உணவுப்பொருள் பற்றாமலிருந்தது. ராமதாசர் சில மராட்டிப்பாடல்களை இயற்றி, அவற்றைப் பாடிக்கொண்டே பிச்சையெடுத்து வருமாறு தம் சீடர்களை அனுப்பினார். அன்று, ஆயிரக்கணக்கான விருந்தினருக்குப் போதுமான பண்டங்கள் சேர்ந்துவிட்டன. மகாராஷ்டிர தேசத்தில் இன்றும்கூட அவரது பாடல்களைப் பாடிக்கொண்டே பிச்சைக்காரர்கள் பிச்சை எடுக்கின்றனர்.

அவரது மனம் மலர்போன்ற மென்மை வாய்ந்ததாகவும், வச்சிரம் போன்ற உறுதி படைத்ததாகவும் இருந்தது. கடமைக்கு முன் அவர் எதைப்பற்றியும் கவலை கொண்ட

தில்லே. கி. பி. 1659-ல் சிவாஜி அவரைச் சந்தித்தார். முதலில் குரு ராமதாசர் சிவாஜியின் கண்ணில் படாமலே இருந்து வந்தார். ஆனால் இறுதியில் ஒரு நாள் சிவாஜி, குரு தரிசனம் கிடைக்கும் வரை உண்ணுவிரதத்தை ஆரம் பித்ததும், சுவாமி சிவாஜிக்குமுன் தோன்றினர். இவ்வாறு அவர் சிவாஜியைக் கடுமையாகப் பரீட்சித்தார். சிவாஜி யின்மீது அவருக்கு ஆழமான அன்பு இந்தபோதிலும், அவர் சிவாஜியைப் பலமுறை சோதித்துள்ளார்.

ராமதாசர் இளமையிலிருந்தே வைராக்கிய மனப் பான்மை கொண்டிருந்தார். அவரது அற்புதமான ஆற்றலைக் கண்டு, சாதுக்கள் அவரைச் 'சமர்த்த ராமதாசர்' என்றழைக்கத் துவங்கினர். சமர்த்தர் ஒரு சமயம் சிதாராக் கோட்டையில் 'ஜய ஜய ஸ்ரீரகுவீர சமர்த்த' என்ற வெற்றி முழக்கத்துடன் பிச்சை கேட்டபோது சிவாஜி தமது சாம்ராஜ்யம் முழுவதையுமே அவரது பிச்சைப் பாத்திரத்தில் அர்ப்பணித்து விட்டார்!. சமர்த்தர் சொன்னதை யெல்லாம் சீடர்கள் எழுதி வந்தனர். அவரது புனித வாக்குகள் சுமார் இருபது நூல்களில் தொகுக்கப் பெற்றுள்ளன. அவருடைய உபதேசங்களின் சுவையைச் சிறிது அனுபவியுங்கள்:

1. உயர்ந்த மனிதன் அற்ப விஷயங்களில் சினம் கொள்ளமாட்டான். அவன் தனது உடலைச் சொகுசாகப் பேணி வரமாட்டான்; சோம்பேறி யாக இருக்கமாட்டான்; முயற்சியை என்றும் கைவிடான்; துன்பங்களைக் கண்டு நடுங்க மாட்டான்.

2. தன் மனத்தைக் கட்டுப்படுத்தாத ஒரு குரு உண்மையில் குருவல்ல, சீடர்களின் பின்னே

அலையும் ஒரு பேராசைப் பிச்சைக்காரனே ஆவான்.

3. ஒரு சீடன் தன் பிறவி துவங்கியே சுகம் அனுபவிக்கக் கூடாது, உலகினர் படும் துன்பத்தைக் கண்டு அவனும் துயரப்பட வேண்டும். யார், உலகத்தின் துக்கத்தினால் துக்கமடைகிறாரோ, அவரே உண்மை உணர்வுக்கு உரிமை பெற்றவர் ஆவார்.

4. ஞானம் என்ற சொல்லிற்கு உண்மைப் பொருள் ஆத்தும ஞானம்தான். எந்த ஞானத்தினால் மனிதன் தன்னையே உணர்கிறானோ, அதுவே உண்மையான ஞானமாகும்.

5. மாயை பிறக்கிறது, பரம்பொருள் பிறப்பதில்லை. மாயை வீழ்கிறது; பரம்பொருள் வீழ்வதில்லை. மாயை கெடுகிறது;. பரம்பொருள் கெடுவதில்லை.

6. சஞ்சல மனம் படைத்த மனிதன் கவனம் செலுத்தினாலும் எதையும் உணரமுடியாது. காதிருந்தும் அவனால் ஏதும் கேட்க இயலாது; அறிவு பெற்றாலும் நன்மை, தீமை பற்றிய ஆராய்ச்சி அவன் புத்திக்கு எட்டுவதில்லை. அவன் மனம் சிறிது அமைதி பெறும் வேளையில், அதைச் சோம்பல் வந்து சூழ்ந்து கொள்கிறது.

7. எவ்வாறு கனவில் கட்டுண்ட மனிதன், விழித்ததும் அந்தக் கட்டிலிருந்து விடுபடுகின்றானோ

அவ்வாறே ஞானம் பிறந்தபின் மோட்சம் கிடைத்துவிடும். அஞ்ஞானமாகிய இரவு கழிந்ததும், ஆசையின் விளைவான துன்பங்கள். யாவும் அழிந்துவிடும்.

8. துறவி கோபம் கொள்ளமாட்டான். அவனிடம் பேராசை இராது. அவனுக்குத் துயரம் கிடையாது. அவன் அச்சமற்றவன். அவனது வார்த்தைகளில் கடுமை கிடையாது. அவன் மான அவமானங்களில் கருத்தைச் சொலுத்துவதில்லை.

சிவாஜி இறந்தபோது ராமதாசருக்கு மிகுந்த துயரம் உண்டாயிற்று. அதன்பின் அவர் வெளியே செல்வதையே விட்டுவிட்டார். தமது அறைக்குள் இருந்துகொண்டே பஜனை செய்து வந்தார்.

சிவாஜி விண்ணுலகெய்திய ஓராண்டுக்குப்பின், கி. பி. 1681-ல் குரு ராமதாசரும் உடலைத் துறந்து விட்டார். அப்போது அவரது வயது எழுபத்து மூன்று.

குரு ராமதாசர் ஒரு பெருந் துறவியாகவும், மதத் தலைவராகவும் விளங்கினார். அவரிடம் வேறொரு தனிச் சிறப்பும் இருந்தது. நாட்டை அடிமைத் தளையிலிருந்து விடுவிக்கவும் அவர் விரதம் பூண்டிருந்தார். இறுதிவரை இதே இலட்சியத்துடன் செயல் புரிந்துவந்தார். அதிர்ஷ்ட வசமாக அவருக்குச் சிவாஜி என்ற சிறந்த மனிதர் சீடராகக் கிடைத்திருந்தார். குருநாதரது கனவைச் சிவாஜி பெரு. மளவிற்கு நனவாக்கி வைத்தார்.



## சாது துகாராம்

பதினேழாம் நூற்றுண்டில் மஹாராஷ்டிரம் மிகுந்த உயர்வு பெற்றிருந்தது. இதற்குக் காரணமாக இருந்தவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் மூவர். சிவாஜி மகாராஜ், சமர்த்தகுரு ராமதாசர், துகாராம் என்பவர்களே அவர்கள்.

சாது துகாராமும் கபீர், சூர்தாசர், துளசிதாசர், மீராபாய் போன்று பிரசித்தி பெற்ற பக்திக் கவியாக விளக்கிஞர். அவர் 1608-ல் தேகு என்ற கிராமத்தில் பிறந்தார். தாய் தந்தையர் செய்த பிராத்தனைகள், நோன்புகளின் பயஞக அவர் தோன்றினர் என்று கூறப்படுகிறது.

பெற்ருேர் துகாராமை மிக்க அன்புடன் சீராட்டிப் பாராட்டி வளர்த்தனர். அவர் தோழர்களுடன் விளையாட்டிலேயே மூழ்கிக் கிடந்தார். பிற்காலத்தில் இவ் விளையாட்டுக்களை மையமாகக்கொண்டே துகாராம் பக்திப் பாடல்களை இயற்றியுள்ளார். துகாராமிற்கு மிகவும் பிடித்த விளையாட்டு "டிபாரி". இதில் 13 அல்லது 17 ஆட்டக்காரர்கள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து கொள்வார்கள். எஞ்சியுள்ள ஒரு பையன் அவர்களுக்கு நடுவில் நின்றுகொண்டு பாடுவான். அடுத்த கட்சிப் பையன்கள் பாட்டிற்கேற்ப 'டிப்பாரி'களால் (கோலாட்டக் குச்சிகளால்) தாளம் போட்டுக்கொண்டே, பாடும் பையனுக்கு இடது பக்கமாகச் சுற்றி வருவார்கள். அவனுக்கு இருபுறமும் எதிர்க் கட்சிப் பையன்கள் உண்டு. எந்தப் பையன் தாளம் போடுவதில் தப்பிவிடுகிருனே, அவன் நடுவில் நிற்க நேரும்; நடுவில் நின்ற பையன் அவன் இடத்திற்குப் போய் விடுவான். கோலாட்டக் குச்சிகளில் ஒருமித்த சத்தம் தாளமாக அமைவதிலும், அத்தாளத்திற்கு ஏற்பக் கால் எடுத்து வைப்பதிலுமே இவ்விளையாட்டின் திறமை உள்ளது. துகாராமின் கவிதையாற்றலை இந்த விளையாட்டு தூண்டி விட்டது என்பதைச் சொல்லவே தேவையில்லை.

துகாராமின் இளமை இவ்வாறு விளையாட்டுக்களிலே கழிந்துவிட்டது. இவரது தந்தை, சிறுவர்களுக்கு எழுதவும் படிக்கவும் கணக்குப் போடவும் கற்றுக் கொடுத்து வந்தார். துகாராமின் புத்தி அவ்வகையிலும் குறைந்ததாக இல்லை அவர் மிகுந்த கவனத்துடன் எல்லா விஷயங்களையும் புரிந்துகொண்டார். விரைவிலேயே கடை வியாபாரம் சம்பந்தமான வரவு செலவுக் கணக்கு எழுத ஆரம்பித்தார். இதைக் கண்ட ஒரு மனிதர் 'உமது

பிள்ளை மிகவும் கெட்டிக்காரன், உமது வம்சத்தையே விளங்க வைப்பான்' என்று அவரது தந்தையாரிடம் கூறினர்.

தந்தைக்குத் துகாராமிடம் மிகுந்த பாசமுண்டு. அவர் கடை, வியாபார விஷயங்களில் பெரிய பிள்ளை ஸாவ்ஜியைவிட இவரிடமே அதிக நம்பிக்கை வைத்திருந்தார். அவர் 14-15 வயதினரானபோது, அவருடைய திருமணம் வெகு படாடோபமாக நடத்தப்பட்டது. ஆனல் புது மணப்பெண்ணிற்கு ஆஸ்துமா நோயுண்டு என்று சிறிது காலத்தில் தெரியவந்தது. புனவில் ஒரு வியாபாரி தமது புத்திரியைத் துகாராமிற்கு இரண்டாம் தாரமாக அளிக்கச் சம்மதித்தார். பதினருவது பிராயத்தில் அவருடைய இரண்டாம் திருமணம் நடந்தது. முதல் மனைவியின் பெயர் சுகமாயி, இரண்டாவது மனையாளின் பெயர் ஜிஜாயி.

இரண்டு ஆண்டுகள் ஆனந்தமாகக் கழிந்தன. கி. பி. 1625-ல் தந்தையார் காலமாகி விட்டார். குடும்பப் பொறுப்பு முழுவதும் துகாராமின்மீது விழுந்துவிட்டது. அவர் மிகுந்த தைரியத்துடன் எல்லாக் காரியங்களையும் சமாளித்தார். தம் தம்பி கான்ஹோபாவின் திருமணத்தை மிக விமரிசையாக நடத்திவைத்தார். உண்மையில் அவர் இத்திருமணத்திற்காக அளவுக்கு மேல் செலவு செய்ததையால் கடன் சுமை ஏற்பட்டுவிட்டது.

அடுத்த ஆண்டே அவர் தாயாரைக் கூட்டிக் கொண்டு க்ஷேத்திராடனத்திற்குப் புறப்பட்டுவிட்டார். இந்த நீண்ட பயணத்தினல் மிகுந்த செலவு ஏற்பட்டது.

தவிர அவர் திரும்பி வந்தபோது கடை வியாபாரம் அடியோடு மூழ்கிப் போயிருந்தது. கிராமத்தில் வேறொருவர் அவரது கடையைத் தம்முடையதுடன் இணைத்துக் கொண்டிருந்தார்.

கஷ்டங்கள் வரும்போது சேர்ந்தே வருகின்றன. நாட்டில் பயங்கரமான பஞ்சம் வேறு ஏற்பட்டுவிட்டது. எனவே துகாராமின் வறுமைக்கு ஓர் அளவே இல்லை. வியாபாரம் மூழ்கியபோதே மதிப்பும் கெட்டுவிட்டது. இப்போதோ, அவரை ஒருவனும் தன் வீட்டு வாசற்படியைக் கூட மிதிக்க விடவில்லை. இந்தப் பஞ்சத்திலே அவருடைய முதல் மனைவியும், மூத்த பையனும், தாயும் இறந்து விட்டனர்.

அவரது இளைய மனைவி ஜிஜாயி பணக்கார வீட்டுப் பெண். அவளுக்குத் தன் பிறந்தகத்தின் சுக வாழ்வு அடிக்கடி நினைவுக்கு வரும். புக்ககத்தின் கஷ்டங்களைக் கண்டு அவள் மிகவும் சிணுங்கினாள். ஆத்திரத்தில் அவள் துகாராமிடம் கடுமையாகப் பேசினாள். அப்பேச்சினாலாவது துகாராம் நிலைமையை உணரவேண்டும் என்பது அவளது விருப்பம். ஆனால், மனைவியின் சுடு சொற்களால் அவர் மனம் மிகவும் புண்பட்டது. கடுஞ் சொற்களைக் கேட்டுத் துன்புற்று, 'விட்டல் விட்டல்' என்று சொல்லிக்கொண்டே கோவிலுக்குள் சென்று விடுவார். மனைவியின் வசைப் பாடல்களால் துன்புற்ற அவர் இரண்டொரு தடவை விபரீதமாக ஏதேனும் செய்யலாம் என்று எண்ணியதுமுண்டு.

அவர் கடை வேலையைத் தம்பி கான்ஹோபாவிடம் ஒப்படைத்துவிட்டு, வேறோர் வியாபாரியின் பண்டங்களை

அடுத்த கிராமத்திற்குக் கொண்டு செல்லும் வேலையை ஏற்றுக் கொண்டார். மூட்டைகளைக் காளைகளின்மீது சுமத்தி அவைகளை ஓட்டிக்கொண்டு வீட்டிலிருந்து துகாராம் புறப்பட்டார். நடந்துகொண்டே ஸ்ரீ விட்டலனைப் பாட ஆரம்பித்து, அப்பாடல்களிலேயே மனம் லயித்து விட்டார். போகவேண்டிய இடத்தை அடைந்ததும் பார்த்தால் ஓர் காளை காலியாக இருந்தது. அதன் மீதிருந்த மூட்டைகளை வழியில் திருடர்கள் எடுத்துச் சென்றிருக்க வேண்டும், அல்லது காளை மாடே எங்கேனும் அவற்றைத் தள்ளியிருக்கவேண்டும். சாமான் கொண்டு சேர்த்த கூலி கிடைப்பதற்குப் பதில், அவரே தொலைந்த மூட்டைகளின் விலையைக் கையிலிருந்து கொடுக்க நேர்ந்துவிட்டது. வெளியே ஜனங்கள் அவரது மூடத்தனத்தையும் விட்டல் பஜனையையும் கேலி செய்தனர். வீட்டிற்குள் ஜிஜாயி அவருக்குப் பெரும் தொந்தரவு கொடுத்தாள். இனி இவ்வாறு கவனக் குறைவாக இருக்கக் கூடாதென்று அவர் தீர்மானித்துக் கொண்டார். ஆனால் இப்போது அவருக்கு அந்தக் கூலி வேலை கிடைப்பதும் அரிதாகிவிட்டது.

இறுதியில் அவர் இங்குமங்குமாகச் சிறிது பணம் சேகரித்து மிளகு வாங்கி, அதை அடுத்த கிராமத்தில் விற்று வர எடுத்துச் சென்றார். அங்கே ஒரு தந்திரக்கார வியாபாரி விலையிலும் நிறுவையிலும் அவரை ஏமாற்றி விட்டான். அதுமட்டுமல்ல, கொடுக்கவேண்டிய விலையை ரொக்கமாகக் கொடுக்காமல் தங்கமாகக் கொடுத்தான். ரொக்கத்தை எடுத்துச் செல்வதைவிட, தங்கக்காப்பை எடுத்துச் சென்றால் வழியில் ஏதும் ஆபத்து நேராது என்று வேறு அவருக்கு அறிவுறுத்தினான். வீட்டுக்கு வந்து சேர்ந்ததும், அக் காப்பின் மேற்பாகம் மட்டுமே தங்கமெனவும், உள்ளே

பித்தளையே நிறைந்திருந்தது எனவும் தெரிந்தது. இதை யெல்லாம் கண்ட ஜிஜாயி அவர்மீது எரிந்து விழுந்தாள். ஆனால் என்ன செய்வது?

இதற்குப் பின்னர், ஜிஜாயி தனது தந்தையிட மிருந்து இருநூறு ரூபாய் வாங்கி வந்தாள். அதற்கு உப்பு வாங்கி, அதனை விற்று வருமாறு அவள் துகாராமைக் கன்னட நாட்டிற்கு அனுப்பினாள். இந்தத் தடவை அவர் மிகவும் ஜாக்கிரதையாக நடந்துகொண்டார். இருநூறு ரூபாய் உப்பை ரூ. 250க்கு விற்றார். மிகுந்த மகிழ்வுடன் விட்டலனைப் பஜனை செய்து கொண்டே திரும்பினார். வழியில் ஓர் ஏழைப் பிராமணன் வந்து சேர்ந்தான். அவன் அவரிடம் தனது சோகக் கதையைக் கூறினான். அவனது ஏழ்மையைக் கண்டு துகாராமின் இதயம் இளகிவிட்டது. தம்மிடமிருந்த தொகையில் பெரும் பகுதியை அவர் அவனுக்கு அளித்துவிட்டார். வீட்டிற்கு வந்ததும் பழைய பல்லவிதான். ஜிஜாயி நடந்ததையெல்லாம் கேட்டுவிட்டுத் தலையில் அடித்துக் கொண்டாள்.

துகாராம் துக்கமடைந்தவராக வீட்டிலிருந்து வெளி யேறினார். இந்திராயணி என்ற ஆற்றிற்கு வடக்கே எட்டு மைல் தூரத்திலுள்ள மாமநாத் மலையின்மீது ஏறி அமர்ந்துகொண்டார். அங்கு தனிமையிலே அவர் எண்ண லானார்: "நான் இந்தக் குடும்பத்திற்காக வேலை செய்து செய்து உலகின் துன்பங்களால் நன்கு வாட்டப்பட்டு விட் டேன். யாவருமே பண லாபத்தைத்தான் கருதுகின்றனர். என்மீது யாருக்குமே இரக்கமில்லை. நான் இப்போது இந்த உலகியலினால் மிகவும் பயந்து விட்டேன். எனவே,

பாண்டுரங்கா, இப்போது நீதான் எனது தாய். நான் உன்னேயே தஞ்சம் புகுந்துள்ளேன்."

அவர் அங்கேயே பதினேந்து தினங்கள் அமர்ந்திருந்ததாகக் கூறப்படுகிறது. ஜிஜாயி நடுங்கிவிட்டாள். தம்பி கான்ஹோபாவை அவரிடம் அவள் அனுப்பினுள். அவன் அவரை மிகவும் சமாதானம் செய்து வீட்டிற்கு அழைத்துச் சென்ருன். அவர் வீட்டிலேயே இருக்கத் துவங்கிவிட்டார். வீட்டில் வேலேயேதும் செய்வதில்லே. காலேயில் எழுந்ததும் ஸ்ரீவிட்டலனேப் பூஜிப்பார், பின்பு தனிமையில் அமர்ந்து ஞானேச்வரி என்ற நூலேயோ, பாகவதத்தையோ பாராயணம் செய்வார். இரவில் எங்கெல்லாம் ஹரி கீர்த்தனம் நடக்கிறதோ, அங்கெல்லாம் சென்று ஹரிகுணங்களேயும் பக்தர்களின் உபந்நியாசங்களேயும் கேட்பார்.

இப்போதெல்லாம் ஜிஜாயியும் அவரிடம் ஏதும் பேசுவதில்லே. ஆனுல் அவள் அவரை வீட்டுக் காரியத்தில் ஈடுபடுத்துவதற்காக, கடன்காரரிடமிருந்து கடன் வசூலிக்கும் வேலேயை மட்டும் ஒப்படைத்தாள். இந்த வேலேயை முதலில் துகாராம் ஏற்றுச் செய்தாரெனினும், விரைவிலேயே அது அவருக்கு அலுத்துப் போய்விட்டது. ஏனெனில், அவர் வருவதைக் கண்டு கடன்காரர்கள் முகத்தைத் திருப்பிக் கொண்டனர், அல்லது பொய் கூறினர். இதைக் கண்டு துகாராமின் மனதில் ஓர் எண்ணம் எழுந்தது. "இந்தக் காரியம் மிகவும் கெட்டது. பகவானே நினேப்பதற்குப் பதில் பணத்தை நினேக்கவேண்டியிருக்கிறது. அத்துடன் பிறரைப் பொய் பேசத் தூண்டிவிட்டவனும் ஆகிறேன்." நானே ஈசனிடம் இவ்வுடலேக் கடன்

பெற்றுள்ள கடன்காரன். நான் எனது கடனை அடைப்பதற்கு முன்பு, பிறரிடம் என் கடனைக் கேட்க என்ன உரிமை படைத்துள்ளேன்?''

இவ்வாறு எண்ணியவராய் அவர் பாதிக் கடன் தொகைக்கான பத்திரங்களைத் தம்பியிடம் கொடுத்தார். தமது பங்குக்கான காகிதங்களை நதியில் போட்டுவிட்டார்.

துகாராம் இவ்வாறு எல்லாவிதக் குடும்பச் சிக்கல்களிலிருந்தும் விடுபட்டுவிட்டார். இதன் பின்பு அவர் என்றுமே பணத்தைக் கையினுல் தொடவேயில்லை. அவரது காலமெல்லாம் விட்டலனைப் பஜனை செய்வதிலேயே கழிந்தது. கிராமத்தில் முன்னோர்கள் கட்டிய விட்டலன் கோவில் ஒன்று இருந்தது. அதை அவர் தமது கையினுலேயே பழுது பார்த்தார். முன்பு அவர் பிறரது பஜனைகளைக் கேட்கச் சென்று வந்தார். இப்போது அவர் தமது கோவிலில் தாமே பஜனை நடத்த ஆரம்பித்தார். அவரது பாடல்களில் சுவை மிகுந்திருந்தது. தாமே பல பக்திப் பாடல்களை இயற்றி பக்தர்களுக்குப் பாடி வந்தார். இதனுல், அவரது புகழ் நாட்டில் வெகு தூரம் வரை பரவி விட்டது. அதைக் கேள்விப்பட்ட ராமேசுவர பட்டன் என்ற மகாவித்துவானுன கன்னட பிராமணன் அவர்மீது குற்றம் சாட்டினுன். "துகாராம் தமது பஜனைப் பாடல்களில் ஆண்டவனது நாம பஜனையின் பெருமையை எடுத்துக் கூறி வெகுளியான மக்களைத் தொன்று தொட்டு வரும் வைதீக மார்க்கத்திலிருந்து பிறழச் செய்கிறுர். ஈசுவர தரிசனம் என்று கட்டுக்கதை கூறி ஏழை மக்களை மயக்கி விடுகிறுர்.'' அவன் கிராம முன்சீப்பிடம் புகார் கூறி

துகாராமை தேகு கிராமத்திலிருந்து வெளியேறும்படி உத்திரவிடச் செய்தார்.

இந்த உத்தரவைக் கேட்டதும் துகாராம் மிகவும் வருத்தங்கொண்டார். உடனே அவர் ராமேசுவர பட்டனிடம் ஓடோடிச் சென்று தாம் புரிந்த குற்றம் என்னவென்று கேட்டார். பண்டிதன் கூறினுன்: "உனது கீர்த்தனைப் பாடல்களில் வேதங்களின் கருத்து வருகிறது. நீயோ சூத்திர வகுப்பில் தோன்றியவன். நீ வேதப் பொருளை ஏற்க அருகதை அற்றவன். நீ இவ்வாறு செய்து, கேட்பவரையும், உன்னையும்கூடப் பாவத்திற்கு ஆளாக்கிக் கொள்கிருய். எனவே, இன்றிலிருந்து கீர்த்தனை இயற்றுவதை விட்டுவிடு".

துகாராம்: நான் விட்டலனது ஆணையால் கவிதை செய்கிறேன். தாங்கள் பிராமணர், தேவர்களும் மதிக்கத் தகுந்தவர். தங்களது ஆணையை நானும் மதிக்கவேண்டும். நான் இன்று தொடங்கிக் கீர்த்தனை இயற்றமாட்டேன். ஆனல் இதுவரை இயற்றிய கீர்த்தனைகளை என்ன செய்வது?

விடை கிடைத்தது: "இயற்றிய பாடல்களை நதியில் மூழ்கடித்துவிட்டு இனி புதிய பாடல்களை நீ இயற்ருமலும் இருந்தால், உத்தரவைத் திரும்பப் பெற சிபாரிசு செய்கிறேன்".

துகாராம் வீட்டிற்கு வந்தவுடன் கீர்த்தனை ஏட்டை எடுத்துச் சென்று ஆற்றில் போட்டுவிட்டார். மக்கள் இதைக் கண்டு "நீர் செய்தது சரியன்று, கடன் பத்திரத்தை நதியில் எறிந்து இகவாழ்வை இழந்தீர்; இப்

போது கீர்த்தனைகளை வீசியெறிந்து மேல் வாழ்வையும் (மோட்சத்தை) இழந்து நிற்கிறீர். இவ்வாறு இரண்டுங் கெட்ட நிலையை நீரே உமக்கு விளைவித்துக் கொண்டு விட்டீர்", என்றனர்.

யோசித்துப் பார்த்தவுடன் துகாராமிற்கு அது உண்மை என்று பட்டது. இகத்திற்கும் ஒன்றுமில்லை, பரத்திற்கும் ஒன்றுமில்லையானால், உயிர் வாழ்வதானால் என்ன லாபம்? அவ்வளவுதான், அங்கேயே நதிக்கரையில் ஒரு பாறையின்மீது அமர்ந்தார். அவர் உண்ணாவிரதம் பூண்டு உயிர்விட நிச்சயித்து விட்டார்.

பதின்மூன்று நாட்கள் அப்படியே தண்ணீர்கூடக் குடிக்காமல் ஆண்டவனது தியானத்திலேயே அவர் அமர்ந் திருந்தார். பதின்மூன்றும் நாள் அவருக்கு ஆண்டவன் தரி சனம் தந்தான் என்றும், அவரது கீர்த்தனை ஏடு மறுபடி தோன்றி நதியில் மிதப்பதை மக்கள் கண்டனரென்றும் கூறப்படுகிறது. உடனே பக்தர்கள் நதியில் குதித்து ஏட்டை எடுத்து வந்து அவரிடம் கூறினர்: "மகாராஜ், எழுந்திருங்கள். தங்களது பக்தியை மெச்சி இறைவன் தங்களது கீர்த்தனையேட்டை மூழ்காமல் காப்பாற்றி விட்டான். இதோ எழுந்து பாருங்கள்".

ஏடு நனையக்கூட இல்லை. துகாராம் ஆனந்தத் தால் விம்மினார். இதன் பின்னர், மறுபடியும் கீர்த்தனைப் பாடல்களை அவர் இயற்றலானார். ராமேசுவரபட்டன் இந் நிகழ்ச்சியைக் கேட்டதும், தானே துகாராமின் பக்தனாகி விட்டான்.

துகாராம் தேகுவைத் தவிர வேறு கிராமங்களிலும் வெகு விமரிசையாகப் பஜனை செய்து வந்தார். ஒரு கிரா

மத்தின் தலைவன் அவரிடம் மிகுந்த பக்தி பூண்டிருந்தான். ஒரு சமயம் அவன் தனது நோயுற்ற குழந்தையை வீட்டிலேயே விட்டுவிட்டு அவரது பஜனையைக் கேட்கச் சென்றான். கொஞ்ச நேரத்தில் குழந்தையின் மூச்சு நின்றுவிட்டது. அதன் தாய் கடுங்கோபத்துடன் குழந்தையை அந்த நிலையிலேயே பஜனை நடக்கும் இடத்துக்குக் கொண்டுவந்தனள். அப்போது துகாராம் பாடிக் கொண்டே விட்டலன் நாமத்தை முழங்கினர் என்று கூறுகின்றனர். சபை முழுவதும் தாளம் போட்டுக்கொண்டே, விட்டலநாம பஜனையில் மூழ்கிவிட்டது. குழந்தையின் உயிர் திரும்பிவிட்டது. அதுவும் தன் பிஞ்சுக் கரங்களால் கண் திறந்து தாளம் போடத் துவங்கிவிட்டது.

துகாராமைப்பற்றிய இத்தகைய நிகழ்ச்சிகள் பல பிரசித்தமானவை. அவரது புகழ் வெகுதூரம் வரை பரவியிருந்தது. மக்கள் வந்து அவரது கீர்த்தனைகளை எழுதிக் கொண்டு சென்றனர். இவையாவும் இன்றும் மகாராஷ்டிரத்தில் மிக்க அன்புடன் பாடப்படுகின்றன.

இவ்வாறு புகழுற்ற நிலையிலே, நாற்பத்திரண்டாம் வயதில், சித்திரை மாதம் கிருஷ்ணபக்ஷம் இரண்டாம் நாளில் துகாராம் உடலை நீத்துவிட்டார். துகாராம் காரணமாக தேகு கிராமம் மகாராஷ்டிரத்தில் ஒரு க்ஷேத்திரமாக ஆகிவிட்டது.

அங்கு சித்திரை மாத கிருஷ்ணபக்ஷ இரண்டாம் நாள் துவங்கி ஐந்து தினங்கள் வரை, ஆயிரக்கணக்கான மக்கள் ஒவ்வோராண்டும் அவரது நினைவு நாளைக் கொண்டாடுவதற்குக் கூடுகின்றனர். தேகு கிராமத்தில் துகா

ராமின் கோவில் கட்டப்பட்டுள்ளது. துகாராம், மராட்டியுடன் ஹிந்தியிலும் சில பாடல்களை இயற்றியுள்ளார். அவரது ஹிந்திக் கவிதைகளில் மராட்டி, குஜராத்தி இரண்டு மொழிகளின் கலப்பும் தெளிவாகத் தெரிகிறது.

சாது துகாராம் தமது மானம், அன்பு, பக்தி ஆகியவை காரணமாக நண்பர்கள், பகைவர்கள் எல்லோருடைய அன்பிற்கும் மதிப்பிற்கும் உரியவராகிவிட்டார். இதுவே அவரது வாழ்க்கையின் தனிச் சிறப்பாகும். பேராசை, கோபம், மயக்கம் ஆகிய துர்க்குணங்கள் அண்ட முடியாதவராக, உண்மையிலேயே உலகைத் துறந்த ஒரு ஞானியாக அவர் திகழ்ந்தார்.



# சிவாஜி

சிவாஜியின் பெயரைப் பாரதத்தின் ஒவ்வொரு குழந்தையும் அறியும். வீடுதோறும் தாய்மார்கள் தமது பிள்ளைகளுக்கு அவரது வீரக் கதைகளைச் சொல்லி வருகின்றனர். சிவாஜி போன்ற வீரரைப் பெற்றெடுத்த காரணத்தினாலேயே பாரதத் தாயும் வீரமாதா என்று அழைக்கப்படுகின்றாள். தாயிடம் பக்திகொண்ட உதாரணப் புதல்வராகவும், திறமை படைத்த ஆட்சியாளராகவும், ஒப்பற்ற வீரராகவும், அரசராகவும் அவர் விளங்கினார். இதனால்தான் உலகத்தின் மாபெரும் மனிதர்களுள் ஒருவராக அவர் கருதப்படுகின்றார்.

பாரத நாட்டின் தென் மேற்கில் உள்ள மகாராஷ்டிரப் பிரதேசத்தில் சிவாஜி பிறந்தார். அவருடைய

தந்தையாரின் பெயர் ஷாஜி போஸ்லே ; தாய் ஜீஜாபாய். இவ்விருவரது திருமணக் கதை மிகவும் சுவையானது. ஜீஜாபாயின் தந்தை லக்கூஜி யாதவராவ் அகமது நகர் ராஜ்யத்தின் சேனாபதியாகவும், பெரிய ஜாகிர்தாராகவும் இருந்தார். ஷாஜியின் தந்தை மாலோஜி அவரது படை யிலே ஒரு குதிரை வீரராக இருந்தார். ஷாஜி மிகவும் அழகிய சிறுவன். அவனிடம் யாதவராவுக்கு மிகுந்த அன்பு உண்டு.

ஒரு சமயம் ஹோலிப் பண்டிகையன்று சேனாபதி வீட்டில் ஆட்டமும் பாட்டுமாக விழா நடந்து கொண்டிருந் தது. ஐந்து வயதுச் சிறுவன் ஷாஜியும், மூன்று வயதுச் சிறுமி ஜீஜாபாயும் கூட வண்ணப்பொடி கொண்டு ஹோலி விளையாடினர். யாதவ் ராவ் சிரித்துக்கொண்டே கூறினர்: "ஆண்டவன் இச்சிறுமியை எவ்வளவு அழகியாக்கி உள் ளான். ஷாஜியும் அழகில் இவளுக்கு ஒப்பாகவே இருக்கி ருன். ஈசன்தான் இப்பொருத்தமான ஜோடியைச் சேர்த்து வைக்கவேண்டும்".

மாலோஜி இந்த வேடிக்கைப் பேச்சைப் பெரிதாக்கி விட்டார். இரு குழந்தைகளுக்கும் திருமணம் நிச்சயமாகி விட்டது என்றே அவர் கூறத் துவங்கிவிட்டார். ஜீஜா பாயின் தாய் கிரிஜாபாய் மிகுந்த வீரமும் புத்தியும் படைத்த பெண்மணி. இவ்வார்த்தையைக் கேட்டு அவள் தனது கணவரிடம், "இந்த ஏழை, தறுதலை, ஒரு சாதாரணக் குதிரை வீரனது பையனுக்கா என் பெண்ணைத் திருமணம் செய்வது ? திருமணமென்பது சம அந்தஸ்து உள்ளவர்க ளிடையே நடக்க வேண்டியது. நீங்களும்தான் எப்படி இந்த மூடச் செயலைச் செய்தீர்கள் ?" என்று கூறினள்.

யாதவ் ராவ், இருதினங்களுக்குப் பின் மலோஜியை வேலையிலிருந்து நீக்கிவிட்டார்.

மாலோஜி தன் கிராமத்திற்குச் சென்று பயிர்த்தொழில் செய்ய ஆரம்பித்தார். ஒரு நாள் இரவு வயலைக் காத்துக் கொண்டிருந்தபோது, ஒரு பொந்திலிருந்து பெரிய நாக மொன்று வெளியே வந்துவிட்டுச் சிறிது நேரத்தில் மறுபடியும் உள்ளே செல்வதை அவர் கண்டார். நிரம்பப் பணம் கிடைக்குமென்று நம்பிக்கையுடன் மாலோஜி அந்த இடத்தில் தோண்டினார். அங்கு அவருக்குத் தங்க மோகராக்கள் நிறைந்த ஏழு கடாரங்கள் கிடைத்தன. பின்பு என்ன! சிறிது காலத்துக்குள் மாலோஜியும் நிஜாம் ஷா சுல்தானிடம் சேனாபதியாகிவிட்டார். இவ்வாறு அவர் யாதவ் ராவிற்குச் சம அந்தஸ்தைப் பெற்றதும் ஷாஜி-ஜீஜாபாய் திருமணம் கோலாகலமாக நடந்தேறியது.

1627 ஏப்ரல் 27-ந் தேதி சிவாஜி பிறந்தார். (சிலர் ஏப்ரல் 6 என்றும், சிலர் ஏப்ரல் 10 என்றும் கூடச் சொல்கிறார்கள்). அப்போது அவரது தாய் ஜுன்னர் நகருக்கு அருகில் சிவனேரி மலைக் கோட்டையில் வசித்து வந்தாள். அவள் தனக்கு நல்ல பிள்ளை பிறக்க வேண்டுமென்று கோட்டைத் தெய்வமாகிய சிவா பவானி அம்பிகையை வேண்டியிருந்தாள். இதனாலேயே மகனுக்குச் சிவா என்று பெயரிட்டாள். அப்போது ஷாஜி போர்களிலும் உத்தியோக அலுவல்களிலும் ஈடுபட்டிருந்தமையால், வீட்டிற்கு வந்து போகக்கூட இயலவில்லை. அவர் நிறையப் பணம் சம்பாதித்தார். பற்பல ஜாகீர்களைப் பெற்றார். இதே சமயத்தில்தான் அவர் துகாபாய் மோஹிதே என்பவளை இரண்டாவது திருமணம் செய்து கொண்டார். அவளுடன்

புதிய ஜாகீரில் வசிக்கத் துவங்கினர். ஜீஜாபாயிக்கு இத ஞல் மிகுந்த வருத்தமேற்பட்டது. அவள் சிவாஜியை உடன் கொண்டு புனவிற்கு அருகில் இருந்த ஒரு சிறிய ஜாகீரிலே வசிக்கச் சென்று விட்டாள். இவ்வாறு, பிறந்த திலிருந்து பத்து வயது வரை சிவாஜி தமது தந்தையைப் பார்த்ததே அரிது. அதன் பின் ஷாஜி முற்றிலும் பிரிந்து போய்விட்டார்.

விசுவாசமுள்ள பணியாளராகிய தாதாஜி கோண்ட தேவை, இந்த ஜாகீரின் மேற்பார்வையாளராக ஷாஜி நியமித்தார். மற்றப்படி அவர் தமது மனைவியையும் பிள்ளை யையும் கவனிக்கவேயில்லை. தாதாஜி இவ்விருவரும் இருப்பதற்காகப் புனவில், 'சிவப்பு மாளிகை' என்ற பெயர் கொண்ட ஒரு பங்களாவைக் கட்டினர். ஜீஜாபாயின் வாழ்க்கை இப்போது ஒரு துறவியின் வாழ்வு போன்று சாதாரணமாகவும் சுவையற்றதாகவும் ஆயிற்று. அவள் மனம் மதத்தில் மிகவும் ஈடுபட்டது. அதன் பயன் சிவாஜி யிடம் நன்கு புலப்பட்டது. மகனுக்கு ராமாயண, மகாபாரதக் கதைகள் பலவற்றை ஜீஜாபாய் சொல்வாள். சிவாஜிக்கு அவள் வீர உணர்ச்சியை ஊட்டி வளர்த்து வந்தாள். கல்வி கற்காவிடினும் பாரத தேசத்தின் லட்சியத்தையும் பண் பாட்டையும் சிவாஜி நன்ருக உணர்ந்திருந்தார். கதைகள், சாஸ்திர உபதேசங்கள் நடக்கும் இடங்களுக்கெல்லாம் சிவாஜி கட்டாயம் போய்ச் சேர்ந்துவிடுவார். இவ்வாறு அவருக்குப் பாரதத்தின் பழைமை வேதங்கள், தருமம், கதை களின் சீரிய இலட்சியங்கள் எல்லாம் நன்கு தெரியவந்தன. பிற்காலத்தில் அவர் தமது அரசியலுக்கும் மதக் கோட் பாட்டிற்கும், போர்க் கலைக்கும், ஆட்சி முறைக்கும் இவ்வறி வையே அடிப்படையாக்கிக் கொண்டார்.

சிவாஜி இளமை முதலே தம் காரியங்களைத் தாமே செய்யும் வழக்கத்தைக் கற்றுக் கொண்டார். இதனால் அவரது அறிவு, காரியத் திறமை, பொறுமை ஆகிய குணங்கள் வியக்கத்தக்க வகையில் வளர்ச்சியடைந்தன. இவை காரணமாகவே அவரது உள்ளத்தில் உறுதியான சுதந்திர உணர்ச்சியும் தோன்றியது. அவரது நல்லொழுக்கத்தை உருவாக்கியதில் பெரும் பங்கு தாயையே சாரும். தாதாஜி கோண்டதேவ் அவரை ஆற்றலும், வீரமும், போர்க்கலைத் திறமையும் படைத்த வாலிபர் தலைவனாக உருவாக்கினார். சமர்த்த குரு ராமதாசர் அவரைத் திறம்படைத்த அரசியலறிஞராகவும், மதச் சார்புள்ள அரசராகவும், நாட்டின் நிருமாண கர்த்தாவாகவும் ஆக்கிவைத்தார்.

புனா மாவட்டத்தின் மேற்குப் பக்கத்தில் ஒரு பெரிய நிலப்பரப்பு உள்ளது. அதற்கு அப்போது 'மாவல்'—அதாவது சூரியன் அஸ்தமிக்கும் நாடு—என்று பெயர். அங்கு, 'கோலி' என்ற இனத்தவர் அநாகரிக வாழ்க்கை நடத்தி வந்தனர். அவர்கள் கொலை, கொள்ளைகள் செய்தே பிழைத்து வந்தனர். தாதாஜி கோண்டதேவ் இம் மக்களையெல்லாம் நாகரீகர்களாக்கினார். பயிர்த் தொழிலில் ஈடுபடுத்தி, இவர்களது வாழ்க்கைத் தரத்தை உயர்த்தினார். இம்மக்களே சிவாஜியின் படை வீரர்களாகி, பெரிய பெரிய ராணுவப் பதவிகளையும் அடைந்தனர். தாதாஜி திறமை படைத்த ஜாகீர்தாராகவும், சமுதாயத்தை ஒன்றுபடுத்துபவராகவும், மத நம்பிக்கை நிறைந்தவராகவும் இருந்தார். சிவாஜி அவரைத் தம் தந்தை போன்று மதித்து வந்தார். தாதாஜியும் சிவாஜியைத் தம் பிள்ளை போன்று பாவித்து வந்தார். அவர் தாமே சிவாஜிக்குக் குதிரை ஏற்றம், வில்-

வாள் பயிற்சி ஆகியவற்றைக் கற்றுக் கொடுத்தார். சிறு பிராயத்திலேயே தாதாஜி அவரை மிகுந்த ஆற்றல் வாய்ந்த வராக ஆக்கிவிட்டபடியால், அவ்வித்தைகளில் பெயர் பெற்றிருந்தவர்களால்கூடச் சிவாஜியை எதிர்த்து நிற்க இயலவில்லை.

சிவாஜி பெரிய சுதந்திரப் பிரியராக இருந்தார். தந்தையைப்போன்று ஏதேனுமோர் சுல்தானின் ஜாகீர் தாராக இருக்க அவர் விரும்பவில்லை. மிகச் சிறியதாக அமைந்தாலும் சரி, தமக்கென ஒரு சுதந்திர ராஜ்யத்தை ஸ்தாபிக்க வேண்டும் என்று அவர் உறுதி கொண்டிருந் தார். இந்த இலட்சியத்துடன் அவர் நம்பிக்கைக்குரிய மாவலி வீரர்களின் படையை அமைத்திருந்தார். சில துணைவர்களுடன் கொங்கண மலைப்பிரதேசத்தில் அவர் நன்கு சுற்றுப்பயணம் செய்தார். அங்கிருந்த பல்வேறு கோட்டைகளின் இரகசிய வழிகளை அவர் அறிந்து கொண் டார். அவற்றைக் காத்து நிற்பவர்களின் சரியான எண் ணிக்கை, போர்க் கருவிகள் ஆகியவற்றையும் தெரிந்து கொண்டார். அவற்றுள் ஒரு கோட்டையைக் கைவசப் படுத்தத் திட்டமும் தீட்டினார்.

கி. பி. 1646-ல் பீஜாப்பூர் ராஜ்யத்தின் நிலை ஊசலாடிக் கொண்டிருந்தது. சிவாஜி இந்த நல்ல சந்தர்ப் பத்தைப் பயன்படுத்திக் கொண்டார். தமது மாவலி வீரர் களின் உதவியுடன் தோரண் என்ற கோட்டையை அவர் பிடித்து விட்டார். அங்கு, கஜானாவில் சேர்ந்திருந்த இரண்டு லட்சம் ஹோன் (சுமார் எட்டு லட்சம் ரூபாய்) அவர் கையில் சிக்கிற்று. தோரணிலிருந்து தென் கிழக்கில் சுமார் நான்கு மைல் தூரத்தில், மலையின் மற்றோர் சிகரத்

தின்மீது ஒரு புதிய கோட்டையைச் சிவாஜி கட்டுவித்தார். இதற்கு ராஜ கோட்டை என்று பெயர் வைத்தார். இதற்குக் கீழே சுற்று மதிலுக்குள்ளேயே மூன்றிடங்களில் கிராமங் களையும் அவர் அமைத்தார்.

1647 மார்ச் 7 உ தாதாஜி மரணமடைந்து விட்டார். இறக்கும்போது அவர் சிவாஜியிடம் பின்வருமாறு கூறினர்: "பவானி ஈசுவரி உனக்குக் காட்டியிருக்கும் பாதையிலேயே செல். உன் விருப்பங்கள் எல்லாம் நிறைவேறும்."

தாதாஜி கூறிய இச்சொற்களால் சிவாஜியின் உற்சாகம் இரட்டிப்பாயிற்று. ஒரு வருடத்திற்குள்ளே அவர் கோட்டையதிகாரியை வசமாக்கிக் கொண்டு, பீஜப் பூர் சுல்தானுடைய கோண்டாணுக் கோட்டையைப் பிடித்து விட்டார். இதன்பின் அவர் பீஜாப்பூர் ராஜ்யத்தின் பல நிலப்பகுதிகளை இணைத்து, தமது ராஜ்யத்தின் பரப்பை அதிகப் படுத்திக் கொண்டார். கோண்டாணுக் கோட்டை யின் பெயரை, சிங்கக் கோட்டை என்றும் மாற்றினர்.

ஆனால் இப்போது சிவாஜி ஒரு பெரும் கஷ்டத்திற்கு உள்ளானர். பீஜாப்பூர் சுல்தான் அவருடைய தந்தை ஷாஜியைக் கைது செய்து அவருடைய படைகளையும், சொத்துக்களையும் பறிமுதல் செய்து விட்டான். தந்தை யின் உயிரைக் காப்பதற்காக அவர் பங்களூர், கோண்டாணு, கந்தப்பி ஆகிய மூன்று கோட்டைகளைத் திரும்ப அளித்து, பீஜாப்பூர் சுல்தானுடன் உடன்படிக்கை செய்துகொள்ள நேர்ந்தது. இதன் பின்பு 1650-ஆம் ஆண்டிலிருந்து 1655 வரை சிவாஜி எந்த இடத்திலும் ஆக்கிரமிப்புச் செய்ய வில்லை. அப்போது அவர் அமைதியாகத் தமது ராஜ்யத்தை

உறுதிப்படுத்துவதிலும், படைபலத்தை வலுப்படுத்துவதிலும் ஈடுபட்டிருந்தார். எனினும், அதே சமயத்தில் அவர் புரந்தரக் கோட்டையைப் பிடித்துக் கொண்டார். அதைக் காத்து நின்ற மூன்று சகோதரர்களின் ஜீவனத்திற்காக ஒரு கிராமத்தை அளித்தார். பீலாஜி என்ற ஒருவருக்குத் தமது படையில் உயர் பதவி ஒன்றையும் அளித்தார்.

சிவாஜியின் ராஜ்யவிஸ்தரிப்புப் பணியில் ஒரு பெருந் தடை குறுக்கிட்டது. ஜாவலி அரசரான சந்திரராவின் உருவத்தில் அது வந்தது. சிவாஜி எவ்வளவோ முயன்றும் அவருடன் ஒத்துழைக்க சந்திரராவ் சம்மதிக்கவில்லை. எனவே, தமது பாதையில் முள்ளாக அமைந்த ராவைச் சிவாஜி வேறு வழியின்றிக் களைந்தெறிய நேரிட்டது. இதன் பயனாக அவர்க்குப் பெரியதோர் பிரதேசமும், மிகுந்த பணக்குவியலும் கிடைத்தன. இப்போது அவரது ராஜ்யத்தின் அஸ்திவாரம் உறுதிப்பட்டது. ஜாவலியிலிருந்து இரண்டு மைல் தூரத்தில், பிரதாப்கட் என்ற ஒரு பெரிய கோட்டையைச் சிவாஜி அமைத்தார். அங்கு அன்னை பவானிக்கு அவர் ஒரு கோவிலைக் கட்டினார். இந்த பவானியே அவரது இஷ்ட தெய்வம்.

கி. பி. 1658-ல் டில்லி சிம்மாசனத்தைக் கைப்பற்ற முகலாய அரச குமாரர்களுக்குள்ளேயே கடும்போர் மூண்டது. சிவாஜி இந்த வாய்ப்பைப் பெரிதும் பயன்படுத்திக் கொண்டார். மேற்கு மலைத் தொடரைக் கடந்து வடகொங்கண நாட்டினுள் அவர் புகுந்து, பீஜாப்பூர் ராஜ்யத்தைச் சார்ந்த கல்யாண், பிவாண்டி என்ற இரு நகரங்களைக் கைப்பற்றினார். இத்துடன் அவருக்குப் பெரும் பணமும் கைக்கு வந்தது. இதன் பின்னர் அவர் கோலாபா மாவட்

டத்தைச் சார்ந்த சில இடங்களைத் தமது அதிகாரத்துக்கு உட்படுத்தி, பல கோட்டைகளைக் கட்டினார். போர்த்து கீசியர் வசமிருந்த பல கிராமங்களைச் சிவாஜியின் படை கைப் கைப்பற்றி, ஆசிரிக் கோட்டையில் முக்கியக் கேந்திரம் அமைத்துக் கொண்டது. கல்யாணுக்கு அருகில் உள்ள வளைகுடாவில் கப்பல்களையும் சிவாஜி கட்டுவித்தார். கடற் படைக்கும் இவ்வாறு அவர் அஸ்திவாரம் போட்டுக் கொண்டார்.

சிவாஜியின் வாழ்நாள் முழுவதிலும் அற்புதமான வீர நிகழ்ச்சிகள் நிறைந்து கிடக்கின்றன. அவைகளுள் பல மிகவும் பிரசித்தி பெற்றவையும் சுவையானவையும் ஆகும். அப்ஜல்கான் கொலையுண்டது இவைகளிலே ஒன்று. தெற்கிலிருந்து ஒளரங்ஜீப் சென்ற பின்பு பீஜாப்பூர் ராஜ்யத்திற்குச் சற்று அமைதி கிடைத்தது. அதன் சுல்தான் தானிழந்த பகுதிகளைத் திரும்பப் பெற விரும்பி, சிவாஜியைத் தன் முன்பு கொண்டு வந்து நிறுத்தும்படி, ஷாஜிக்கு ஆணை பிறப்பித்தான். "என்னால் துறக்கப்பட்டு விட்ட பிள்ளை சிவாஜி. நீங்கள் அவனைப் பிடித்து வேண்டிய தண்டனை அளிக்கலாம். எனக்காகத் தயங்க வேண்டாம்," என்று ஷாஜி பதிலளித்துவிட்டார்.

பீஜாப்புர் சுல்தான் இப்பொறுப்பை ஏற்றுக் கொள்ள முன்வருமாறு அரசவையில் இருந்த வீரர்களை அறைகூவி அழைத்தான். "இந்தப் போருக்குப் படைத் தலைவராக விரும்புபவர், இதோ தாம்பூலம் ஏற்றுக்கொள்ளலாம்," என்றான் அவன்.

மதிப்பு வாய்ந்த படைத்தலைவனான அப்ஜல்கான்

எழுந்து கூறினன்: "நான் குதிரை மீது அமர்ந்தே சிவாஜியைத் தோற்கடித்துக் கட்டிக்கொண்டு வருவேன்."

அப்போது இருந்த சில ஆங்கிலேயர்களின் கடிதங்கள் வாயிலாக ஒரு விஷயம் தெரிய வருகிறது. அதாவது, "நட்பு வேடம் போட்டு சிவாஜியை ஏமாற்றிக் கைது செய்துவா" என்று பீஜாப்புரின் பெரிய ராணி அப்ஜல் கானிடம் கூறினளாம்.

அப்ஜல்கான் வரும் விஷயத்தை அறிந்து கொண்டதும் சிவாஜியும் அவரது துணைவர்களும் கவலையடைந்தனர். இறுதியில் அன்னை பவானி சிவாஜியின் கனவில் தோன்றி, "குழந்தாய், நீ பயப்படாதே. நான் உன்னைக் காப்பேன். நீ அப்ஜல்கான்மீது படையெடுத்துச் செல். வெற்றி உனக்கே கிட்டும்" என்று கூறினுளாம்.

அன்னை ஜீஜாபாயும் கூறினுள்: "சிவா, வெற்றி உனக்கே."

அதன் பின்னர் விரைவிலேயே அப்ஜல்கான் ஒரு பிராமணத் தூதுவனை அனுப்பி, பீஜாப்புர் சுல்தான் நம்பிக்கைத் துரோகமிழைக்க விரும்பவில்லை என்று உறுதியளித்தான். ஆனல் அத்தூதுவனே இறுதியில் அப்ஜல் கான் நல்ல எண்ணக்காரன் அல்லன் என்பதை ஒப்புக் கொண்டான்.

கடைசியில் சிவாஜி-அப்ஜல்கான் சந்திப்புத் திட்டத்தை இருதரப்பினரும் ஒப்புக் கொண்டனர். அப்ஜல் கான் பல்லக்கில் அமர்ந்து வந்தான். அவன் இடுப்பில் வாள் தொங்கிக் கொண்டிருந்தது. சிவாஜி பார்ப்பதற்கு

ஆயுதமற்றவராகத் தென்பட்டார். ஆனால், அவர் இடது கையில் புலிநகம் அணிந்திருந்தார். தமது சட்டைக் குள்ளே இரும்புக் கவசமும் அணிந்துகொண்டிருந்தார். தலைப்பாகைக்குள் எஃகுத் தொப்பியும் வைத்திருந்தார். இருவருடனும் நான்கு நான்கு மெய்காப்பாளர்கள் இருந்த னர். இருவரும் எதிரும் புதிருமாக ஒருவரை யொருவர் தழுவிக்கொள்ள விரைந்தபோது, மெலிந்த, குட்டையான உடலமைந்த சிவாஜி அப்ஜல்கானின் கழுத்து மட்டமே இருந்தார். பருத்துயர்ந்த அந்தச் சேனாபதி சிவாஜியின் கழுத்தைப் பிடித்து நெறித்தான். அத்துடன் அவரது வயிற்றுப் பக்கம் வாளால் குத்தினான். ஆனால், இரும்புக் கவசம் காரணமாகச் சிவாஜி உயிர் தப்பிவிட்டார்.

அவர் மிக விரைவில் அப்ஜல்கானின் வயிற்றினுள் புலி நகத்தைப் பாய்ச்சி, வயிற்றைக் கிழித்து, குடலை வெளியே இழுத்துவிட்டார். பின்பு, கானின் பிடியி லிருந்து தமது கழுத்தை விடுவித்துக் கொண்டு வெளி யேறித் தமது துணைவர்களுடன் சேர்ந்து கொண்டார்.

இதைத் தொடர்ந்து, கீழே கிராமத்திற்கு அருகில் புதர்களில் மறைந்திருந்த மராட்டியப் படை பீஜாப்பூர் படையின்மீது பாய்ந்து வந்தது. மூன்று மணி நேரம் யுத்தம் நடந்தது. அதில் பீஜாப்பூர் படையின் சுமார் மூவாயிரம் போர்வீரர்கள் கொல்லப்பட்டனர். இப் போரினால் சிவாஜிக்கு மிகுந்த லாபம் கிடைத்தது. அப்ஜல் கானது பீரங்கிகளனைத்தும், வெடி மருந்தும், பாசறை களும், அறுபத்தைந்து யானைகளும், நாலாயிரம் குதிரை களும், ஆயிரத்து இருநூறு ஒட்டகங்களும், இரண்டாயிரம் துணி மூட்டைகளும், ரொக்கப்பணமும், பல ஆபரணங் களும் சிவாஜிக்குக் கிடைத்தன.

இதன் பின்னர் சிவாஜி முன்னேறிச் சென்று கோலாப்பூர் மாவட்டத்தின்மீது படையெடுத்தார். பன்ஹலாக் கோட்டையைப் பிடித்துக் கொண்டார். ருஸ்தமே. ஜமாவின் தலைமையில் எதிர்த்து வந்த ஒரு பீஜாப்புர் சேனையை அவர் முறியடித்தார். இதன் பின்னர், தென் கொங்கணத்தில் இரத்தினகிரி மாவட்டத்தில் உள்ள துறை முகங்களையும் கிராமங்களையும் அவர் கொள்ளையடித்தார்.

சாது துகாராமின் வாயிலாக குரு ராமதாசரது பெருமை பற்றிச் சிவாஜி கேள்வியுற்ருர். ராமதாசரிடம் தீட்சை பெற வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு உதித்தது. குரு ராமதாசர் எங்கும் இரண்டு மூன்று நாட்களுக்கு மேல் தங்குவதில்லை. ஆகவே, சிவாஜி அவரைத் தரிசிக்க வெகு காலம் பிடித்தது. இறுதியில் ஒருநாள் சிவாஜி குரு ராமதாசரைத் தரிசனம் செய்யாமல் உணவு கொள்வதில்லை என்று சபதம் செய்து விட்டார். விரைவிலேயே, காட்டில் ஓர் .மரத்தடியில் அமர்ந்திருந்த குரு தேவரது தரிசனம் அவருக்குக் கிடைத்தது. ராமதாசர் சிவாஜிக்கு ‘ ஸ்ரீராம், ஜயராம், ஜயஜயராம் ’ என்ற மந்திர தீட்சையை அளித்தார். சிவாஜி அனைத்தையும் தியாகம் செய்துவிட்டு குருநாதர் சேவையிலேயே ஈடுபட விரும்புவதாகக் கூறி, அதற்கு உத்தரவு கேட்டார். உடனே குரு ராமதாசர் சொன்ஞர் : “ இதற்காகத்தான நீ என்னிடம் வந்தாய்? நீ ஒரு கரும வீரஞன க்ஷத்திரியன், உன் கடன் நாட்டையும் மக்களையும் ஆபத்துக்கு உள்ளாக்காமல் காத்து நிற்பது ; பசுக்களுக்கும், பார்ப்பனர்களுக்கும் தொண்டு செய்வது. இதுவே ஸ்ரீராமச்சந்திரன் கட்டளையும் ஆகும். பகவத் கீதையில் கண்ணன் அருச்சுனனுக்கு உரைத்த உபதேச மொழியை நினைவில்' வை ; ஒரு போர்

வீரனது கடமைப் பாதையிலே செல். கர்மயோகத்தைப் பழகு."

சிவாஜி குருநாதரிடம் மிகுந்த பக்தி கொண்டவர். குருவின் ஆணையின்றி, எந்தப் புதுச் செயலையும் அவர் புரிய மாட்டார். அவருக்கு ராஜ்யத்தில் பற்று கிடையாது. அவர் உண்மையான கர்மயோகியாகவே மாறிவிட்டார். ஒரு சமயம் தமது ராஜ்யம் முழுவதையும் தத்தம் செய்வதாகப் பத்திரத்தில் குறித்து, அதன்மீது தமது முத்திரையையும் வைத்து, குருதேவருடைய பிச்சைப் பையிலே போட்டு விட்டார்; குருதேவருடன் தாமும் பிச்சை எடுக்கவும் புறப் பட்டார். இதைக் கண்ட குருநாதர் சிரித்துக்கொண்டே சொன்னார். "நல்லதுதான்; உன் ராஜ்யத்தை நாம் ஏற்றுக்கொண்டோம், நீ நமது பிரதிநிதியாக இருந்து அரசு செலுத்திவா."

அன்றிலிருந்து சிவாஜி தமக்குக் காவிக் கொடியை ஏற்படுத்திக் கொண்டார். ராஜ்யம் குரு ராமதாசருடைய தென்றும், தாம் அவருடைய பணியாள் என்றும் பறை சாற்றும் வகையில் அவ்வாறு அமைத்துக் கொண்டார்.

சிவாஜியிடம் உறுதியும் அறிவும் பொருந்திய நற் பண்பு விளங்கியது. அவர் எல்லா மதங்களையும் மதித்தார். முகம்மதியரது எந்த மசூதிக்கும் அவர் கேடு செய்ய வில்லை. எப்பொழுதாவது போரிலே முஸ்லிம் மத நூலா கிய குரான் பிரதியொன்று கிடைத்தால் அதனை மரியாதை யுடன் வைத்திருந்து யாராவது முகம்மதியருக்குத் தான மாக அளித்துவிடுவார். அவரிடம் முஸ்லிம் பணியாட் களும் இருந்தனர். மற்றும், சிவாஜி புலனடக்கம் வாய்ந்த

வர். உண்மையான மனித தருமம்தான் அவரது மதமாக இருந்தது. மராட்டியர் கல்யாண் கோட்டையை வென்று, அதன் சுல்தானையும் சிறைப்படுத்தியபோது, சேனபதி ஆபாஜி சோன தேவர், மிக அழகியான கல்யாண் ராஜ குமாரியைச் சிவாஜிக்குக் காணிக்கையாக அளிக்கத் தீர்மானித்தார். சிவாஜி இதனைக் கேட்டதும் தமது அரசவையில் அந்த அரச குமாரியிடம் கைகூப்பிச் சொன்னார்: "சகோதரி, என் தாயும் உன்னைப்போன்ற இவ்வளவு அழகியாக இருந்திருந்தால் நானும் அழகனாய்ப் பிறந்திருப்பேன்."

பின்பு அவர் ராஜகுமாரிக்குப் பல ஆடையாபரணங்களைப் பரிசாகக் கொடுத்து, அவளை அவளுடைய தந்தையிடம் அனுப்பிவைத்தார்.

சிவாஜியின் வளரும் சக்தியைக் கண்ட ஔரங்ஜீப் அவரை அடக்குவதற்காகத் தனது மாமா சாயிஸ்தா கான் என்பவனைத் தென்னாட்டின் சுபேதாராக (கவர்னர்) நியமித்தார். அவனுக்கு உதவி புரிய மஹாராஜா யஷ்வந்த் சிங்கையும் அனுப்பிவைத்தார். முகலாயப் படையினை எதிர்க்கும் நிலையில் இல்லை சிவாஜி. எனவே அவர், முகலாயர்கள் கனவிலும் எண்ணிப் பார்க்கமுடியாத ஒரு தந்திர முறையைக் கையாண்டார்.

சாயிஸ்தா கான் புனாவிற்கு வந்து, சிவாஜிக்குரிய "சிவப்பு மாளிகையில்" தங்கினான். எந்த மராட்டியனும் எழுத்து மூலமான ஆணையின்றி நகரத்துக்குள் நுழையக் கூடாது என ஆணையிட்டான். சிவாஜியைச் சார்ந்தோர்கள் மாறுவேடம் பூண்டு ஆயுதம் தாங்கிய சிப்பாய்களுடன் திருமண ஊர்வலம் நடத்த உத்தரவு பெற்றனர். அப்

போது ரம்ஜான் மாதம்; கிருஷ்ணபக்ஷத்து இருட்டு. இரவு முதல் ஜாமம் கழிந்ததும் சிவாஜியும், அவரது துணை வர்களும் நகரினுள் பிரவேசித்தனர். "சிவப்பு மாளி கைக்கு" அருகில் வந்ததும் சிலர் அங்கேயே இருளிலே மறைந்து கொண்டனர்; ஊர்வலம் முன்னே சென்று விட்டது.

இருட்டிலே இவர்கள் ஒரு சுவரின் செங்கற்களைப் பெயர்த்துவிட்டு மாளிகையினுள் நுழைந்தனர். அவர்கள் இங்குமங்குமாகப் பரவி நின்றுகொண்டு, போரிடத் துவங்கி விட்டனர். தன்னுடைய தகப்பனைக் காக்க முன்வந்த சாயிஸ்தான்கானின் மகன் கொல்லப்பட்டான். சாயிஸ் தான்கான் மிகுந்த சிரமத்துடன் உயிர் தப்பி ஓடினான். ஆனால் அவனது கைக் கட்டைவிரல் ஒன்று வெட்டுப்பட்டு விட்டது.

சாயிஸ்தான்கான் தன்னிடமிருந்த படை மட்ட மானது என்றும், யச்வந்த் சிங் துரோகமிழைத்துவிட்டார் என்றும் பாதுஷாவிற்குப் புகார் எழுதியனுப்பினான். ஔரங் ஜீப் இருவரையுமே தகுதியற்றவர்களாகக் கருதி, தில்லிக் குத் திரும்ப அழைத்துவிட்டார். பின்பு, இளவரசன் முவஜ்ஜமைத் தென்னாட்டுச் சுபேதாராக நியமித்தார்.

முகலாய பாதுஷா பின்னர் சிவாஜியை அடக்குவதற் காக மஹாராஜா ஜயசிங்கை அனுப்பினார். சிவாஜி ஓர் ஹிந்துவை எதிர்த்துப் போரிட விரும்பவில்லை. எனவே, அவர் புனாவிற்கு அருகில் இருந்த மகாராஜா ஜயசிங்கின் பாசறையில் அவரைச் சந்திக்கச் சென்றார். ஜயசிங் பல வாறு எடுத்துக் கூறியதின் பேரில் சிவாஜி ஔரங்ஜீப்பைச் சந்திக்கச் சம்மதித்தார். தமது ராஜ்ய நிர்வாகத்துக்கு

வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவிட்டு ஆக்ராவிற்குச் சிவாஜி பயணமானார்.

ஆக்ராவில் முகலாய பாதுஷா சிவாஜிக்குத் தகுந்த உபசாரம் செய்யவில்லை. அதுமட்டுமல்ல, அவரை ஒரு வீட்டினுள் கைதியாகவும் வைத்துவிட்டார். சிவாஜி அங்கிருந்தும் தந்திரமாகத் தப்பியோடிவிட்டார். முதலில் அவர் நோயுற்றிருப்பதாகப் பாவனை செய்தார். பின்பு குணமடைந்த மகிழ்ச்சியைக் கொண்டாட, பல இடங்களுக்குக் கூடைகளிலே மிட்டாய் வைத்து அனுப்பினார். ஒரு நாள் அவரே தமது மகன் சாம்பாஜியுடன் ஒரு பெரிய கூடைக்குள் அமர்ந்து நகரத்துக்கு வெளியே வந்துவிட்டார்; மிகத் திறமையாக வேடம் மாற்றிக் கொண்டு அங்கிருந்து ராய்காட்டிற்குப் போய்ச் சேர்ந்துவிட்டார்.

சிவாஜி பல போர்கள் புரிந்தார். அவற்றில் சிம்மக் கோட்டைப் போர் மிகவும் பிரசித்தமானது. சிம்மக் கோட்டை அப்போது கோண்டானா என்ற பெயருடன் இருந்தது. இதை முகலாயச் சக்கரவர்த்தியின் ராஜபுத்திரப் படை காத்து நின்றது. சிவாஜி அதனை வென்று வர தமது மாவலி சேனாபதி தானாஜி மால்சரேயை அனுப்பினார். தானாஜி பொறுக்கியெடுத்த முன்னூறு வீரர்களுடன் சென்று, இருளில் நூலேணி வழியாக மலைமீது ஏறி, வெளியே நின்ற காவலரைக் கொன்றுவிட்டு இரகசிய மார்க்கமாகக் கோட்டைக்குள் புகுந்துவிட்டார். ராஜபுத்திர வீரர்கள் எதிர்த்து வந்தபோது, 'ஹரஹர மஹாதேவ' என்று கூறிக்கொண்டே அவர்கள்மீது பாய்ந்தார். ராஜ புத்திர சேனாபதி உதயபான் என்பவன் தானாஜியைத் தன்னுடன் சண்டையிடும்படி அறைகூவி யழைத்தான். இரு

வருமே வாட்போரில் மாண்டுவிட்டனர். இறுதி வெற்றி மராட்டியருக்கே கிடைத்தது. சிவாஜி அங்குப் போய்ச் சேர்ந்ததும், "கோட்டை கிடைத்து விட்டது. ஆனல், சிங்கத்தை இழந்துவிட்டோம்," என்று கூறினர்.

தானஜியின் நினைவாக அதற்குச் சிம்மைக் கோட்டை என்று சிவாஜி பெயரிட்டார்.

1674 ஜூன் 6-ந் தேதி சிவாஜி ஹிந்து முறைப்படி பட்டாபிஷேகம் செய்து கொண்டார். அரசக் குடையுடன், யானைமீது அமர்ந்து, படை பரிவாரங்களுடன் ராய்கட்டில் ஊர்வலம் சென்றர். முன்னல் இரண்டு யானைகளின்மீது இரண்டு கொடிகள் இருந்தன. அவற்றுள் ஒன்று குரு ராமதாசரது காஷாய உடையின் ஒரு பகுதியால் அமைந்த பகவத் கொடியாகும்.

1680 ஏப்ரல் 3-ந் தேதி, சிவாஜி காலமானர். அப்போது அவருக்கு வயது 53. மகாராஷ்டிர நாடு முழுவதற்கும் அவரது மரணம் ஒரு பேரிடியாகிவிட்டது. நமது பாரதத்தின் தவப் புதல்வர்களில் ஒருவராகச் சிவாஜி திகழ்ந்தார். அவரது நினைவு நமது இதயங்களில் நிரந்தரமாக நிற்கும்.



## நாரு பட்நவீஸ்

மகாபுருஷர்கள் யாவருமே நிகழ் காலத்தின் அன்புப் புதல்வர்களாகவும், கடந்த காலத்தின் சிறந்த வாரிசுகளாகவும், எதிர்காலத்தின் சிருஷ்டிகர்த்தாக்களாவும் இருந்து வந்துள்ளனர். இவ்வுண்மை பாலாஜி ஜனர்த்தன் பாநுவுக்கும் (நாரு பட்நவீஸ்) பொருந்தும். மராட்டிய ராஜ்யம் பெற்றளித்த திறமையும் பெருமையும் வாய்ந்த அரசியலறிஞருள் நாருவும் ஒருவர்.

நாரு 1742 பிப்பிரவரி 12-ந் தேதியன்று பிறந்தார். நாருவின் தந்தையின் பெயர் ஜனர்த்தன் பந்த்; தாய் ருக்மணிபாய். நாருவின் தந்தை தாய் மேகந்த் குடும்

பத்தைச் சேர்ந்தவர். நான்காவது பிராயத்திலேயே நாணுவிற்கு உபநயனச் சடங்கு நிறைவேறிவிட்டது. கோவில்களிலே தாம் தரிசனம் செய்யும் தெய்வ விக்கிரங்களைப் போன்று களிமண் பொம்மைகளை இளம் நாணு செய்துவிடுவார். இவ்வாறு செய்வதில் அவருக்கொரு தனிப்பட்ட ஆர்வம் இருந்தது. இந்தப் பொம்மை விக்கிரகங்களுக்கு அவர் பூஜை செய்து காணிக்கை அர்ப்பணம் செய்வார்; அவற்றுக்கு நைவேத்தியமும் செய்வார். பத்தாவது வயதிலே, 'கதர்' என்ற குடும்பத்தைச் சேர்ந்த யசோதாபாய் என்ற பெண்ணுடன் அவருடைய திருமணம் நடந்தேறியது. அவர் பதினன்கு ஆண்டினராக இருந்த போது ஒரு சமயம் குதிரை மீதிருந்து வீழ்ந்து விட்டார். ஆனல், அதிர்ஷ்டவசமாக உயிர் தப்பினர்.

1756 மார்ச் 30-ந் தேதி நாணுவின் வாழ்க்கையில் ஒரு பெரும் சம்பவம் நிகழ்ந்தது. அப்போது அவர் பாலாஜி பாஜிராவ் பேஷ்வாவுடன் (நாணு சாகேப்) கொங்கணத்தின்மீது படையெடுத்தார். அவ்வாண்டிலேயே, நாணு பட்நவீஸின் தந்தை காலமாகிவிட்டார். சட்டப்படி நாணு தமது தந்தையின் பதவியில் நியமிக்கப்பட்டார். அவருக்குப் "பட்நவீஸ்" பதவிக்கான உடைகள் அளிக்கப் பெற்றன. நாணுவிடம் பிறவியிலிருந்தே அமைந்துவிட்ட அறிவுத்திறனுடன் கட்டுப்பாடு, மனவுறுதி, காலம் தவருமல் காரியம் செய்தல் ஆகிய உயர்ந்த பண்புகள் விளங்கின. இவ்வளவு சிறிய வயதிலேயே இத்தனை நற்குணங்களின் அற்புதமான இணைவைக் காண்பது அரிதல்லவா? தமது குணங்களால் பேஷ்வாவினது மனதை மட்டுமல்லாமல், மக்களது மனங்களையும் நாணு வசப்படுத்திவிட்டார். பேஷ்வாக்களின் மாளிகைக்கு அவர்

அடிக்கடி செல்லும் சந்தர்ப்பம் கிடைத்தது. இதனுல் பலவகை மனிதர்களேயும், அவர்களுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளேயும் நுணுகி ஆராய்ந்து அறிவும் ஆற்றலும் அவருக்கு ஏற்பட்டது.

இதன் பின்னர், பாலாஜி பாஜிராவ் பேஷ்வா நாஞுவைத் தம்முடன் ஸ்ரீரங்கப்பட்டணத்திற்கு அழைத்துச் சென்ருர். அங்கிருந்து திரும்பி வந்து ஓராண்டுக்குப் பின்னர் நாஞுவிற்கு ஓர் புத்திரன் பிறந்தான் ; ஆனுல் சில மாதங்களில் அவன் இறந்து விட்டான். சில தினங்கள் கழிந்ததும் நாஞு தமது தாயார், மனேவியுடன் புறப்பட்டுச் சென்று கோதாவரி நதிக் கரையில் வசிக்கலாஞர். பின்பு புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரையும் புறப்பட்டார். அவர் கங்கை வரை சென்றுவரத் தீர்மானித்திருந்தார். ஆயினும், பேஷ்வாவின் ஒன்றுவிட்ட சகோதரர் சதாசிவ ராவ் பாவூவுடன் அவர் பாநிபத் போர்க்களத்தை நோக்கிப் படைகொண்டு செல்ல நேரிட்டது. நாஞுவின் மனத்தில் மதக் கோட்பாடுகள் வேரூன்றிருந்தது போன்றே, கடமை தவருமையும் பதிந்திருந்தது. 1761-ல் நடந்த பாநிபத் போரையும், அதில் கிடைத்த தோல்வியையும் பற்றி நாஞு தமது சுய சரிதையில் வெகு விரிவாக எழுதி யுள்ளார். அப்போர்க்களத்தில் தோல்வி ஏற்பட்டபோது பின்வாங்குமாறு கூறப்பட்ட யோசனே அவருக்கு மிகவும் அவமானமாகப் பட்டது என்று சுய சரிதம் கூறுகிறது. தமது எசமானரான சதாசிவராவை யுத்த களத்தில் தேடியும் காணுதபோதுதான், நாஞு தமது குதிரையைப் போர்க்களத்திலிருந்து திருப்பினுர். ஆபத்தான சமயத் திலும் அவரது மனதில் எசமான விசுவாசம் எவ்வளவு

உறுதியாக இருந்தது என்பதை இந்தச் சம்பவத்திலிருந்து நன்கு அறிய முடிகிறது.

நாஞ போர்க்களத்திலிருந்து பாநிபத் கிராமத்திற்குத் திரும்பியதும், தமது தாயும் மனைவியும் சென்றவிடம் தெரியவில்லை என்ற தகவல் அவருக்குக் கிடைத்தது. இதனால் அவர் துக்கத்தில் ஆழ்ந்துவிட்டார். புனவை நோக்கித் திரும்பும் போதே வழியில் அவர்களை எப்படியாவது கண்டுபிடிக்கத் தீர்மானித்தார். தமது பொருள்களையெல்லாம் துறந்து, உடல் மறைக்க ஓர் துணியை மட்டும் கட்டிக்கொண்டு கிளம்பி விட்டார். இறுதியில் ஒருவாருக அவர் 'புகீஸராய்' என்ற இடத்துக்கு வந்து சேர்ந்தார். இங்கே, அவரது மனைவி பைரோஜி ராவ் பருன்கரது உதவியினுல் காப்பாற்றப்பட்டு செஞ்சிக்குப் போய்விட்டாள் என்று அறிந்தார். நாஞவும் செஞ்சி சென்று மனைவியைக் கண்டார், அங்கிருந்து 'தீக்' என்னும் இடத்துக்குப் போய்ச் சேர்ந்தார். அப்போது அவர் தமது அன்னை யிருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்கத் துடித்தார். தீக்கில் தமது நண்பர் மாதவ் புருஷோத்தம் ஹிங்க்ணேயைச் சந்தித்துவிட்டு, இன்னும் மேலே சென்ருர். 'சிரோஞ்ச்' என்ற இடத்திற்குப் போய்ச் சேர்ந்தவுடன், தமது தாய் மற்றக் கைதிகளுடன் அப் தாவியின் பாசறையில் கைதியாக இருப்பதாகத் தகவல் கிடைத்தது.

உடனே அவர் தமது நண்பர் ஹிங்க்ணேயிற்கு ஒரு கடிதம் எழுதி, இச்செய்தி உறுதிதாஞ என்பதைத் தெரிந்துகொண்டு தம் தாயை விடுவிக்க எப்படியாவது முயலுமாறு வேண்டிக் கொண்டார். தாயாரையும்,

அவளது மதிப்பையும் காப்பாற்றுவதற்காகத் தமது உயிரையும் அர்ப்பணிக்க ஆயத்தமாயிருப்பதாக நாஞ அக்கடிதத்தில் குறித்திருந்தார். விரைவிலேயே அவரது தாயார் காலமாகிவிட்டார் என்று தெரிய வந்தது. இச் செய்தியைக் கேட்டதும் நாஞ ஆற்ருெணுத் துயரம் கொண்டார். சில நாட்கள் வரை அவரும் இவ்வுலகை விட்டுச் செல்வதற்கான எண்ணம் கொண்டிருந்தார். மனம் வெறுத்து, துறவு பூண்டு காசியில் வசிக்கும் நோக் கத்துடன் நாஞ புறப்பட்டார். உடனே, அவரது நண் பர்கள் அவரைப் பலவாறு சமாதானப்படுத்தித் தடுத்து நிறுத்தினர். இந்நிகழ்ச்சியிஞல் நாஞவின் தாய்ப் பற்று தெளிவாகத் தெரிகின்றது.

துயரச் சுமை நிறைந்த இதயத்துடன் நாஞ புஞவிற்குத் திரும்பிஞர்; வழியில் புர்ஹான்புர் வந்து சேர்ந்தார். இங்கு அவர் பேஷ்வா பாலாஜிராவைச் சந்தித்தார். பேஷ்வா ஒரு பெரும்படையுடன் பாநிபத்தை நோக்கி, சதாசிவ ராவிற்கு உதவிசெய்யச் சென்று கொண் டிருந்தார். போர்க்களத்தில் மராட்டியப் படைக்கு நேர்ந்த அழிவின் செய்தியைப் பேஷ்வாவிடம் நாஞ விபரமாக எடுத்துக் கூறிஞர். அதஞல் மிகவும் வருத்தமடைந்த பேஷ்வா புஞவிற்கே திரும்பிவிட்டார். நருமதை நதிக்கு நாஞ சென்றுவர பேஷ்வா அனுமதியளித்தார். நாஞ அங்கு சென்று, தமது துயரை மறப்பதற்காகப் பல தான தருமங்களே இயற்றிஞர், சடங்குகளே நிறைவேற்றிவிட்டுத் தெய்வ பூசைகளேயும் நடத்திஞர்.

நாஞவுக்கு இருபது வயது நிரம்புவதற்குள்ளேயே நீண்ட பயணங்களே அவர் மேற்கொள்ள நேர்ந்தது. இவை

காரணமாக அவருக்கு வாழ்க்கை சம்பந்தமான பரந்த அனுபவம் கிடைத்தது ; நாட்டின் அரசியல் நிலே நன்கு தெரிய வந்தது. பகைவரது கையிலிருந்து அவர் மயி ரிழையில் தப்பினர். பலதடவை அவர் தன்னந்தனியாகக் கஷ்டங்களேச் சமாளிக்க நேர்ந்தது. மிக்க துன்பமடைந்த தமது உற்ருர் உறவினர்களேப் பற்றிய தகவல்களேக்கூடப் பெற இயலாத நிலே அவருக்கு ஏற்பட்டதுண்டு. இன்ன மும் நாஞவின் வாழ்வில் துன்பம் ஓய்ந்துவிடவில்லே. அவர் நர்மதைக் கரையிலிருந்து புஞவை நோக்கிப் புறப்பட்டார். பாரனேர் என்னுமிடம் சேர்ந்ததும் புஞவில் பாஜிராவ் பேஷ்வா 1761 ஜூன் 24-ந் தேதி இறந்து விட்டார் என்ற துக்கச் செய்தி அவருக்குக் கிடைத்தது. ரகுநாத்ராவ், நாஞவைப் புஞவிற்கு அழைத்திருந்தார். புஞ சென் றடைந்ததும் அவருக்கு ரகுநாதராவ் தக்க மரியாதையை அளித்துச் சந்தித்தார். பாலாஜிராவின் புத்திரர் மாதவ ராவைப் பேஷ்வா பதவிக்கு சத்தாராவின் அரசர் நிய மித்திருந்தார். அந்தச் சமயத்தில் மாதவராவின் வயது பதினேழு ; நாஞவின் வயது பத்தொன்பது, பிள்ளேப் பிராயத்திலிருந்தே இருவரிடையேயும் நெருங்கிய நட்பு உண்டு. இப்போது சூழ்நிலே மாறிவிட்டதால் நாஞ வுக்குத் தர்மசங்கடமாகிவிட்டது. மாதவராவின் சிறிய தந்தையான ரகுநாதராவ் புஞவில் அதிகாரம் செலுத்த விருப்பம் கொண்டிருந்தார். அவ்வாறு அதிகாரத்தைக் கைப்பற்றும் முயற்சியில், நாஞவை 'பட்நவீஸ்' பதவி யிலிருந்து ரகுநாதராவ் விலக்கி விட்டார். ஆஞல், விரை விலேயே ரகுநாதராவின் அதிகார தோரணேயை மாதவ ராவ் அடக்கிவிட்டு, மறுபடியும் 1763 நவம்பர் 2-ந் தேதி, நாஞவைப் 'பட்நவீஸ்' பதவியில் அமர்த்திஞர்.

இதன்பின் நாணுவிடம் முந்திய பொறுப்புக்களுடன் புதிய அலுவல்களும் ஒப்படைக்கப்பட்டன. இப்போது இரண்டு வகை அலுவல்களை அவர் கவனிக்க வேண்டி யிருந்தது. பேஷ்வாவின் தலைநகரான புனுவில் வரவு-செலவு கணக்குத் தயாரித்துச் சரிபார்ப்பது, வரவு-செலவுத் திட்டம் வகுப்பது, தலைநகரில் நடைபெறும் அரசாங்க அலுவல்களை மேற்பார்வையிடுவது என்பவை ஒருவகை அலுவல்கள். பேஷ்வா படையெடுத்துச் செல்லும்போது, அவரது பாசறைக் கணக்கு வழக்குகளைக் கவனித்துக் கொள்வது மற்றவை. இவ்வாறு பேஷ்வாவின் அரசாங்கத் தில் நாணுவின் அதிகாரம் ஓங்கியது. பேஷ்வாவுக்கும், அவரது சிறிய தந்தை ரகுநாதராவிற்கும் இடையே அடிக் கடி கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டு வந்தன. அப்போ தெல்லாம் நாணுவிற்குத் தமது முழுத் தகுதியையும் நிலை நாட்டிக் கொள்ள நல்ல சந்தர்ப்பங்கள் கிடைத்தன. நாணுவின் துணிவு நிறைந்த வாழ்வையும், உறுதியான நிர்வாகத்தையும் கண்டு பேஷ்வா மிகுந்த மகிழ்ச்சி அடைந்தார். எனவே அவர் ராஜ்ய ஆட்சிப் பொறுப்பு முழுவதையும் நாணுவிடமே ஒப்படைத்துவிட்டார் பத் தாண்டுக் காலத்திற்குள்ளேயே நாணு பட்நவீஸ் பேஷ் வாவின் முதன் மந்திரியாகிவிட்டார். இதிலே வியப்பிற்கு இடமில்லை. பேஷ்வா தம்மிடம் வைத்திருந்த நம்பிக் கைக்குத் தாம் எல்லா வகையிலும் முழுத் தகுதி பெற்றவர் என்பதை நாணு தமது எசமான விசுவாசத்தின் வாயிலாக நன்கு நிரூபித்து விட்டார்.

கி. பி. 1772-ல் பேஷ்வா மாதவராவ் இறந்து விட்டார். மாதவராவின் தம்பி அடுத்த பேஷ்வாவாக ஆனுர். ஆனுல் தம்பி நாராயணராவ் சிறுவராக இருந்த

தால் அவருக்கு அரசியல் அனுபவம் சிறிதும் கிடையாது. ஆகவே, அரசாட்சிப் பொறுப்பு முழுவதும் நாஞவிடமும், சகாராம் பாபு என்பவரிடமும் சேர்ந்தது. சகாராம் வயதில் நாஞவை விட மிகவும் பெரியவர். பல சந்தர்ப்பங்களில் பேஷ்வா தமது தாயின் சொற்படி நடந்து மக்களின் மனதில் அதிருப்தியை விளைவித்து விட்டார். நாராயண ராவின் சிற்றப்பா ரகுநாதராவ் தாமே பேஷ்வா ஆகிவிட விரும்பினார். அவர் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, நாராயணராவைக் கொலை செய்வித்து விட்டார். அப்போது நாஞதான் நிலைமையைச் சமாளித்து, புஞ நகரைக் கொள்ளை, தீ வைத்தல் முதலிய ஆபத்துக் களினின்று காப்பாற்றினார். இதிலிருந்து நாஞவின் சமயோசித புத்தியை நன்கு உணர்கிறோம். மேலே என்ன செய்ய வேண்டும் என்பதைத் தீர்மானிக்க, நாஞ நக ரத்துப் பிரமுகர்களையும், ஆட்சிப் பொறுப்பிலுள்ளவர்களை யும் அழைத்து ஒரு சபை கூட்டினார். இந்தச் சபையின் தீர்மானப்படி, நாஞவும் பாபுவும் ராஜ்யத்திலுள்ள பிரபல மான தலைவர்கள் பன்னிரண்டு பேர்களைக்கொண்ட ஒரு குழுவை அமைத்தனர். பிற்காலத்தில் அதுவே, 'பார் பாயி' (பன்னிரு சோதரர்) என்ற பெயரில் பிரசித்த மாயிற்று. பிறகு பேஷ்வா பதவியில் ரகுநாதராவை நியமித்தது சட்ட விரோதமானதென அறிவிக்கும்படி, ஸதாரா மன்னரை நாஞ வற்புறுத்தினார். இந்த மத்தியில் நாஞ நிஜாம் முதலிய பெரிய நவாபுகளின் ஆதரவைப் 'பன்னிருசோதரர்' குழுவுக்குத் திரட்டிவிட்டார். நாரா யணராவின் பிள்ளையான ஸவாய் மாதவராவ்தான் நாரா யணராவின் வாரிசு என்று நாஞ பறைசாற்றிப் பேஷ்வா பதவியில் அவரையே அமர்த்தி வெற்றி கண்டார். பேஷ்வா

ஆட்சியில் ஏற்பட்ட இக் குழப்ப நிலையைப் பயன்படுத்தி ஆங்கிலேயர்கள் மராட்டிய ராஜ்யத்தின்மீது படையெடுத்தனர். ஆனல் நாஞ அவர்களைத் தோற்கடித்துவிட்டார். பின்பு அவர்களுடன் உடன்படிக்கை செய்து கொண்டு அமைதியை நிலை நாட்டினர். இது 'புரந்தர் உடன்படிக்கை' என அழைக்கப்பட்டது. ஆங்கிலேயர்கள் உரிமையின்றிப் போர் தொடுத்தது கடுங் குற்றம் என்று நாஞ எடுத்துக் கூறினர். அதனை ஆங்கிலேயரும் ஒப்புக்கொண்டனர். இவ்வாறு நாஞவின் சமயோசித புத்தியினல் மராட்டிய ராஜ்யம் காப்பாற்றப் பட்டது. ஆனல் மறுபடியும் ஆங்கிலேயர்கள் தலை தூக்கினர். ரகுநாதராவைப் பேஷ்வாப் பதவியில் அமர்த்த முயற்சியும் செய்தனர். ஆனல் நாஞ 'பட்காவ்' என்ற இடத்தில் அவர்களை மறுபடியும் தோற்கடித்து, அவர்களது விருப்பத்தைச் சீர்குலைத்து விட்டார்.

அக்காலத்தில் ஐரோப்பாவில் ஆங்கிலேயரின் நிலை ஆபத்து நிறைந்ததாக இருந்தது. அமெரிக்காவில் சுதந்திரப் போர் தொடர்ந்து நடைபெற்று வந்தது ; பிரெஞ்சுக் காரரின் கையும் ஓங்கி நின்றது. பிரெஞ்சுத் தூதுவனை ஸெயிண்ட் லூபின் பாரதத்திற்கு வந்திருந்தான். நாஞ பிரெஞ்சுக்காரர்களுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொண்டிருந்தார். நாஞ தக்க மரியாதையுடன் ஸெயின்ட் லூபினை வரவேற்ருர். பிரெஞ்சுக்காரருடன் நாஞ நட்புறவை நிலைநாட்ட விரும்பினர். ஆனல் இதற்கு ஒரு பெரிய இடையூறு இருந்தது. நாஞவின் ஒன்றுவிட்ட சோதரரான மோரோபா 'பார் பாயி'க்குழுவின் ஓர் அங்கத்தினர்; அவர் இரகசியமாக ஆங்கிலேயருடன் தொடர்பு கொண்டிருந்தார். மோரோபா ஏதும் இடையூறு செய்

யாமலிருப்பதற்காக, லூபின் உண்மையில் பிரெஞ்சு அரசாங்கப் பிரதிநிதியாக வரவில்லை என்று நானா எங்கும் செய்தி பரப்பினார். இச் செய்தியை அனைவருமே உண்மை யென நம்பினர். இதன் நடுவில், திறமை படைத்த நானா பிரெஞ்சு ராஜதூதனான லூபினுடன் நட்புறவு ஒப் பந்தம் செய்து கொண்டார். நானாவின் இந்தத் தந்தி ரத்தை வெகு காலம் கழித்தே ஆங்கிலேயர் தெரிந்து கொண்டனர். ஆனால் அப்போது ஏதும் பயனில்லாமல் போய்விட்டது. இவ்வாறு, நானா தமது அறிவுத் திறனால் ஆங்கிலேயர் உள்ளிட்ட எதிரிகளனைவரையும் தோல்வி யுறச் செய்து விட்டார். ஆனால் உலக அரசியலரங்கில் இதன் மத்தியில் நேர்ந்த மாறுதல்கள் காரணமாக, மேற் சொன்ன நட்புறவு ஒப்பந்தத்தால் மராட்டிய அரசாங்கத் திற்கு விசேடமான லாபமேதும் கிடைக்கவில்லை.

நானாவின் தந்திர முறையினால் ஆத்திரமடைந்த ஆங்கிலேயர் மராட்டியரைத் தம் வசப்படுத்தி, நானாவைப் பதவியினின்றும் விலக்க முடிவு செய்தனர். ஆனால் ஹைதர் அலி, நிஜாம், போர்த்துகீசியர், டச்சுக்காரர், பிரெஞ்சுக்காரர், தில்லியின் முகலாய பாதுஷா, ஐஞ்ஜி ராவின் சித்தி ஆகியோரை நானா தம்முடன் சேர்த்துக் கொண்டு வலிமை வாய்ந்த ராஜ்யங்களின் சங்கத்தையே நிறுவி விட்டார். இதனால் ஆங்கிலேயர் முற்றிலும் தனிமைப்படுத்தப் பட்டனர். இவ் விஷயத்தில் நானாவின் ஒப்பற்ற ராஜதந்திரம் நன்கு வெளியாயிற்று. மராட்டியப் படைத் தலைவரை நானாவுக்கு எதிராகத் தூண்டிவிடுவ தற்கு ஆங்கிலேயர்கள் எல்லா முயற்சிகளும் செய்து பார்த் தனர்; ஆனால் பலிக்கவில்லை. இறுதியில் அவர்கள்

தோல்வியடைந்து 'ஸால்பாய் ஒப்பந்தம்' செய்துகொள்ள வேண்டியதாயிற்று.

இதே சமயத்தில் தில்லியின் நிலை நாளுக்கு நாள் மோசமாகிக் கொண்டிருந்தது. ஆனால் நானாவும், மஹாத்ஜீ சிந்தேயும் சேர்ந்து இந்த இழிந்த நிலையை மிகத் திறமையுடன் சமாளித்து, முகலாய சக்கரவர்த்தியைக் காத்து நின்றனர். இதன் மூலம் தில்லிப் பேரரசின் மீது மராட்டியச் செல்வாக்கை நானா செலுத்தினார். இவ் வகையில் பாதுஷா ஷா ஆலமை ஆங்கிலேயரது பிடியிலிருந்து காப்பதற்கு நானா முயன்றது அவரது அரசியல் தீர்க்க தரிசனத்தை நன்கு வெளிப்படுத்துகிறது.

நானா இப்போது ஒரு புதிய போராட்டத்தை எதிர் நோக்க நேர்ந்தது. மைசூரின் திப்பு சுல்தான் மராட்டியப் பிரதேசங்களை ஆக்கிரமிக்கத் துவங்கியிருந்தார். திப்புவுக்குத் தக்க தண்டனையளிக்க நானா தீர்மானித்தார். ஆங்கிலேயர் திப்புவுடன் சேர்ந்து கொண்டால் மராட்டியருக்குப் பெரும் தீங்கு நேர்ந்து விடுமென்பதை அவர் எண்ணிப் பார்த்தார். எனவே தாம் திப்பு சுல்தான்மீது படையெடுத்தால் ஆங்கிலேயர் தமக்கு உதவி செய்யும் வகையில் அவர்களிடமே உறுதி வாங்கிக் கொண்டார். ஆனால் ஆங்கிலேயர்கள் இறுதியில் தங்கள் வாக்குறுதியைக் காப்பாற்றவில்லை. போரில் திப்பு சுல்தான் தோல்வியடைந்தார். பின்பு கஜேந்திரக் கோட்டையில் உடன்பாடு ஏற்பட்டது. இவ்வாறு நானா பட்நவீஸ் திப்புவை வென்றதோடு நில்லாமல், ஆங்கிலேயரது நம்பிக்கைத் துரோகத்திற்கும் தக்க பாடம் கற்பித்தார். இதன் மத்தியில் ஆங்கிலேயர்களுக்கும் திப்புவுக்குமே போர் நிகழத் தொடங்கி

விட்டது ; ஏனெனில் திப்பு வெளிப்படையாகவே பிரெஞ்சுக் காரர்களுக்கு உதவி செய்து வந்தார். இப்போது, நாறு வைத் திப்புவுக்கு எதிராகத் தமக்கு உதவி செய்யுமாறு ஆங்கிலேயர்கள் வேண்டிக்கொண்டனர். நாறு பல நாட்கள் கடத்திவிட்டுப் பின்னர் ஆங்கிலேயருக்கு உதவி செய்ய ஒப்புக்கொண்டார் ; ஏனெனில், இன்னும் பெரு வாரியான மராட்டியப் பகுதிகள் திப்புவிடமிருந்து மீட்கப் படாமலிருந்தன. அவைகளை விடுவிக்க வேண்டுமல்லவா? ஆனாலும் ஆங்கிலேயர் திப்புவை அடியோடு தோற்கடித்து விடக் கூடாதென்பதே நாறுவின் தெளிவான முடிவு. இறுதியில் ஆங்கிலேயருக்கும் திப்புவுக்கும் போர் மூண்டு விட்டது. அதில் திப்பு தோல்வியடைந்தார். மராட்டியப் பிரதேசங்களைத் திரும்பப் பெறுவதில் நாறு வெற்றி பெற்றார்.

இந்தப் போர் ஒரு வகையாக முடியுமுன்பேயே, மராட்டியப் பிரதேசத்தைக் கைக்கொள்ள நிஜாம் வேறு முயற்சி செய்தார். ஆனால் கர்டா என்னும் இடத்தில் நடந்த போரில் நிஜாம் தோல்வியுற்றதால் கி. பி. 1795-ல் அமைதி நிலை நாட்டப்பட்டது.

நிஜாமுடன் நடந்த சண்டையிலிருந்து நாறு மீண்டு வரும் சமயத்தில், பேஷ்வா ஸவாய் மாதவராவ் தற்கொலை புரிந்துகொண்டு விட்டார். திரும்பவும் வாரிசுச் சண்டை ஆரம்பித்துவிட்டது. இதன் காரணமாக நாறுவின் மன அமைதி குலைந்தது. கடைசியில் இரண்டாம் பாஜிராவ் பேஷ்வாவானார். இதே சமயத்தில் மஹாத்ஜி சிந்தேயும் காலமானார். அவர் பதவியில் தௌலத்ராவ் சிந்தே அமர்ந்தார். இரண்டாம் பாஜிராவும்,

தௌலத்ராவும் சிந்தேயும் எந்தச் சட்டத் திட்டங்களுக்கும் கட்டுப்பட்டு நிற்பவர்கள் அல்லர். எனவே, நாஞவுக்கும் அவர்களுக்கும் ஒத்துவரவில்லை. மனத்தாங்கல் முற்றியது. நாஞவை அவர்கள் கைது செய்து, சிறிது காலம் கழித்து விடுவித்தனர். இதனுல் நாஞவின் மனம் முறிந்து போயிற்று. இருப்பினும் பேஷ்வாவினிடம் நாஞ ராஜவிசுவாசம் கொண்டிருந்தார். ஆட்சியில் பெருகி விட்ட இந்தக் குழப்ப நிலையைப் பயன்படுத்திக் கொண்டு ஆங்கிலேயர்கள் பேஷ்வாவின் கழுத்தில், 'துணை நட்பு ஒப்பந்தம்' என்ற சுருக்கை மாட்ட முயன்றனர். ஆனுல், நாஞ உயிருடன் இருந்தவரை ஆங்கிலேயரின் உடன் படிக்கை வலையில் சிக்காமல் பேஷ்வாவைக் காத்து நின்ருர். இரண்டாம் பாஜிராவ், தௌலத் ராவ் இருவராலும் பற்பல வகையில் அவமானப் படுத்தப்பட்டு மதிப்பிழந்து போனபின்பு நாஞ பட்நவீஸ் 1800 மார்ச் 13-ந் தேதி இவ்வுலக வாழ்கை நீத்தார்.

நாஞவின் மரணம் குறித்து வெல்லஸ்லி பிரபு இவ்வாறு எழுதியுள்ளார்: "தமது அறிவுச் சிறப்பு, பெருந்தகைமை, இன்னும் பற்பல நல்லியல்புகள் காரண மாக உயர்வு பெற்ற மனிதர்களை இழந்து விடுவதால் வருத்தமேற்படுகின்றது. தங்களது அரசவையின் மிக்கத் தகுதிவாய்ந்த அமைச்சர் பாலாஜி பண்டித் (நாஞ) கால மான துயரச் செய்தியைக் கேட்டு, எனக்குத் துக்கம் உண்டாயிற்று."

ஹைதர் அலி ஒரு கடிதத்தில் நாஞவைப் பற்றி எழுதியுள்ளார்: "நாஞ பெரிய தீர்க்க தரிசியாகவும், எஃகுப் போன்ற மனவுறுதி படைத்தவராகவும் விளங்கிஞர்.

ஆங்கிலேயரது தந்திரங்களையும், சதித் திட்டங்களையும் அவர் வெகு நன்ருக உணர்ந்தவர். எனவே, ஆங்கிலே யரது வஞ்சனை வலையில் சிக்குண்டு தவிக்கும் மனிதராக நானு ஆகவே மாட்டார்".

நானுவைப் பற்றி அஹல்யாபாய் ஹோல்கர் இக் கருத்தை வெளியிட்டிருக்கிருர் : "அரசியல் துறைகள் யாவற்றிலுமே மிகுந்த திறமையுடனும், பரவலான அதி காரத்துடனும் விளங்கி ஆங்கிலேயருடன் போராடுவது என்பது நானு ஒருவரால்தான் முடியும்."

நானு காலத்தவரும், அவரது நெருங்கிய துணைவரு மான மஹாத்ஜி சிந்தே ஒரு கடிதத்தில் குறித்துள்ளார் : "எனக்கு மிக மிகத் தேவையான சந்தர்ப்பங்களில் நல்லெண்ணம் நிறைந்த துணைவராக நானுவைத் தவிர வேறு யாரும் உதவி புரியவில்லை."

பின்வரும் குறிப்புகளிலிருந்து நானுவிடம் எத் தகைய பண்புகள் இருந்தன என்பது நன்கு புலனுகின் றது; ஆட்சியில் நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சிகளையும் அறிந்து வர நானு ஒற்றர் குழு வொன்றை நியமித்திருந் தார். அதில்தான் அவரது ஆட்சித் திறமையின் வெற்றி அடங்கியிருந்தது. நானு வெறும் ராஜீயவாதி மட்டு மல்ல, அவரிடம் செயலாற்றலும் உச்சமாக விளங்கிற்று. அவர் நேரடியாக மேற்கொண்டு நடத்திய காரியங்களின் அளவைக் கண்டு நாம் பேராச்சரியம் அடைகிருேம். 1762லிருந்து 1800 வரை அவர் தாமே மொத்தம் 14,122 கடிதங்களுக்குப் பதில் வரைந்திருக்கிருர். இவற்றில் சுமார் 2,000 கடிதங்கள், ஆங்கிலத்திலும் மராட்டியிலும்

எழுதப்பெற்றன. இன்றைய மராட்டியச் சரித்திர ஏடு களில் பெரும்பாலானவை நாஞவின் எழுத்துக்கள் கொண்டவையே.

ஆங்கிலேயரது அரசியல் முறையை வெகு கணக் காக மதிப்பிடுவதில் நாஞ பெற்றிருந்த அதிநுட்பமான அறிவே, அவரது அரசியல் பெருமையை நாம் மதிப்பிடத் தக்க கருவியாக அமைகிறது. இது சம்பந்தமாக நாஞவே கூறியுள்ளார்; "ஆரம்பத்தில் ஆங்கிலேயரது உரை யாடலும், கடிதங்களும் மிக மிக இனியனவாகத் தென்படும். இதனுல்தான் யாருமே அவர்களது பகட்டு நேச வார்த்தை களில் மயங்கி விடுகின்றனர்; ஆங்கிலேயர் மடியில்தான் ஆண்டவன் உண்மை என்னும் பொக்கிஷத்தைக் கொட்டி யுள்ளான் என்றும் நம்பிவிடுகின்றனர். உலகில் நன் னடத்தைக்கு அவர்களே இருப்பிடம் என்று நம்பிவிடு கின்றனர். ஆங்கிலேயரது உரையாடல் முறை மிகவும் பணிவு நிறைந்ததாகவும், கவர்ச்சிகரமாகவும் இருக்கும். ஆனல் நேரிடையாக அனுபவப்படும் போதுதான் ஆங் கிலேயப் பூனையின் சுருங்கியிருந்த கூரிய நகங்கள் வெளிப் படுகின்றன. ஒருவரை வஞ்சித்து ஆசைகாட்டி, மற்ற வரைத் திடுமென அடக்குதல் இவர்களது இயல்பு. பொய் வதந்திகளையும், வஞ்சனைகளையும் பரவச் செய்து அரசு செலுத்துவதே இவர்களது ஆட்சி முறையாகும்."

இதுவரை எடுத்துரைத்த விஷயங்களைக் கொண்டு பார்க்கும் போது, நாஞவின் மனத்தளத்தில் என்றும் நிலவிய கடவுள் பக்தி, தேச பக்தி, தாய்ப்பற்று, தாய் நாட் டினரிடமிருந்த நம்பிக்கை, கடமையுணர்வு ஆகியவற்றின் ‹‹லத்திஞல்தான், அவரது பெயர் இந்நாட்டின் சரித்

திரத்தில் அழியா இடம் பெற்றுள்ளது என்பது நன்கு புலனாகும். நானாவின் வாழ்க்கையைக் காணும்போது நமக்குக் கீழ்க்கண்ட நல்லுரை நினைவிற்கு வருகிறது: 'நீ உனது கடமையைச் செம்மையாக நிறைவேற்றிக் கொண்டேயிரு; ஏனெனில் மானம், மரியாதை யனைத்தும் அதில்தான் அடங்கியுள்ளது.



## அகில்யா பாய்

அகில்யா பாய் கி. பி. 1735-ல் மகாராஷ்டிரத்தில் ‘பாதரடி’ என்னும் கிராமத்தில் பிறந்தாள். அவளது தந்தையார் பெயர் மன்கோஜி சிந்தியா. மன்கோஜி ஒரு சாதாரண குடும்பத்தைச் சேர்ந்தவர்.

தற்செயலாக, ஒரு சமயம் இந்தூர் மஹாராஜா மல்ஹார் ராவ் ஹோல்கர் புனா செல்லும் வழியில் இந்தக் கிராமத்தின் சிவன் கோவிலில் தங்கினார். அங்கே அவர் அதிர்ஷ்டக்காரியான இப் பெண்ணைக் கண்டார். சிறுமியை அவருக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது. உடனே அவர் மன்கோஜியை அழைத்து, “நான் இந்தப் பெண்ணை எனது மருமகளாக்கிக் கொள்ள விரும்புகிறேன்” என்று கூறினார்.

மன்கோஜி சம்மதித்தார். மல்ஹார் ராவ் அச் சிறுமியைத் தம்முடன் இந்தூருக்கு அழைத்துச் சென்று, தமது பிள்ளை காண்டே ராவுக்கு அவளை வெகு விமரிசையாகத் திருமணம் செய்து வைத்தார்.

அகில்யா பாய் பார்ப்பதற்கு அவ்வளவு அழகியல்ல. அவளது மேனி மாநிறமானது; அவள் மிகப் பருமனுமில்லை, மிக ஒல்லியுமில்லை. இருந்தும் மல்ஹார் ராவ் அவளிடம் கண்ட சில பண்புகளின் காரணமாகவே, அவளைத் தனது மருமகளாக்கிக் கொண்டார்.

புக்ககம் வந்தவுடனேயே அகில்யா தனது கணவன், மாமனர், மாமியார் ஆகியோருக்குப் பணிவிடை செய்வதில் ஈடுபடலானுள், இதன் மூலம் மாமன், மாமியின் மிக்க அன்புக்கு உரியவளாகிவிட்டாள். குடும்பக் காரியங்களை அவள் வெகு திறமையுடன் நடத்தி வந்தாள். இதனுல், மல்ஹார் ராவ் தலைநகரை விட்டு வெளியே செல்லும் போதெல்லாம் அவளிடம் சில அரசாங்க காரியங்களை ஒப்படைப்பார். அவர் திரும்பி வந்து பார்க்கும்போது அக் காரியங்கள் யாவுமே மிக நேர்த்தியாக நிறைவேற்றப்பட்டிருக்கும். இதனைக் கண்டு மகாராஜா மிகவும் மகிழ்வடைவார். இதன் மத்தியில் அகில்யாவுக்கு ஒரு ஆண குழந்தையும் ஒரு பெண் குழந்தையும் பிறந்தன. பிள்ளைக்கு மாலி ராவ் எனவும், பெண்ணுக்கு முத்தா பாய் எனவும் பெயரிட்டனர்.

இவ்வாறு மாமன், மாமி, கணவன், குழந்தைகள் ஆகியவர்களிடையே அகில்யா பாய் ஒன்பது ஆண்டுகளைக் கழித்தாள். இந்த ஆண்டுகள்தாம் அகில்யாவின்

வாழ்வில் இன்ப நாட்களாக அமைந்தன. இதன் பின்னர் துன்பத்திற்குமேல் துன்பமாகத் தொடர்ந்தன. ஆனால் அத்தனை துன்பங்களுக்கு இடையேயும், அகில்யாபாய் தனது கடமைகளை மிகுந்த தைரியத்துடனும் தகுதியுடனும் காத்து நின்றாள். எனவே தான் அவளை பாரதத்தின் உயர்ந்த பெண்மணிகளுள் ஒருவராக எண்ணத் துவங்கினர்; அவளது பெயர் அழிவற்றதாகிவிட்டது.

அந் நாட்களில் மராட்டியருக்கு மிகுந்த செல்வாக்கு இருந்தது. அவர்கள் பேஷ்வாவின் தலைமையில் தங்கள் ராஜ்யத்தைப் பெருக்கி வந்தனர். பாரதத்தின் பல ராஜ்யங்களிடமிருந்து அவர்கள் நாலில் ஒரு பாகம் கப்பம் வசூலித்து வந்தனர். பரத்பூருக்கருகில் ஜாட் இனத்தவர் ஆட்சி செய்து வந்தனர். ஜாட்டுகள் கப்பம் கட்ட மறுத்தனர்; போரிடவும் ஆயத்தமாயினர். அப்போது பேஷ்வாவின் ஆணை பெற்று மல்ஹார் ராவ் தனது மகன் காண்டே ராவுடன் பரத்பூர் மீது படையெடுத்தார். 'தீக்' என்னும் இடத்திற்கு அருகிலுள்ள கும்பேர் கோட்டையை அவர்கள் முற்றுகை யிட்டனர். இப்போரில் கான்டே ராவ் கொல்லப்பட்டார். பிள்ளை இறந்ததைக் கேள்விப் பட்டதும் மல்ஹார் ராவ் போர்க் களத்திலேயே மூர்ச்சை யடைந்து வீழ்ந்துவிட்டார். படைவீரர்கள் அவரைப் பாதுகாப்பான இடத்திற்குத் தூக்கிச் சென்றனர். அவர் மூர்ச்சை தெளிந்ததும் அகில்யா தனது கணவனை இழந்து தவிப்பதைக் கண்டு தமது துன்பத்தை அடக்கிக் கொண்டார். அவளுக்குத் தைரியமூட்டத் துவங்கினார். மிகவும் சிரமப்பட்டு, அவர் அகில்யா பாயைத் தனது கணவனுடன் உடன்கட்டை யேறிவிடாமல் தடுத்து நிறுத்தினார். அவர்

கூறினர் : "மகளே நீதானே இப்போது எனக்குத் துணை. நீயும் இல்லையெனில் நான் இவ்வளவு பெரிய ராஜ்ய காரியத்தை எவ்வாறு நிருவகிக்க இயலும் ?"

அகில்யா பாயும், கணவனுடன் உடன்கட்டையேறி எரிந்து சாவதைவிட, மக்களுக்குப் பணிபுரிவது சீரியது தான் என்பதை உணர்ந்தாள். இதனல் அவள் தமது மாமனரது ஆணைப்படி ஆட்சி அலுவல்களைக் கவனிக்கலானுள்.

பாநிபத்தில் நேர்ந்த தோல்விக்குப் பின்னர் வட இந்தியாவில் மராட்டியரது செல்வாக்கு குறையலாயிற்று. அதை மறுபடியும் வளர்த்துக் கொள்வதற்காக அவர்கள் வட இந்தியாவில் முன்னேறிச் செல்ல முடிவு செய்தனர். அவர்களுள் மல்ஹார் ராவும் ஒருவராவார். ஆனல் அவர் தமது மகனது மரணத்தால் துக்கமடைந்திருந்தார். வழியில் குவாலியருக்கு அருகில் உள்ள ஆலம்பூரில் மல்ஹார் ராவ் தங்கினர். இங்கே இவர் காது வலியால் பெரிதும் பாதிக்கப்பட்டு, காலமாகிவிட்டார். கணவனுக்குப் பின்பு மாமனும் மரணமடைந்ததை மிக்கத் துணிவுடன் அகில்யா பாய் தாங்கிக் கொண்டார். அங்கு அவள் தனது மாமனர் பெயரில் ஒரு மண்டபம் கட்டுவித்தாள் ; அதைப் பிரதி தினம் பராமரித்து வர 30,000 ரூபாய் பெறுமான கிராமங்களை மானியமாக அளித்தாள்.

இப்போது அகில்யா பாயின் புதல்வன் மாலி ராவ் அரியணையில் அமர்ந்திருந்தாள். அவன் சிறிதும் இரக்கமற்றவனுகவும் துஷ்டனுகவும் இருந்தான். மக்களிடம் கொடிய முறையில் நடந்து கொண்டான். இதைக் கண்ட

அகில்யா பாய் மிகுந்த வருத்தம் அடைந்தாள். ஒன்பது மாதங்களுக்குப் பின்னர் அகில்யாவின் இந்த மகனும் இறந்துவிட்டான். அப்போதுங்கூட அகில்யாபாய் தனது துக்கங்களை மறந்துவிட்டு, மாமன் ஒப்படைத்துச் சென்ற மக்கள் தொண்டை விடாமல் செய்து வந்தாள். பேஷ்வா கூறிய யோசனைப்படி அவள் கங்காதர ராவ் என்பவனை அமைச்சராக நியமித்து, அரசு செலுத்தலானாள். ஆனால் கங்காதரராவ் தன்னலக்காரனாகவும், வஞ்சகக்காரனாகவும் இருந்தான். அவன் அகில்யாயிடம், இனி அவள் ஈசுவர பஜனையில் ஈடுபட்டு, ஏதேனும் ஒரு பிள்ளையை சுவீகாரம் செய்து கொண்டு, அரசாட்சிப் பொறுப்பைத் தன்னிடமே அளித்துவிடும்படி கூறினாள். அகில்யா பாய் அதை ஏற்கவில்லை. அரசாங்க அலுவல்களில் நல்ல திறமையுடன் பணிபுரியும் எவரேனும் ஒருவரிடம் தனக்குப் பின்பு ராஜ்யத்தை ஒப்படைக்க அவள் எண்ணினாள். இதனால் கங்காதர ராவ், பேஷ்வாவின் சிற்றப்பாவான ரகுநாத ராவைத் தூண்டிவிட்டு இந்தூரின் மீது படை யெடுத்து வரச் செய்தான். அவ்விருவரும் இவ்வாறு இந்தூர் ராஜ்யத்தை விழுங்கிவிட விரும்பினர். இதைக் கண்டதும் அகில்யா பாய் தனது ராணுவத் தலைவர் களையும், ஒவ்வொரு கிராமத்தின் பிரதிநிதிகளையும் அழைத்து ஒரு சபை நடத்தினாள். எல்லோரும் அகில்யா பாய்தான் அரசாள வேண்டுமென்றும், ரகுநாத ராவ் வந்தால் போரிடுவதாகவும் கருத்து வெளியிட்டனர். அப்போது துக்கோஜி ராவ் ஹோல்கர் அகில்யா பாயின் சேனைத் தலைவராக இருந்தார். அவர் படையுடன் சென்று க்ஷிப்ரா நதியின் கரையில் தங்கினார். அக்கரையில் ரகு நாத ராவ் முகாம் போட்டிருந்தார். நன்கு யோசித்து

உணர்ந்து பின்பு ஆற்றைக் கடந்து வருமாறு துக்கோஜி ராவ், ரகுநாத ராவிற்குச் செய்தி அனுப்பினர். இதனல். ரகுநாத ராவ் பயந்துபோய்த் திரும்பிச் சென்று விட்டார்.

இங்ஙனம் ஒரு தொல்லை நீங்கியது ; எனினும் அரசாங்கத்திற்கு இன்னொரு தொல்லை வந்து சேர்ந்தது. கிராமங்களிலும், நகரங்களிலும் கொள்ளைக்காரர்கள் மக்களை நடுங்கவைத்துக் கொண்டிருந்தனர். அகில்யா பாய் மறுபடியும் அரசவை கூட்டி, மக்களை எவ்வாறு கொள்ளைக்காரரிடமிருந்து காப்பது என்பது பற்றி ஆலோசனை நடத்தினள். அதுமட்டுமல்ல ; தனது ராஜ்யத்தில் கொள்ளையரது அட்டூழியத்தை அடியோடு அடக்கும் ஆடவனுக்குத் தனது மகள் முக்தாவை மணம் முடித்து வைப்பதாகவும் பறைசாற்றினள். ஒரு மராட்டிய வாலிபன் முன்வந்தான். தனக்குப் படை பலமும் பணவுதவியும் அளித்தால் கொள்ளையரை அடியோடு அழித்து விடுவதாக அவன் கூறினன். அவ்வாலிபனது பெயர் 'யச்வந்தராவ் பன்சே' என்பது. ஈராண்டுக் காலத்தில் அவன் நிலைமையைச் சீர்திருத்திவிட்டான். எனவே, அகில்யா பாய் தனது வாக்குப்படி மகள் முக்தாவை அவனுக்குத் திருமணம் செய்து வைத்தாள்.

இந்தூர் ராஜ்யத்தில் இப்போது கொள்ளையர் பயம் நீங்கிவிட்டது. அதன் பயனக வேறு பல ராஜ்யங்களிலிருந்து பெரிய வியாபாரிகள் இந்தூரில் வந்து குடியேறினர். இந்தூர் மிகப் பெரிய நகராகிவிட்டது. அங்கு வியாபாரம் தழைத்தோங்கியது. ராஜ்ய மக்களனைவரும் மகிழ்ச்சியுடனும் அமைதியுடனும் வாழலாயினர்.

இதன்பின் அகில்யா பாயின் கவனம் அரசாங்கச்

சீர்திருத்தத்தில் திரும்பிற்று. ராஜ்யம் முழுவதிலும் பெரிய பெரிய சாலைகளையும் கோவில்களையும், சத்திரங் களையும், கிணறுகளையும் அவள் அமைத்தாள். தனது ராஜ்யத்தில் மட்டுமல்லாமல் வெளியேயும் பற்பல புண்ணிய ஸ்தலங்களில் கோவில்களையும் அறச்சாலைகளையும் கட்டு வித்து, அவற்றில் எல்லா மக்களும் தங்குவதற்கு வசதி செய்தாள். கோடை நாட்களில் ராஜ்யம் முழுவதிலும் தண்ணீர்த் தொட்டிகள் கட்டுவித்தாள். இதனால், விவ சாயிகளுக்கும், கால்நடைகளுக்கும் தண்ணீர்க் கஷ்டம் நீங்கியது.

அகில்யா பாயின் ராஜ்யத்தில் பிள்ளையில்லாதவர் கள் வேறு குழந்தைகளைச் சுவீகாரம் செய்து கொள்ளவும், சொத்துக்களைத் தம் விருப்பம்போல் யாருக்கும் அளிக்கவும் உரிமை பெற்றிருந்தனர். கைம்பெண்கள் தம் கணவரது சொத்தைப் பெறமுடிந்தது. தேவிசந்த் என்பவன் ஒரு பணக்கார வியாபாரி. அவன் இறந்ததும், அரசாங்கச் சட்டப்படி துக்கோஜிராவ் அவனது சொத்தை அரசாங்கப் பொக்கிஷத்தில் சேர்த்துவிட விரும்பினார். ஆனால் தனக்கே அச்சொத்து கிடைக்க வேண்டுமென அகில்யா விடம் இறந்தவரின் மனைவி மகஜர் கொடுத்தாள். அகில்யா துக்கோஜிராவைத் தடுத்துவிட்டு, சொத்து முழுவதையும் அந்தக் கைம்பெண்ணிற்கே கொடுக்கச் செய்தாள். இவ் வாறு பல கதைகள் உண்டு.

அகில்யா பாய் எளிய வாழ்க்கை நடத்தி வந்தாள், அவள் அரசாங்கப் பணத்திலிருந்து தன் செலவிற்கு ஏதும் எடுத்துக் கொள்ள வில்லை; அப்பணம் அனைத்தையும் மக்களது தொண்டிற்கே செலவிட்டாள். அவளிடம் தற்புகழ்ச்சி கிடையாது. பிறர் தன்னைப் புகழ்வதற்கும்

இடங்கொடுக்கவில்லை. ஓர் அந்தணர் அவளைப் புகழ்ந்து ஒரு புத்தகம் எழுதினார். அகில்யா பாய் அதனை ஆற்றிலே எறியும்படி செய்துவிட்டாள்.

இவ்வளவு புண்ணியவதியான அகில்யா துன்பத்திற்கு மேல் துன்பமாக அனுபவித்தது எதனால் என்பது தான் தெரியவில்லை. அவள் கண்முன் கணவன், மாமன், மகன் மூவரும் மரணமெய்தினர். இப்போது அவளது அன்புப் பேரனும் முக்தாபாயின் பதினான்கு வயதுப் பாலகனுமான சிறுவன் அவள் கண்காண இறந்துவிட்டான். அதிலிருந்து ஓராண்டில் முக்தாவின் கணவனும் இறந்துவிட்டான். முக்தா தனது மகனும், கணவனும் இறந்துவிட்டமையால் நிலைகுலைந்து போனாள். அவள் தனது கணவனுடன் உடன்கட்டையேறி உயிரைத் துறக்க நிச்சயித்து, அகில்யாவிடம் அனுமதி கோரினாள். அகில்யா பாய் அவளைப் பலவாறு தேற்றி 'மகளே, இப்போது நீதானே எனக்குத் துணை. நீயும் சென்றுவிட்டால் என் காலம் எவ்வாறு கழியும்?'' என்று கூறினாள்.

முக்தா : தாயே, நீ சொல்வது சரிதான்; இருப்பினும் கொஞ்சம் யோசித்துப் பார். இது உன் வாழ்வின் இறுதியான முதுமைப் பருவம். நான் நீண்ட நாள் வாழவேண்டியவள். நீ சென்ற பின் எனக்குத் துணை யார்? நான் போன பின்பு நீ சிறிது காலம்தான் பொறுத்திருக்க வேண்டும். எனவே, நான் உடன் கட்டையேறி இறக்காமல் இருந்துவிடின் உனக்குப்பின் நான் எவ்வளவு நாள் உயிருடன் இருப்பேனோ, எனக்கு என்னென்ன நேருமோ?

இவ்வாறு மகள் பிடிவாதமாக கூறியபடியால், அகில்யா பாய் உடன்கட்டையேறுவதற்கு அனுமதி

யளித்துவிட்டாள். தன் கண்ணெதிரிலேயே தன் பெண் உடன்கட்டை ஏறுவதை அகில்யா பார்த்துக் கொண்டிருந்தாள். அப்போது அவள் அனுபவித்த அளவற்ற துன்பத்தை வருணிக்க இயலுமோ?

அறுபதாவது வயதில் அகில்யா பாய் இவ்வுலக வாழ்வை நீத்தனள். அவளுக்கு அரசாங்கத்தில் பெருந் துணையாக இருந்துவந்த சேனுபதி துக்கோஜிராவ் ஹோல்கர் இந்தூர்ச் சிங்காதனத்தில் அமர்ந்தார். துக்கோஜிராவ், அகில்யா பாயின் சிலைகளை உருவாக்கி, அவற்றை இந்தூர், பிரயாகை, நாஸிக், கயா, அயோத்தி, மகேசுவர் முதலிய இடங்களில் கோவில்களில் வைத்தார். யச்வந்த் ராவ் ஹோல்கர் மகேசுவரில் அகில்யாபாயின் ஞாபகார்த்தமாக மண்டபம் கட்டுவித்தார். இதைக் கட்ட முப்பத்து நான்கு ஆண்டுகள் ஆயின; ஒன்றரைக் கோடி ரூபாய் செலவாயிற்று. இதை மத்திய பாரதத்தின் தாஜ் மஹல் என்று அழைக்கலாம்.



## திப்பு சுல்தான்

மைசூர் ராஜ்யத்தின் பழைய தலைநகரம் ஸ்ரீரங்கப் பட்டணத்திற்கு வெளியே உள்ள லால்பாக்கில், திப்பு, அவரது தந்தை ஹைதர், தாய் பாத்திமா ஆகிய அனைவரது கல்லறைகளும் ஒரே இடத்தில் ஒரே கூரையின் கீழ் அமைந்துள்ளன. திப்புவைப் பற்றி அங்கு பொறிக்கப் பட்டுள்ள கவிதைகளில் அவரை 'ஷாஹே சஹ்தா' என்றும் 'நூரே இஸ்லாமோதீன்' என்றும் குறிப்பிடுகின்றன. 'தியாகிகளின் சக்கரவர்த்தி', 'இஸ்லாமியத்தின் ஒளி' என்பது இவற்றின் பொருள். உண்மையில் திப்பு தம்மை

இந்திய வரலாற்றில் என்றுமே அழியாதவராக்கிக் கொண்டு விட்டார்.

மிக்க வீரம் படைத்த ஹைதர் அலியின் மூத்த புதல்வர் திப்பு சுல்தான், அவரது முழுப்பெயர் பதேக் அலி திப்பு என்பது. இஸ்லாமியப் பக்கிரியான திப்பு மஸ்தானு ஔலியாவின் நினைவாக இப்பெயர் வைக்கப்பட்டது. திப்பு கி. பி. 1753-ல் அந்தப் பக்கிரியின் ஆசியால் பிறந்தார் எனக் கூறப்படுகிறது.

ஹைதர் அலி வீரத்திலும், போர்த் திறமையிலும் வரலாற்றுப் பிரசித்திப் பெற்றவர். அவர் பல போர்களில் ஆங்கிலேயரைப் படுதோல்வியுறச் செய்துள்ளார். மேலும், மைசூரில் அவர்களைக் கால் வைக்கவே விடவில்லை. அவரது மகன் திப்பு தமது சிறு பிராயத்திலேயே காட்டிய வீரம், துணிவு, போர்த்திறம் ஆகியவற்றால் அவரது புகழ் இன்னும் ஓங்கியது.

அவர் பதினெட்டாவது வயதிலேயே ஆங்கிலேயரை எதிர்த்து நடத்திய போரில் வெற்றி பெற்றிருந்தார். இந்த வெற்றி சென்னை ராஜ்யத்தின் எல்லையில் கிடைத்தது. ஹைதர் அலி ஆங்கிலேயத் தளபதியான ஸ்மித்தை விரட்டியடிப்பதற்கு ஒரு தந்திரத்தைக் கையாண்டார். அவர் திப்புவை ஐந்தாயிரம் வீரர் கொண்ட படையுடன் சென்னைக்கு அனுப்பி வைத்தார். அவரும் வெகு வேகமாகச் சென்று சென்னையை அடைந்துவிட்டார். யாருமே இதை எதிர்பார்க்கவில்லை. திப்பு வந்திருக்கும் செய்தி கிடைத்ததும், ஆங்கில கவர்னர், அவரது அவையினர் யாவரும் திடுக்கிட்டு மயங்கி நின்றனர். அச்சமயம் அவர்கள் யாவரும் கடற்கரையில் காற்று வாங்கவும் விருந்துண்ணவும் கூடியிருந்தனர். திப்பு வந்து சேர்ந்த செய்தி

கேட்டதும் அவர்கள் ஓடிச் சென்று, அருகில் நின்ற கப்பலொன்றில் ஏறித் தமது உயிரைக் காத்துக் கொண்டனர். அந்தக் கப்பல் இல்லாவிடின் திப்பு அவர்கள் அனைவரையும் கைது செய்திருப்பார் என்பதில் ஐயமில்லை. திப்பு சென்னைக் கருகிலுள்ள செயிண்ட் தாமஸ் குன்றினை (பரங்கிமலை) வசப்படுத்திக் கொண்டார். அங்கு பாது காப்பை வலுவாக்கிக் கொண்டு, அருகிலுள்ள பகுதிகளை ஆங்கிலேயரிடமிருந்து பறிக்க ஆரம்பித்தார்.

ஹைதராபாத் நிஜாம் சரியான நேரத்தில் போர்க்களத்தில் ஹைதர் அலிக்கு நம்பிக்கைத் துரோகம் செய்து, ஆங்கிலேயருக்கு உதவி புரிந்தார். அவர் தமது படைகளைப் போர்க்களத்தினின்றும் பின்வாங்கச் செய்து, ஸ்மித்தை எதிர்த்துப் போராட ஹைதரைத் தனியாக விட்டுச் சென்று விட்டார். இந்நிலையில் ஹைதர் அலி தம் படையைக் காத்துக் கொள்ள நிர்ப்பந்தமாகப் பின் வாங்க நேரிட்டது. இதைக் கண்ட பகைவர்கள் ஹைதர் தோற்றுவிட்டதாகப் பொய்ப் பிரசாரம் செய்தனர். ஹைதர் அலியின் மிக முதிய அன்னை அச்சமயம் அங்கிருந்து இரு நூறு மைல் தொலைவிலுள்ள ஹைதர் நகரில் இருந்தனள். தனது பிள்ளை தோற்றான் என்ற செய்தியை அவளால் பொறுக்க முடியவில்லை. அவள் பல்லக்கில் ஏறிப் போர்க்களத்தை நோக்கிக் கிளம்பிச் சென்றாள் தன் மகனுக்குத் தைரியம் ஊட்டுவதற்காக. அப்போது மழை காலம், நீண்ட கடினமான வழி; மேலும் போர்க்களம். ஆனால் அவள் எதற்கும் அஞ்சவில்லை. அவளுடனே ஓராயிரம் குதிரை வீரர் படை சென்றது; பல்லக்கின் முன்னால் கவசமணிந்த வீரப் பெண்கள் இருநூறுபேர் குதிரைகளின் மீதமர்ந்து சென்றனர். இவ்வாறு அவள் மகனுக்கு

உதவி செய்யச் சென்ருள். மகனைக் கிழத் தாய் சந்தித்து அவனுக்குத் தைரியம் கூறினுள்; அவன் வெற்றிபெற ஆண்டவனை வேண்டினுள்.

மங்களூரில் திப்புவுக்கும், ஆங்கிலப் படைகளுக்கும் பயங்கரமான இரண்டாம் போர் மூண்டது. மங்களூர் வாசிகளான மக்கள் திப்புவுக்கு மனமார்ந்த வரவேற் பளித்தனர். இப்பயங்கரப் போருக்குப் பின்னர் திப்புவை எதிர்த்து ஆங்கிலப் படையால் நிற்க முடியவில்லை. இவ் வெற்றி மகிழ்ச்சியில் சென்னைக் கோட்டை வாயிலில் ஒரு சித்திரம் வரையப்பெற்றது. அதில் ஹைதர் அலி அரி யணையில் அமர்ந்துள்ளார். ஆங்கிலேயர் அவருக்கு முன் உடன்படிக்கைப் பத்திரத்தை வைத்துக் கொண்டு நிற் கின்றனர். ஸ்மித்தின் மூக்கில் ஒரு யானைத் துதிக்கை தொங்குகிறது, அதிலிருந்து ஹைதர் அலியின் முன்பு தங்க மோகராக்கள் வீழ்வதாகக் காட்டப்பட்டுள்ளது.

வைசிராய் வாரன் ஹேஸ்டிங்ஸ் இப்போரில் ஆங்கி லேயரது இழி நிலையைக் கேள்விப்பட்டு நடுங்கிவிட்டார். அவர் ஸர் ஆயர் கூட்டின் தலைமையில் ஒரு பெரிய படை யையும், பதினைந்து லட்ச ரூபாயையும் வங்காளத்திலிருந்து அனுப்பி வைத்தார். தவிர, ஏழு லட்ச ரூபாய் ஆர்க்காட்டு நவாபிடமிருந்து வசூல் செய்யப்பட்டது. ஹைதர் அலி, முதுகில் ஒரு பிளவை புறப்பட்டதால் ஆர்க்காட்டுக் கோட்டைக்குத் திரும்பிவர நேர்ந்தது. பிளவை குண மாகாததைக் கண்டதும், அவர் தமது மகன் திப்புவை அழைத்து, அவருக்குச் சுல்தான் பட்டம் சூட்டினுர். பின்னர், அம்மாவீரர் 1782 டிசம்பர் 7-ந் தேதி காலமாகி விட்டார்.

அந்தச் சமயம் பாரத நாட்டின் நிலை மிக்க ஆபத்து நிறைந்ததாக இருந்தது. ஒரு புறம் சிந்தியா, போன்ஸ்லே, கெய்க்வாடு மூவரும், மறுபுறம் நிஜாமும் ஆங்கிலேயருக்குத் தலை வணங்கிவிட்டனர். நாஞ பட்நவீஸுடனும் சமரஸப் பேச்சு வார்த்தைகள் நடை பெற்று வந்தன. நாஞ ஹைதர் அலியைச் சந்திக்க ஆர்வம் கொண்டிருந்தார். இந்த ஆபத்து வேளையில் தான் திப்பு சுல்தான் பதவியில் அமர நேர்ந்தது. தமது தந்தையின் நிறைவு பெருத கனவுகளை நனவாக்க அவர் கங்கணம் கட்டிக் கொண்டார்.

வாரன் ஹேஸ்டிங்க்ஸுக்குப் பதில், காரன் வாலிஸை வைசிராயாகப் பாரதத்திற்கு ஆங்கில அரசாங் கம் அனுப்பி வைத்தது. அவர் இங்கு வந்ததுமே, திப்பு சுல்தானுக்கு எதிராகப் படையுடன் புறப்பட்டு விட்டார். காரன்வாலிஸின் படைகளுடன், திப்பு நடத்திய முதல் சண்டை சரித்திரத்தில் 'இரண்டாம் மைசூர்ப் போர்' என்று புகழ் பெற்றுள்ளது.

கி. பி. 1784-ல் ஆங்கிலேயர் திப்புவுடன் ஓர் ஒப் பந்தம் செய்து கொண்டனர். அதில் திப்புவை அவரது தந்தையின் வாரிசாக ஒப்புக் கொண்டதுடன், ஆங்கிலேயர் அவரது ராஜ்யத்திற்கு எதிராக ஒருபோதும் படையெடுக்க மாட்டார்கள் என்றும் கூறப்பட்டிருந்தது. ஆனால், இவ் வொப்பந்தம் எழுதிய மை உலர்வதற்கு முன்பே, ஆங்கி லேயர்கள் அதை மீறிவிட்டனர். அவர்கள் திப்புவிடம் அளவு கடந்த பயம் கொண்டிருந்தமையே இதற்குக் காரணம். ஆங்கிலப் பாதிரியாரான டபிள்யூ. எச். ஹட்டன் என்பவர், " ஆங்கிலத் தாய்மார்கள் 'இதோ திப்பு

பூதம் வந்துவிட்டது' என்று கூறி அழும் தமது குழந்தைகளை வாய் மூடச் செய்தனர்" என்று எழுதியுள்ளார்.

திப்புவை எதிர்த்துப் போரிட இன்னுமொரு முக்கிய காரணமும் உண்டு. அப்போதுதான் அமெரிக்கா இங்கிலாந்தின் பிடியிலிருந்து விடுதலை பெற்றிருந்தது. இதனால், இங்கிலாந்தின் கௌரவம் பாதிக்கப்பட்டது. அந்தக் குறையை இந்தியாவில் ஈடு செய்து விடுவதென அவர்கள் தீர்மானித்தனர். இந்தியாவில் அவர்கள் பூரண சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க முயன்று வந்தனர். திப்பு சுல்தான் அவர்களது வழியில் ஒரு பெரும் முள்ளாக அமைந்திருந்தார். திப்பு ஒரு வீரர் மட்டுமல்ல, நேர்மையும் நாணயமும் கொண்டவருமாவார். இதனால் அவருக்குத் தந்திரமான முறைகளில் பழக்கமேதும் கிடையாது. அவர் ஆங்கிலேயருடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தில் முழு நம்பிக்கை வைத்திருந்தார். ஆனால் ஆங்கிலேயர் திப்புவின்மீது படையெடுக்க இரகசியமாகச் சதி செய்து வந்தனர். மராட்டியர்களுக்கும், நிஜாமுக்கும் திப்புமீது இருந்த மனக்கசப்பை அவர்கள் பயன்படுத்திக் கொண்டனர். திப்புவின்மீது படை யெடுப்பதற்கு நிஜாமை நன்கு தயார்படுத்தியிருந்தனர். மறுபுறம் மராட்டியரைத் தூண்டிவிட்டுத் தம்முடன் இணைத்துக் கொண்டனர். நிஜாமையும் மராட்டியரையும் சேர்த்துக் கொண்டாலும், திப்புவை எதிர்ப்பது கடினமான செயல் என்பதையும் ஆங்கிலேயர் அறிந்திருந்தனர். திப்புவை வென்று பெரும் பகுதிகளைச் சமபாகமாகப் பங்கிட்டு நிஜாமுக்கும் மராட்டியர்களுக்கும் அளித்து விடுவதாக அவர்கள் ஆசை காட்டினர்.

ஆங்கிலச் சரித்திராசிரியர் ஃபாக்ஸ் என்பவர், " திப்புவுக் கெதிராக இயற்றப்பட்ட இச்சதி ஒரு உண்மை

யரசரை அழிப்பதற்குக் கொள்ளையர்கள் கூடிச் செய்த சதியேயாகும்,'' என்று கூறியுள்ளார். வங்காளப் படை, சென்னைப் படை இரண்டையுமே திப்பு சுல்தான் பெரு வீரத்துடன் எதிர்த்துப் போரிட்டார். அவற்றைச் சென்னை வரை விரட்டியடித்தார். எதிர்த்து வந்த மூன்று பகைவர்களை ஒருசேர வென்றது, திப்புவுக்குக் கிடைத்த முதல் பெரும் வெற்றியாகும். இப்பெருந் தோல்வி ஏற்பட்டு விட்டதை அறிந்த காரன்வாலிஸ் பிரபு மிகவும் வெட்கமடைந்து தாமே கி. பி. 1790 டிஸம்பர் 12-ந் தேதி ஒரு பெரும் படையுடன் கல்கத்தாவிலிருந்து சென்னை நோக்கி வந்தார். மறுபக்கத்தில் நிஜாம் படையும் மராட்டியப் படையும் ஒன்றுகூடி பெருமளவில் திப்புவின்மீது படையெடுத்தன. திப்புவின் அவையினர் சிலரையும், படைத் தலைவர்கள் சிலரையும், பெருந்தொகை லஞ்சம் கொடுத்து, ஆங்கிலேயர் பிரித்து விட்டனர். இவ்வாறு திப்புவின் படைக்குள்ளேயே அவருக்குத் துரோகம் செய்யக் கூடிய பலரைச் சேர்த்துவிட்டனர். உள்ளும், புறமும் திப்புவைத் தளரச் செய்யும் முயற்சிகள் குறைவின்றி நடந்தன. நாற்புறமும் ஏற்பட்ட முற்றுகையினாலும், உள்ளேயே நிகழ்ந்த நம்பிக்கைத் துரோகத்தினாலும் திப்பு பின்வாங்க நேர்ந்துவிட்டது. ஆனால் அவரது மனவுறுதி தளரவில்லை? எனினும் சோமர் பீட் போர்க்களத்தில் அவர் படுதோல்வியடைந்து ஆங்கிலேயருடன் சமாதானம் செய்துகொள்ள முன்வந்தார். மறுதரப்பில், மராட்டியரும் யுத்தத்தைத் தொடராமல் ஒப்பந்தம் செய்துகொள்ள விரும்பினர்.

1792 பிப்ரவரி 23-ந் தேதி ஒப்பந்தம் ஏற்பட்டது. திப்புவின் பாதி ராஜ்யத்தை ஆங்கிலேயரும், மராட்டியர்

களும், நிஜாமும் பங்கு போட்டுக் கொண்டனர். நஷ்ட ஈடுத் தொகையாக மூன்று கோடி ரூபாய் கொடுக்க வேண்டுமென திப்பு வற்புறுத்தப்பட்டார். அத்தொகை யில், ஒரு கோடி ரூபாய் அப்போதே அவரிடமிருந்து வசூ லிக்கப்பட்டது. அவர் தமது பாக்கித் தொகைக்குப் பணய மாகப் பத்து வயதும், எட்டு வயதும் கொண்ட தம் புதல் வர்கள் இருவரை ஆங்கிலேயரிடம் ஒப்படைக்க நேரிட்டது.

அவ்வொப்பந்தப்படி நஷ்டஈட்டுப் பாக்கித் தொகை முழுவதையும் இரண்டே ஆண்டுகளில், சொன்ன தவணையில், திப்பு கட்டிவிட்டார். அத்துடன் அவர் தமது தலைநகரத்தையும், ராஜ்யத்தையும் காப்பாற்றிக்கொள்ளப் புதிய கோட்டை கொத்தளங்களையும் அமைத்துக் கொண்டார். புதிய படை திரட்டவும் துவங்கினார். இரண்டே வருடங்களுக்குள் தமது ராஜ்யத்தின் பாழான பகுதிகளையெல்லாம் திரும்பவும் செழிப்புறச் செய்தார்.

அவரிடம் போர்த் திறமையுடன், நாடாளும் திறமையும் நிறைந்து விளங்கிற்று. திப்புவால் குறித்த காலத்திற்குள் நஷ்டஈடு கொடுக்க முடியாது. எனவே அதற்குப் பதிலாக எஞ்சிய ராஜ்யப் பகுதிகளையும் விழுங்கி விடலாம் என்று ஆங்கிலேயர்கள் எண்ணியிருந்தனர். ஆனால் அவர்களது தந்திரம் பலிக்கவில்லை. திப்புவின் வளர்ந்துவரும் வீரத்தையும் சக்தியையும் அவர்களால் சகிக்கவும் முடியவில்லை. அவர்கள் பிரெஞ்சுக்காரரைப் பல இடங்களில் தோற்கடித்து நாடு முழுவதிலும் ஆங் கிலேய ஆட்சியை நிலைநாட்டிக் கொண்டிருந்தனர். திப்புவின் சுதந்திர ராஜ்யம் மட்டுமே எஞ்சியிருந்தது.

காரன்வாலிஸிற்குப் பிறகு வெல்லெஸ்லி, திப்புவின் மீது படையெடுக்க ஆயத்தம் செய்திருந்தார். நிஜாமும்,

மராட்டியரும் திப்புவுக்கு எதிராகத் தமக்கு உதவுவார்களா என்ற சந்தேகம் அவருக்கு இருந்தது. எனவே, அந்த இருவரையும் பலவீனப்படுத்த முயற்சிகள் நடந்தன. அவர் மராட்டியர்களை ஒருவரோடு ஒருவர் மோத வைத்தார். நிஜாமிற்கு அவரது உதவிக்காக அளிக்கப்பட வேண்டிய தொகை விஷயத்தில் சிக்கல்களை உண்டாக்கினார். திப்புவின் மீது படையெடுக்கப் பொய்க் காரணங்கள் கற்பிக்கப்பட்டன. திப்பு பிரெஞ்சுக்காரருடன் சதி செய்வதாகப் பொய்ப் பழி சுமத்தப்பட்டது.

1799 பிப்ரவரி 3-ந் தேதி ஆங்கிலேயப் படை திப்புவின் ராஜ்யத்தை நோக்கிப் படையெடுத்துச் சென்றது. திப்பு உடன்படிக்கை செய்து கொள்ளத் தூது அனுப்பினார்; ஒரு தடவையல்ல, அடிக்கடி அனுப்பினார். வெல்லெஸ்லி இதைப் பொருட்படுத்தவே யில்லை. பிப்ரவரி 22-ந் தேதி தேதி அவர் போர் அறிவிப்புச் செய்தார். திப்புவை நீர் வழியாகவும் நிலவழியாகவும் முற்றுகையிட்டார். திப்பு மிக்க வீரத்துடன் ஆங்கிலேயரை எதிர்த்துப் போரிட்டார். ஆங்கிலேயர் தமது வஞ்சனையாலும் தந்திரத்தாலும்தான் திப்புவை வெற்றி கொள்ள முடிந்தது.

வங்காளம், சென்னை, பம்பாய், ஹைதராபாத் ராஜ்யங்களிலிருந்து சுமார் முப்பதாயிரம் பேரை இப்போருக்காக ஆங்கிலேயர் திரட்டியிருந்தனர். தமது ராணுவ அதிகாரிகள், படைத் தலைவர்கள் ஆகியோரின் வஞ்சனை, நம்பிக்கைத் துரோகம் ஆகியவற்றுக்குத் திப்பு அடிக்கடி ஆளாக நேரிட்டது. இந்த வஞ்சக வலையை வெல்லெஸ்லி நன்ருக விரித்து வைத்திருந்தார்.

மேகதாப் பாக் என்னுமிடத்தில் கடும் போர் நிகழ்ந்தது. அங்கும் ஆங்கிலேயரது சூழ்ச்சியும் வஞ்சனையுமே

பலன் தந்தன. மேகதாப் பாக் என்பது தலைநகர்க் கோட்டையின் பிரதான வாயிலாகும். மீர் சாதிக் என்ற திப்புவின் நம்பிக்கைக்குப் பாத்திரமான துணைவனே ஆங்கிலேயருடன் சேர்ந்துவிட்டான். அவனது உதவியுடன் ஆங்கிலேயர் கோட்டையின் சிதைந்த பகுதி வழியாக உள்ளே நுழைந்துவிட்டனர். அப்போது திப்பு எதிர்த்துப் போரிட்டார். இறுதியில் ஒரு குண்டு திப்புவினுடைய மார்பின் இடப்புறத்தில் பாய்ந்தது. இவ்வாறு காயமுற்ற போதும் அவர் இடைவிடாமல் துப்பாக்கியால் சுட்டுக் கொண்டிருந்தார். சிறிது நேரம் கழித்து இன்னுமொரு குண்டு திப்புவினுடைய மார்பின் வலப்புறத்தில் புகுந்தது. திப்புவின் குஃதிரை சல்லடைக் கண்ணாகத் துளைக்கப்பட்டுத் தரையில் வீழ்ந்துவிட்டது. திப்புவினது மார்பின் இரு புறங்களிலிருந்தும் இரத்த ஊற்றுக்கள் பெருகியோடின ; இருப்பினும் கையில் ஏந்திய வாளுடன் பகைவரை எதிர்த்து அவர் போராடினார்.

•

அவரைப் பல்லக்கில் அமர்த்தி ஒரு வளைவின் கீழ் கொண்டு சேர்த்தனர். அந்நிலையிலும் அவர் பணிய மறுத்துவிட்டார். சில ஆங்கிலேயர்கள் அப்பல்லக்கினருகில் சென்றனர். ஓர் ஆங்கிலேயன் அவரது மணிக் கிரீடத்தைப் பறிக்க முயன்றபோது, அவனை அவர் அங்கேயே வாளால் வெட்டி வீழ்த்தினார், உடனே ஒரு குண்டு அவரது வலது காதருகில் பாய்ந்தது. அவ்வீரரின் உயிர் உடனே பிரிந்தது. இரவில் பிணக் குவியலிலிருந்து அவரது உடலைத் தேடியெடுத்தபோது அவரது கைப்பிடிக்குள் வாள் அப்படியே இருந்தது. திப்பு அடிக்கடி கூறுவதுண்டு : "இருநூறு ஆண்டுகள் செம்மறியாட்

டைப் போல் வாழ்வதைவிட, இரண்டு நாட்கள் சிங்கம் போன்று வாழ்வது எவ்வளவோ சிறந்தது.''

மாவீரராகவும், கைதேர்ந்த படைத் தலைவராகவும் திப்பு விளங்கினர். அவர் சுதந்திர வெறி கொண்டிருந் தார். நாட்டில் அந்நியர் ஆட்சி ஏற்படுவதற்குக் கடும் எதிரியாக விளங்கினர். உண்மையிலேயே, அக்காலத்தில் ஹைதரும், திப்புவும்தான் ஆங்கில ஆட்சிக்குப் பெரும் விரோதிகளாக இருந்தனர். தந்தையும் தனயனுமாக அவ்விருவரும் காட்டிய வீரமும் தீரமும் நமது நாட்டின் மதிப்புக்குரிய வரலாற்றில் பொன்னேடுகளில் பெருமை யாகப் பொறிக்கப் பெற்றுள்ளன; அவை என்றுமே அழியாமல் ஒளிவீசிக் கொண்டிருக்கும்.



# தியாகராஜர்

தென்னாடு இசைக்கலையில் மிகப் பழங்காலந் தொட்டே பிரசித்திபெற்று விளங்குகிறது. தஞ்சைக்கு அருகில் திருவையாறு என்ற கிராமம் இருக்கிறது. முன்பு அங்கு இராம பக்தரான பெரியவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவரது பெயர் ராமப்பிரம்மம். இளமையிலேயே அவர் எல்லா வேத சாத்திரங்களையும் கற்றறிந்திருந்தார். அவரது மூன்று புதல்வர்களில் கடைசிப் பிள்ளைதான் தியாகராஜர். தியாகராஜரது காலம் கி. பி. 1767-லிருந்து 1847 வரை என்று கருதப்படுகின்றது.

காவிரியும் அதன் உபநதிகளுமாக ஐந்து ஆறுகள் பெருகியோடும் காரணமாக திருவையாறு என்று அக் கிராமம் பெயர் பெற்றது. பஞ்சநத க்ஷேத்திரம் என்பதும் இதன் பெயரே. ராமப்பிரம்மம் தமது பிள்ளைகளைப் படிக்க வைப்பதற்காக இந்தக் கிராமத்திற்கு வந்து வசிக்கலானார்.

தியாகராஜர் இளமை முதற்கொண்டே மிகக் கூரிய அறிவு உள்ளவராக இருந்தார். அவர் கொஞ்ச காலத் துக்குள்ளேயே மகாபாரதம், பாகவதம், புராணங்கள், இராமாயணம் முதலியவற்றைக் கற்று விட்டார். ஆனாலும் இவற்றுள் இராமாயணமே அவருக்கு மிகவும் பிரியமான நூலாகும். இராமாயணப் பற்றின் காரணமாக விரை விலேயே அவர் ஒரு இராம பக்தராகி விட்டார்.

அவர் அதிகாலையிலேயே எழுந்து காவிரியில் நீராடு வார்; பூஜையும் இராமாயண பாராயணமும் செய்துவிட்டு இராம நாமங்களை எழுதுவார். பின்னர் தந்தையுடன் கற்கச் செல்வார். மாலையில் பஜனைப் பாடல்களைப் பாடி, மக்களுக்கெல்லாம் பகவானது லீலைகளை எடுத்துக் கூறி வந்தார்.

அவரது குரல் மிகுந்த இனிமை வாய்ந்ததாக இருந்தது. ஆகவே, மக்கள் அவரது பஜனை கீதங்களை ஆர்வமுடன் கேட்டு வந்தனர்.

தஞ்சை அரச சபையில் வீணையில் வல்லவரான ஓர் ஆஸ்தானப் புலவர் இருந்தார். அவர் பெயர் வேங்கட ரமணய்யா. அதிர்ஷ்டவசமாக, அப்புலவரது வீடும், தியாகராஜரின் தெருவிலேயே இருந்தது. தியாகராஜர் எந்தக் குருவிடமும் முறைப்படியாக இசை பயிலவில்லை;

இருப்பினும் அவரது இசையார்வத்திலும், இனிய குரலிலும் மிகவும் ஈடுபட்டு வேங்கடரமணய்யா அவரைத் தமது சீடராக்கிக் கொண்டார்.

ஓராண்டுக் காலத்திலேயே தியாகராஜர் தமது குருவிடமிருந்து வித்தைகளையெல்லாம் பயின்றுவிட்ட துடன், தாமே ராக ஆலாபனை செய்யவும், தாளம் பாட வும், சுவரங்கள் இசைக்கவும் துவங்கிவிட்டார்.

தியாகராஜர் பக்தியில் திளைத்திருந்தபடியால், உலக விஷயங்களைப் பற்றி அறியாதவராயிருந்தார். அவரது பதினைந்தாவது வயதிலேயே அவரது தாய்-தந்தையர் விண்ணுலகம் எய்திவிட்டனர். அவரது இரு அண்ணன் மார்களும் அவரை வெகுளியென அறிந்து சொத்து முழு வதையும் தாமே எடுத்துக் கொண்டுவிட்டனர். அவருக்கு ஒரு சிறிய வீடும், இராமர் விக்கிரகமும், பூஜைப் பெட்டி யொன்றும் மட்டுமே கொடுத்தனர். தியாகராஜர் அவற் றைக் கொண்டே சந்தோஷ மடைந்தார். அவருக்கு வேறு என்னதான் தேவை?

தியாகராஜரது கீதங்களைக் 'கீர்த்தனங்கள்' என்று அழைப்பர். அவருடைய இசையின் பெருமை பற்றி ஒரு கதை உண்டு: தேவரிஷி நாரதரே தியாகராஜரது இசையைக் கேட்க ஒரு சமயம் விரும்பினாராம். அவர் ஒரு சாது வேடம் பூண்டு தியாகராஜரது வீட்டிற்கு வந்தார். அவர் வந்த சமயம் தியாகராஜர் தம்மையே மறந்து ஈசுவர கீர்த்தனம் செய்துகொண்டிருந்தார். நாரதர் மகிழ் வடைந்து அவர்க்கு ஒரு பனையோலைச் சுவடியை அளித் தார். அந்நூலின் பெயர் 'ஸ்வரார்ணவம்' என்பது. ஆனால், இன்று இச்சுவடி கிடைக்கவில்லை.

தியாகராஜர் மிக அழகாகப் பாடி வந்தமையால், அவரது இசையைக் கேட்பதற்கு வெகு தூரத்திலிருந்தும் மக்கள் வந்து சென்றனர். அவரது பக்தியின் புகழ் எத் திசையும் பரவியிருந்தது. இசைக் கலையில் வல்ல மற்ற வித்துவான்கள் அவரது பிரசித்தியினுல் மிகவும் பொருமை கொண்டனர்; அவருக்குத் துன்பம் விளைவிக்க அவர்கள் முயற்சி செய்தனர். அவரது நலனை நாடிய சிலரோ, அக்கலைஞரது இசைக்கலையின் நாத அலைகள் குடிசைகளைக் கடந்து சென்று அரண்மனைகளில் எதிரொலிக்க வேண்டு மென விரும்பினர். அதனுல், அவர்கள் தியாகராஜரை அரசவைக்குச் செல்லுமாறு தூண்டி வந்தனர்.

நாளடைவில் தியாகராஜரது இசை பற்றிய செய்தி அரண்மனையையும் எட்டியது. அப்போது தஞ்சையில் அரசராக சரபோஜி இருந்து வந்தார். இவ்வளவு பெரிய கலை மேதை தமது அரசவையை அலங்கரித்தால் மிக நன்ருக இருக்கும் என்று அவர் ஆசைப்பட்டார். நிறையப் பணமும், பரிசில்களும் கொடுத்து, சில அதிகாரிகளைத் தியாகராஜரிடம் அவர் அனுப்பினுர். ஆயினும் இராம பிரானின் திருவடிகளில் பக்தி பூண்ட தியாகராஜரை உலக மாயையால் கவர முடியவில்லை. தியாகராஜரது சகோதரர் களும் அவருக்கு எவ்வளவோ எடுத்துச் சொன்னுர்கள். ஆனுல் அவர் அவர்களது வார்த்தைகளுக்குச் செவிசாய்க்க வில்லை. தமது கருத்தை ‘நிதி சால சுகமா, ராமுனி ஸந்நிதி சால சுகமா?’ என்ற பாடல் மூலம் வெளிப்படுத்தினுர். “இன்பம் பணத்தினுலா, இராம ஸந்நிதியிலா?” என்பது இதன் பொருள். இந்த மனவுறுதி காரணமாக அவர் அரசவைக்குச் செல்லவில்லை.

இந்த இராம பக்தர் பிக்ஷையெடுத்துத் தமது குடும்

பத்தைக் காப்பாற்றி வந்தார். அவர் இராம பஜனை செய்துகொண்டே வாரத்தில் ஒரு நாள் வீடுதோறும் பிக்ஷையெடுப்பார். அன்று கிடைத்ததைக் கொண்டு வாரம் முழுவதும் ஜீவனம் நடத்துவார்.

ஒரு நாள் இரவு நேரம். தியாகராஜர் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். அவரது அண்ணு "விக்கிர கங்களைக் காவிரியில் போட்டுவிட்டால், யாவும் சரியாகி விடும். பின்பு தியாகராஜர் பாடல் பாடித் தனம் திரட்டு வார்" என்று நினைத்தார். அவ்வளவுதான், அவர் விக்கி ரகங்களைத் திருடிச் சென்று காவிரியில் எறிந்துவிட்டார். காலையில் தியாகராஜருக்கு அவரது இஷ்ட தெய்வங்களின் விக்கிரகங்கள் கிடைக்கவில்லை. இதனுல் அவர் பெருந் துன்பப்பட்டுக் கதறியழ ஆரம்பித்தார். அழுதழுது ஆண்டவனை அழைத்தார். ஆயினும் ஆண்டவன் அப் போது அவரைச் சோதித்து நின்ருன் போலும்.

தியாகராஜர் தம் வீட்டிலிருந்து புறப்பட்டு விட்டார். விக்கிரகங்கள் அகப்படும்வரை வீட்டிற்குள் அடியெடுத்து வைப்பதில்லை என்று நிச்சயித்துவிட்டார். பற்பல இடங் களில் அலசித் தேடினுர். ஆனுல் அவை கிடைக்கவில்லை. நம்பிக்கையிழந்து பெருந்துயர் கொண்டார். ஒரு நாள் நள்ளிரவில் தியாகராஜர் ஒரு கோவிலில் தூங்கிக் கொண் டிருந்தபோது, திடீரென ஒரு காட்சியைக் கண்டார். இராமனும் இலக்குவனும் அவர் முன் தோன்றி "எழுந் திடுக; உமது விக்கிரகங்கள் காவிரியாற்றின் மணலுக் கடியில் புதைந்து கிடக்கின்றன" என்று சொன்னுர்களாம். தியாகராஜருக்குக் குபேர நிதி கிடைத்ததுபோல் இருந்தது. விக்கிரகங்களைத் தேடிப் பெற்றதும் அவர் மனதில் மகிழ்ச்சி தாண்டவமாடியது, ஆனந்தக் கண்ணீர் பெருகி

யோடிற்று. விக்கிரகங்களுடன் வீடு திரும்பியதும் அவரது மனைவியும் பேரானந்தம் கொண்டனள். இதைப் பார்த்த அவரது சகோதரர்களும் அவரது பக்தியால் கவரப்பட்டு தலைவணங்கி நின்றனர்.

சுந்தரேச முதலியார் என்பவர் தியாகராஜரிடம் மிக்க பக்தி பூண்டிருந்தார். ஒரு நாள் தியாகராஜரை அவர் தமது வீட்டிற்கு அழைத்துச் சென்று வெகு விமரிசையாக உபசாரங்கள் புரிந்தார். புறப்படும்போது முதலியார் தியாகராஜரது பல்லக்கில், அவரிடம் கூறாமலேயே ஓராயிரம் ரூபாய் கொண்ட பையை வைத்து விட்டார். அதே பாதையில் ஒரு கொள்ளையர் கூட்டம் சென்று கொண்டிருந்தது. கொள்ளையர்கள் பல்லக்கின் மீது கற்களை வீசத் துவங்கினர். தியாகராஜருக்கு மிகுந்த வியப்பு ஏற்பட்டது. தம்மிடமிருந்து இக்கொள்ளைக்காரர்களுக்கு என்ன கிடைக்குமென்று அவர் எண்ணினார். அப்போதுதான் ஒரு சீடர் பல்லக்கில் ஓராயிரம் ரூபாய்ப் பை ஒன்றை முதலியார் வைத்துள்ளார் என்பதை எடுத்துரைத்தார்.

“ நான் இத்தனை ரூபாயை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறேன் !” என்று தியாகராஜர் நினைத்தார். ஆகவே அவர் கொள்ளைக்காரத் தலைவனை அழைத்து வரச் செய்து அப்பணத்தை எடுத்துக் கொள்ளுமாறு அவனிடம் கூறினார்.

தலைவன் கைகூப்பிக் கொண்டு சொன்னான்: “இதோ பாருங்கள் எனது உடலில் எத்தனை காயங்கள் ஏற்பட்டுள்ளன. நாங்கள் தங்கள் மீது எறிந்த கற்களையெல்லாம், யாரோ இரு வீர ராஜகுமாரர்கள் திரும்ப எங்கள்

மீது வீசினர். எனவே, பெரியாரே, எங்களை மன்னித்து அருளுங்கள்.''

இராமபிரானும் இலக்குவனும் நேரில் வந்து காப் பாற்றியுள்ளார் என்பதைத் தியாகராஜர் உணர்ந்து கொண்டார். "உங்களுக்கும் பகவானது தரிசனம் கிடைத்துவிட்டது,'' என்று அவர் திருடர்களிடம் கூறினர்.

திருடர்கள் மிகவும் வெட்கமடைந்து தாமே தம் தோள் களில் பல்லக்கைச் சுமந்து சென்று, தியாகராஜரை காஞ் சிமா நகர் வரை கொண்டு சேர்த்தனர்.

தியாகராஜரது வாழ் நாளிலேயே அவரது இல்லாள் இகவுலக வாழ்வை நீத்துவிட்டனள். இந்தத் துன்ப நிகழ்ச்சிக்குப் பின்னர் அவர் துறவறத்தை மேற்கொண்டு விட்டார்.

தை மாதம் கிருஷ்ணபக்ஷத்துப் பஞ்சமி நாள் துறவு பூண்டு பத்து தினங்களே கழிந்திருந்தன. அன்று தியாகராஜர் சமாதியில் ஆழ்ந்துவிட்டார். இதுவே அவரது இறுதி சமாதி நிலையாகிவிட்டது. நாடு முழுவதிலும் இந்த நன்னாள் அவரது நினைவு நாளாகக் கொண்டாடப்படு கின்றது.

தியாகராஜர் ஓர் இசை நூலும் எழுதினர். அதன் பெயர் 'சதராக ரத்நமாலிகா' என்பதாகும். துரதிர்ஷ்ட வசமாக, அது இப்போது கிடைப்பதில்லை. இரண்டு செய்யுள் நூல்களையும் அவர் இயற்றினர். அவற்றில் பிரகலாத சரித்திரமும், கோபியர்-கண்ணன் ஆகியோரது யமுனைக்கரை லீலைகளும் முறையே இடம் பெற்றுள்ளன.

தியாகராஜர், முத்துஸ்வாமி தீக்ஷிதர், சியாமா

சாஸ்திரி ஆகிய மூன்று பெரும் இசைக் கலைஞர்களைக் காவிரி க்ஷேத்திரம் அளித்தது. மூவரும் ஒரே காலத்தில் வாழ்ந்தவர்கள், மூவருமே தாம் பிறந்த தலத்தின் பெருமையையும், அழகையும் பற்றிப் பாடியுள்ளனர். அங்கு ஓடிய ஐந்து ஆறுகள், கோவில்களில் குடிகொண்டிருக்கும் மூர்த்திகள் ஆகியவை பற்றிப் போற்றியுள்ளனர்.

தமது வாழ்நாளில் தியாகராஜர் ஆயிரக்கணக்கான கீர்த்தனைகளை இயற்றினார். புகழ் பெறுவதற்கோ, பணம் சம்பாதிப்பதற்கோ இப்பாடல்களை அவர் இயற்றவில்லை ; ஆண்டவனது சிறந்த பக்தர் என்ற முறையிலேயே இயற்றினார். மற்ற இசைப் புலவர்கள் போன்று அவர் அரசர்களை அண்டிப் பிழைக்கவில்லை. உண்மையில் அவரை எத்தனையோ அரசர்கள் அவைக்களத்துக்கு வருமாறு அழைத்தபோதிலும், அவர் உறுதியுடன் மறுத்துவிட்டார். அவர் தம் காலத்திலேயே மிக்க புகழ் எய்திவிட்டபடியால், நூற்றுக்கணக்கான சீடர்கள் அவரை நாடி வந்தனர். அவரது கீர்த்தனங்களில் கவிதையும் இசையும் கலந்து மிளிர்கின்றன. அவரது திருவாயிலிருந்து ஆயிரக்கணக்கான பக்திப் பாடல்கள் வெளிப்பட்டன. ஆயினும், துர்ப்பாக்கிய வசமாக அவையனைத்தும் நமக்கு இப்போது கிடைக்கவில்லை. ஒரு சிலவே கிடைத்துள்ளன.

தியாகராஜர் இராமபிரானிடம் பக்தி பூண்டு இராமபிரான் மீதே தம் பாடல்களில் பெரும்பாலானவற்றைப் பாடியுள்ளார். ஆனாலும் வேறு தெய்வங்களைப் பற்றிய சில பாடல்களும் உள்ளன. தமது பல கீர்த்தனைகளில் தியாகராஜர் இசையை ஒரு கருவியாகவும், இஷ்ட தெய்வ வழிபாட்டிற்கான ஒரு முக்கிய சாதனமாகவும் குறிப்பிட்

டுள்ளார். மற்றும் பல இடங்களில் 'நாதமென்னும் அமுத ரசம்' என்றும் போற்றுகிறுர். தியாகராஜர் தமது பக்தியை வெளிப்படுத்துவதற்கு 'நாதப் பிரம்மத்தை' (இசைத் தத்து வத்தை) கையாண்ட காரணத்தால், தமது பிரதேசத்தின் எல்லேக்குள்ளே அடங்காமல், பாரத நாடு முழுவதும் விண்வெளி நெடுகப் பரவி நிற்கின்ருர்.



# ராம் மோஹன்ராய்

எப்பொழுது பாரத நாட்டில் பல மனிதர்கள் ஆங்கிலக் கல்வி கற்று கிறிஸ்தவ மதத்தை ஏற்கத் துவங்கினரோ அதே காலத்தில் ஒரு பெரியார் இந்து மதத்தின் அடிப்படைத் தத்துவங்களை மக்களிடையே பிரசாரம் செய்து, நம் மதத்தைத் துறப்பது அர்த்தமற்றது என நிரூபித்தார். அவரது பெயரே ராஜாராம் மோஹன்ராய்.

வங்காளத்தில் ராதா நகர் என்ற கிராமத்தில் கி. பி. 1774-ல் ராம் மோஹன் பிறந்தார். (சிலர் கி. பி. 1772-ல் என்றும் கூறுகின்றனர்.) இவரது தந்தையின் பெயர் ராமகாந்த் ராய், தாயார் தாரினி தேவி. தாரினி தேவியின் தந்தையார் வருங்காலத்தை யுணர்ந்து "ராம் மோஹன்

காலம் வரும்போது தனிச் சிறப்புள்ளவனுக விளங்கு வான்" என்று கூறியிருந்தார். அவ்வாறே நடந்தது.

ராம் மோஹனின் ஞாபக சக்தி அபாரமானது. தாம் கேட்ட எந்த வாக்கியத்தையும், அப்படியே நினைவில் வைத்துக் கொண்டுவிடுவார். சிறு பிராயத்திலேயே பார சீகம், அரபி இரு மொழிகளையும் அவர் கற்று விட்டார். பன்னிரண்டாம் வயதில் அவர் சம்ஸ்கிருதம் கற்பதற்காகக் காசிக்குச் சென்ருர். அங்கு வேதாந்த சாத்திரத்தையும், உபநிடதங்களையும் கற்றவுடன், பரம்பொருள் ஒன்றே, அது அநாதியானது, 'அதைத் தியானம் செய்வதே எதனினும் மேம்பட்டது என்று அவருக்கு நம்பிக்கை ஏற் பட்டது. பதினறு வயதிலேயே அவர் தமது கருத்துக் களைப் புத்தகங்கள் வாயிலாகப் பிரசாரம் செய்ய ஆரம்பித்து விட்டார். ஊராரின் கண்டனத்துக்குப் பயந்து ராம் மோஹனை அவரது தாய் தந்தையர் வீட்டைவிட்டு வெளி யேற்றிவிட்டனர். பதினெட்டு வாலிபரான அவர் திபேத்துக்குப் போய்ச் சேர்ந்தார். திபேத்தில் நிலவிய மதமும் அவருக்குத் திருப்தி அளிக்கவில்லை; அதில் குறைகள் இருப்பதாக அவர் கருதினர். இதன் காரண மாகப் பல திபேத்தியர்கள் ராம் மோஹனுக்கு எதிரிகளாகி விட்டனர். அவர்கள் அவரைக் கொன்றுவிடவும் முயன் றனர். அதிர்ஷ்டவசமாக இரக்கமுள்ள சில பெண்மணி களின் உதவியால் அவரது உயிர் தப்பியது.

ராம் மோஹன்ராய்க்குக் கல்வியில் மிகுந்த ஆர்வம் இருந்தது. அவரது அறிவும் மிகவும் கூரியது. பதினறு பிராயத்திற்குள்ளாகவே அவர் வங்காளி மொழியுடன், உருது, பாரசீகம், சம்ஸ்கிருதம் ஆகியவற்றில் நல்ல தேர்ச்சி

பெற்றிருந்தார். அவர் படிக்க அமர்ந்துவிட்டால் சாப் பாட்டைப் பற்றிய சிந்தனையே இராது. ஒரு நாள் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு வால்மீகி இராமாய ணத்தைப் படிக்க அமர்ந்தார். ஏழு காண்டங்களையும் முழுவதும் படித்து முடிப்பதற்குமுன் இடத்தை விட்டு அவர் எழுந்திருக்கவேயில்லை.

அவர் ஓர் பேரறிஞர்; மதங்களை நன்கு கற்றறிந் தவர். இதனால்தான் அவர் விக்கிரக பூஜைக்கு எதிர்ப்புக் குரல் எழுப்பியபோது காசி நகரின் போலிப் பண்டிதர் களால் அவரது வாதங்களைக் கண்டிக்க முடியவில்லை. ஆனால், அவர்கள் மறைமுகமாக அவரை நாத்திகரென்றும் மதத் துரோகியென்றும் ஏசுவதில் குறையேதும் வைக்க வில்லை.

சில மத நம்பிக்கைகளுக்கு எதிராகப் பிரசாரம் செய்த காரணத்தினால், நாட்டு மக்கள் முன்பேயே ராம் மோஹனது விரோதிகளாகி யிருந்தனர். உடன்கட்டை யேறிப் பெண்கள் உயிர் துறக்கும் வழக்கத்தைக் கண்டித்து அவர் பிரசாரம் செய்யத் துவங்கியதும், பகைவர்களின் எண்ணிக்கை இன்னும் அதிகரித்தது. தந்தை மறுபடியும் ராம் மோஹனை வீட்டினின்றும் வெளியேற்றிவிட்டார்.

தந்தை காலமான பின்னர் ராம் மோஹனுக்குப் பூரண சுதந்திரம் கிடைத்து விட்டது. ஆனால், பிள் ளைக்குத் தகப்பன் சொத்துக் கிடையாதென அவரது தாயாரையே வழக்கிடுமாறு தூண்டுகோலிட்டுப் பகை வர்கள் தொந்தரவு கொடுத்தனர். மதப் பிரஷ்டரான ராம் மோஹன் அக்காலச் சட்டப்படி தந்தையின் சொத் துக்கு உரியவரல்லர் என்று அப்பகைவர்கள் காரணம்

கூறினர். ராம் மோஹன்ராய் தாம் தந்தையின் மதத்தி னின்றும் விலகிச் செல்லவில்லையெனவும், அதன் உயர் வுக்கே முயல்வதாகவும் சான்றுகள் காட்டி நிரூபித்தார். இதனால் வழக்கில் அவரே வென்றார்; ஆயினும் தந்தை யின் சொத்தைத் தாய்க்கே திரும்ப அளித்துவிட்டார்!

தமக்கு ஓர் உயர்ந்த அரசாங்கப் பதவி கிடைத்து விடின் மக்கள் தமக்கு மதிப்பளித்துப் பயப்படவும் செய்வ ரென அவர் எண்ணினார். முன்னர் நடந்த வழக்கின் காரணமாகப் பல ஆங்கிலேயர்கள் அவருக்கு அறிமுகமா யிருந்தனர். எனவே, தாம் அரசாங்க அலுவல் ஏற்க விரும்புவதாக ரங்கபூரின் டிபுடி மாஜிஸ்டிரேட்டினிடம் அவர் கூறியதும், அவ்வதிகாரி மிக்க மகிழ்வு கொண்டார். ராம் மோஹனுக்கு விரைவிலேயே அரசாங்க உத்தியோகம் கிடைத்துவிட்டது. அவர் தமது இலாகாவில் நல்ல அபி விருத்திகளைச் செய்தார். ஆனால் சமூக சேவை புரிவதற்கு நேரம் கிடைக்காத காரணத்தினால் அவர் பதினான்கு ஆண்டு கள் வேலை பார்த்துவிட்டு அதிலிருந்து விலகிவிட்டார்.

வேலையினின்றும் நீங்கியதும், ராம் மோஹன் பிரம்மஞானப் பிரசாரத்தில் ஈடுபட்டார். வேதாந்த நூல் களையும், உபநிடதங்களையும் வங்காளியிலும், ஆங்கிலத் திலும் அவர் மொழிபெயர்த்தார். இந்து மதத்தின் சில போலிச் சடங்குகளைக் கண்டித்தும் பல புத்தகங்களை எழுதினார். இதனால் பலர் அவருக்குக் கடும் பகைவர் களாகிவிட்டனர். கல்கத்தாவைச் சார்ந்த ஒரு பட்டாசாரி யார் அவரது கொள்கைகளைக் கண்டிப்பதற்காக, 'வேதாந்த சந்திரிகை' என்ற ஒரு புத்தகத்தை வெளியிட்டார். ராம் மோஹன் சும்மாயிருந்துவிடுவாரோ? அவர் தமது

கொள்கையை விவரித்து எழுதி, பரமாத்துமாவைத் தியானிப்பதே இந்து மதத்தின் சாரம் என்று நிரூபணம் செய்தார்.

சுமார் நாற்பதாவது வயதில் ராம் மோஹன் கிராமத்தைவிட்டு, கல்கத்தாவிற்கு வந்தார். அங்கு மாணிக்தல்லா என்னுமிடத்தில் ஒரு வீட்டை விலைக்கு வாங்கினார். இவ்வீட்டில், 'ஆத்துமீய சபை' என்ற ஒரு சபையை நிறுவினார். இந்தச் சபையில் பரம்பொருள் தியானம் நடந்து வந்தது. இப்போது பல நல்லோர்களும், தனிகர்களும், பெரும் பதவியில் இருந்த இந்துக்களும் ராம் மோஹன் ராயுடன் சேர்ந்து கொண்டனர். இவ்வாறு பிரம்ம மதத்தை ஒப்புக் கொள்வோரது எண்ணிக்கை நாள் தோறும் வளர்ந்து வரலாயிற்று; கிறிஸ்தவத்திற்கு மாறுவோரின் எண்ணிக்கை குறைந்தது. இதனால் கிறிஸ்தவப் பாதிரிகள் அவரை எதிர்க்கலாயினர். ஆனால், ராய் அவர்களை உறுதியுடன் எதிர்த்து நின்றார். முன்பெல்லாம் சனாதன இந்து மதத்தவரது கருமாநுஷ்டானங்களின் கடுமை காரணமாகவே சிலர் கிறிஸ்தவராக மதம் மாறினர். இப்போது 'பிரம்ம சமாஜம்' நிறுவப்பட்டவுடன், மக்கள் கிறிஸ்தவத்தை நோக்கிச் செல்லாமல் பிரம்ம சமாஜத்தில் சேரத் துவங்கினர். இதே சமயத்தில் வில்லியம் ஆடம் என்ற ஓர் ஆங்கிலப் பாதிரியார் ராம் மோஹன்மீது கிறிஸ்தவ மதத்தைத் திணிக்க முயற்சிகள் செய்தார். அதன் பயன் நேர்மாறாகிவிட்டது; ராம் மோஹனது கொள்கைகளாலும், சீரிய கருத்துக்களாலும் கவரப்பெற்று, பாதிரியார் அவரைப் பின்பற்றும் சீடராகிவிட்டார்! இதனால், கிறிஸ்தவர்களிடையே குழப்பம் ஏற்பட்டது.

ஆத்துமீய சபையின் அலுவல்கள் உற்சாகமாக நடந்து வந்தன. சுப்பிரமணிய சாஸ்திரி போன்ற பெரும் பண்டிதர்களை வாதப் போரிலே ராம் மோஹன் வாயடைக்கச் செய்யவே அவரது புகழ் மேன்மேலும் ஓங்கியது. ராயின் உபதேசங்களில் உண்மையின் ஒளியினைக் கண்ட உயர் நோக்குக் கொண்ட பல இந்துக்களும் இந்து மதத்தைக் காத்து நிற்பதற்காக அவரது குழுவில் சேர்ந்து கொண்டனர்.

ராம் மோஹன் சமூகச் சீர்திருத்தப் பணிகளிலும் ஈடுபட்டார். அப்போதைய வைசிராயான பெண்டிங்க் பிரபுவிடம், இந்து சாத்திரங்களைச் சான்று காட்டி உடன் கட்டையேறும் வழக்கத்தின் தீமையை அவர் எடுத்துரைத்தார். உடனே, அரசாங்கம் சட்டமியற்றி இவ் வழக்கத்திற்குத் தடை போட்டுவிட்டது. ஓர் ஆண் பல மனைவியரை மணம் புரிந்துகொள்வது போன்ற தீய வழக்கங்களைத் தடுப்பதிலும் ராம் பெரிதும் ஒத்துழைத்தார். ராம் மோஹன் பெண்களின் சொத்துரிமை பற்றியும் தீவிரமான ஆராய்ச்சி நடத்தினர். கணவன் இறந்த பின்பு ஒரு பெண் சமூகத்தில் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் உரிமையைப் பெறவேண்டுமென்று அவர் நினைத்தார். பெண்களை விற்கும் வழக்கத்திற்கு அவர் சாவு மணி அடித்தார். ஆங்கில மொழி நாட்டில் நன்கு பரவாவிடின் அறிவின்மையும் தீய பழக்கங்களும் ஒழிய மாட்டா என்று எண்ணி ஆங்கிலக் கல்வியைப் பரப்புவதற்கும் அவர் முயற்சி செய்தார். கல்வி புகட்டுவதையே விரதமாகக் கொண்டிருந்த டேவிட் ஹெயர், ராம் மோஹன் இருவரும் மேற்கொண்ட முயற்சியின் பயனாகக் கல்கத்தாவில் இந்துக் கல்லூரி என்ற பிரசித்தமான கல்வி நிலையம்

நிறுவப்பட்டது. ராம் மோஹன்ராயின் முயற்சி காரணமாக இந்திய நீதி மன்றங்களில் ஜூரர்களைச் சாதிபேதமின்றித் தெரிந்தெடுக்கும் ஏற்பாடு அமுலுக்கு வந்தது.

மத, சமூக சீர்திருத்தப் பணிகளில் ஈடுபட்டிருந்த காரணத்தினால் ராம் மோஹன் அரசியலிலும் பங்கு கொள்ள நேரிட்டது. இந்திய நாட்டின் சட்டங்களை வகுக்கும் பொறுப்பில் மக்களின் பிரதிநிதிகளுக்கும் பங்கு இருக்க வேண்டும் எனவும், பழைய பஞ்சாயத்து முறையை மறுமடியும் அமுல் நடத்த வேண்டுமெனவும் அவர் ஆங்கில அரசாங்கத்தினிடம் எடுத்துரைத்தார்.

அவர் பிரிட்டனுக்குச் சென்று இந்தியரது அவல நிலையை அந்நாட்டு மக்களுக்கு எடுத்துரைக்கவும் எண்ணினார். இந்தக் காரணத்திற்காக அதற்கு முன்பு எந்த இந்தியனும் அயல்நாடு சென்றதில்லை. ராம் மோஹன் இவ்வாறு இங்கிலாந்து செல்லும் வாய்ப்பை எதிர்நோக்கியிருந்தபோது தில்லிப் பாதுஷா கிழக்கிந்தியக் கம்பெனியுடன் தமக்கு ஏற்பட்டிருந்த தகராறை எடுத்துக் கூறுவதற்காக இங்கிலாந்திற்கு அனுப்பிவைக்க ஓர் ஆளைத் தேடிக் கொண்டிருந்தார். ராம் மோஹன்ராய் இதற்கு மிகவும் தக்கவர் என்பதைப் பாதுஷா உணர்ந்து, அவருக்கு 'ராஜா' என்ற பட்டமும் அளித்து, அவரை அயல்நாட்டிற்கு அனுப்பிவைத்தார்.

அயல்நாடு சென்ற ராம் மோஹன் இந்தியரது நிலையை அங்குள்ளோருக்கு எடுத்துணர்த்தினார். இந்தியர்களுக்கு உயர்ந்த அரசாங்கப் பதவிகளை அளிக்க வேண்டும் என்றும் பிரிட்டிஷ் சர்க்காரிடம் ராம் மோஹன்ராய் வேண்டிக் கொண்டார்.

பிரிட்டனில் ராம் மோஹனுக்கு மனமார்ந்த வரவேற்பு கிடைத்தது. ஆங்கில மக்களை அவரது சொற்பொழிவுகள் பெரிதும் கவர்ந்தன. பேரறிஞர்களும், பாதிரிகளும் அவரைச் சந்தித்து வந்தனர். ஒரு பாதிரி அவரால் மிகவும் கவரப்பட்டார். அவர் தமது குழந்தையின் பெயர் சூட்டு விழாவிற்கு ராம் மோஹனை அழைத்தார். குழந்தைக்கு ராம் மோஹன் என்ற பெயரையே வைத்து தமக்கு அவரிடமிருந்த மதிப்புணர்ச்சியை அவர் வெளிப்படுத்தினர். அங்கிருந்த செய்தித் தாள்களிலும் அவரைப் பற்றிய புகழுரைகள் வெளியாயின : அவர் சிறிது காலம் பிரிஸ்டல் நகருக்குச் சென்று தங்கினர். அங்கிருந்த மக்களுடன் அவர் நன்கு கலந்துவிட்டார். அம்மக்களது உள்ளங்களில் சமூக சேவை மனப்பான்மைக்கு வித்திட்டார். 1883 செப்டம்பர் 27-ந் தேதி அந்த நகரிலேயே அவர் காலமாகிவிட்டார்.

இந்திய மக்களிடையே விழிப்பேற்படச் செய்த பணியில் பெரும் பகுதி ராம் மோஹன்ராயைச் சேர்ந்தது. மக்கள் மூட நம்பிக்கைக்கும், அறிவின்மைக்கும் இரையாகிக் கிடந்த அந்நாட்களில், மத, சமூகச் சீர்திருத்தம், கல்விப் பிரசாரம் ஆகியவற்றில் ஈடுபட்டு, பலப்பல இடையூறுகளையும் பகைவர்களையும் எதிர்த்துப் போராடி முன்னேறிச் செல்வது என்பது மிகத்துணிச்சலான செயலாகும். கடமை புரியும் மனவுறுதியினுலும், சீரிய பண்பினுலும் ராம் மோஹன்ராய் தமது இலட்சியத்தில் வெற்றி பெற்ருர். தம்முடைய ஜமீனில் பிரஜைகளுக்கு எவ்விதக் கஷ்டமும் நேராமல் அவர் கவனித்து வந்தார். அவர் உண்மையான தருமாத்துமாவாகவும், சீர்திருத்தவாதியாகவும், தேச பக்தராகவும் விளங்கினர்.



# மகாராஜா ரன்ஜித் சிங்

மகாராஜா ரன்ஜித் சிங் 'பஞ்சாப் சிங்கம்' என அழைக்கப்பட்டு வந்தார். அவரது கர்ஜனையினுல் அக்கம் பக்கத்திலிருந்த அரசர்கள் யாவரும், ஆங்கில ஆட்சி யாளரும்கூட, நடுநடுங்கினர்.

கி. பி. 1780-ல் அவர் பிறந்த சமயத்தில், பஞ்சாப் சிறு சிறு ராஜ்யங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அங்குப் பன்

னிரண்டு சீக்கிய ராஜ்யங்கள் இருந்தன. அவரது தந்தையார் மகாசிங் அப்பன்னிரண்டுள் ஒன்றுக்குத் தலைவராக இருந்தார். பன்னிரண்டு ராஜ்யங்களையும் இணைத்து ஒரு விசாலமான சீக்கிய அரசை நிலைநாட்டிவிட அவர் விரும்பினார். ஆனால், அம்முயற்சியில் அவர் வெற்றிபெற முடியவில்லை.

மகாராஜா ரன்ஜித் சிங் பன்னிரண்டு வயதினராக இருக்கும்போதே, தந்தையார் மகாசிங் காலமாகிவிட்டார். அச்சிறு பிராயத்திலேயே மகனது மனதில் ஒரு போர் வீரனாகும் ஆர்வத்தைத் தந்தை வளர்த்திருந்தார். அது நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது.

மகாராஜா ரன்ஜித் சிங் பார்ப்பதற்கு அழகாக இல்லை. குட்டையான உருவம். முகத்தில் அம்மைத் தழும்புகள் வேறு. அம்மை நோயினால் ஒரு கண்ணும் பொட்டையாகிவிட்டது. அவரது தந்தையைப் பார்க்க வந்தவர் யாரேனும் இவ்விஷயங்களைப்பற்றி அனுதாபப் பட்டு ஏதேனும் கூறினால், உடனே மகாசிங், "எனக்கு என் பிள்ளை அழகாக இல்லை என்பது பற்றிச் சிறிதும் வருத்தமில்லை. அழகு பெண்களிடம் காணவேண்டிய பொருள். பையன் வீரனாக வேண்டும். என் மகன் கட்டாயம் அவ்வாறு வீரனாவான்," என்று அடித்துப் பேசுவார்.

அவர் ரன்ஜித்தைக் குதிரை மீதமர்த்தி அழைத்துச் செல்வார்; துப்பாக்கியினால் குறிபார்த்துச் சுடுவதைத் தாமே அவருக்குக் கற்றுக் கொடுத்தார். இளமையில் நன்கு நடந்த இவ்விளையாட்டை ரன்ஜித் சிங் தம் வாழ்நாள் முழுவதும் விளையாடி வந்தார். கல்வி கற்க அவருக்கு

ஓய்வே கிடைக்கவில்லை. அக்காலத்தில் போர் வீரர்களுக்குக் கல்வி அவசியம் என்று கருதப்படவுமில்லை.

தந்தையார் இறந்தபின், லக்பத்ராய் என்பவர் திவான் ஆனார்; ரன்ஜித்தை அவரது தாய் கண்காணித்து வந்தாள். இளமையிலேயே அவருக்குத் திருமணமும் செய்விக்கப்பெற்றது. ரன்ஜித் சிங் தாய், மாமியார், திவான் யாவருமே அவரைத் தங்களது கைப்பாவையாக்க விரும்பினர். ஆனால் ஐந்தாண்டுகள் கழிந்து பதினேழு வயதினரானதும், அவர் இவர்களின் பிடியிலிருந்து விடுபட்டுச் சுதந்திரமாகத் தாமே அரசு செலுத்துவதற்கு ஆரம்பித்து விட்டார்.

அப்போது ஷாஜமா என்பவன் ஆப்கானிஸ்தானத்தின் அரியணையில் அமர்ந்திருந்தான். அவன் பஞ்சாபின்மீது படையெடுத்து வந்து, லாகூரைக் கைப்பற்றிக் கொண்டான். அப்போது ஆப்கானியரை வெளிப்படையாக எதிர்த்து நிற்கச் சீக்கியரிடம் போதிய பலமில்லை. வெள்ளம் வந்து ஜீலம் நதியில் மூழ்கிவிட்ட ஷாஜமாவின் பன்னிரண்டு பீரங்கிகளை ரன்ஜித் சிங் அவனுக்கே திரும்பக் கொடுத்தார். ரன்ஜித் சிங் தன்னுடன் இன்றில்லையெனில் நாளை சண்டையிடவே செய்வார் என அவன் எண்ணினான். எனவே, அவரிடமே லாகூரை ஒப்படைத்து விட்டு அவன் திரும்பிச் சென்று விட்டான்.

ரன்ஜித் சிங் லாகூரைத் தமது தலைநகராக்கிக் கொண்டு விரைவிலேயே பஞ்சாபின் எல்லாச் சிறிய ராஜ்யங்களையும் ஒன்றுசேர்த்து ஒரு பலமான சீக்கிய ராஜ்யத்தை அமைத்துவிட்டார். அப்போது அவரிடம் ஆங்கிலேயர், மராட்டியர், ஆப்கானியர் யாவருமே பயப்

பட்டனர். ஆங்கிலேயர் சார்பில் மின்டோ பிரபு கி. பி. 1809-ல் அவருடன் அமிர்தசரஸில் ஒப்பந்தம் செய்து கொண்டார். அதன்படி மகாராஜா ரன்ஜித் சிங் தமது ராஜ்யத்தை சத்லஜ் நதிக்குக் கிழக்கே பரப்பக்கூடாது என்று ஒப்புக் கொள்ளப்பட்டது. மகாராஜா ரன்ஜித் சிங் தமது வாழ்நாள் முழுவதும் இந்த வாக்குறுதியைக் காப்பாற்றினர். கிழக்கு நோக்கி அவர் முன்னேறிச் செல்லவில்லையென்றாலும், மேற்கிலும் வடக்கிலும் பல பிரதேசங்களை வென்றார்.

கி. பி. 1809-ல் தனது அரியணையிலிருந்து விரட்டப்பட்ட ஆப்கானிஸ்தானத்துப் பாதுஷாவான ஷாஷுஜா அவரிடம் அடைக்கலம் புகுந்தனன். ரன்ஜித் சிங் அவனுக்கு உதவி புரிந்தார். பதிலுக்கு அவன் அவருக்கு கோஹினூர் வைரத்தை அளித்தான். கொஞ்சம் கொஞ்சமாக அவர் அடகம், காங்கடா, முல்தான், காஷ்மீர், பெஷாவர் வரையிலும் தமது ராஜ்யத்தை விஸ்தரித்துக் கொண்டார்.

சிறிதும் கல்வி கற்காத மகாராஜா ரன்ஜித் சிங் இத்தனை வெற்றிபெறக் காரணம் யாது? அவர் ஒரு போர் வீரராக மாத்திரம் இருந்துவிடாமல், பலவகை மனிதர்களையும் அவர்களது மதங்களையும் மதித்து நடந்து வந்தார். சீக்கியர்களையும், இந்துக்களையும், முகம்மதியர்களையும் சமமாக எண்ணினர். அவரது அரசவையில் பல தரப்பட்ட மனிதர்கள் இருந்தனர். மக்கள் அவரது அவைக்களம் சென்று தமது குறைகளைக் கூறுவதற்கு அனுமதிக்கப்பட்டனர்.

அவரது அவையினரில் மற்ற எல்லோரினும்

அதிகச் சிறப்பு ஜமாதார் குஷால் சிங்குக்குக் கிடைத்திருந்தது. குஷால் சிங் மீரட் ஜில்லாவைச் சேர்ந்த ஒரு அந்தணராவார். பிழைப்புத் தேடி அவர் லாகூர் சென்று ரன்ஜித்தின் படையில் சேர்ந்திருந்தார். ஒரு நாள் இரவு அவர் பாரா பார்க்கும்போது, மகாராஜா அரண்மனைக்கு வெளிப்புறம் தனிமையாகச் சுற்றிக் கொண்டிருந்தார். அவர் அரசரை அறிந்திருக்கவில்லை. எனவே அரசரையே கைது செய்துவிட்டார். மறுநாட் காலையில் விஷயம் தெரிந்ததும் அவர் நடுங்கிப் போனார். ஆனால், மகாராஜா அவரை மிகவும் மெச்சினார்; ஏனெனில் அவர் தம் கடமையைக் காத்து நின்றாரல்லவா? இத்துடன் அரசர் நின்றுவிடவில்லை; குஷாலைத் தனது முக்கிய மெய்க்காப்பாளராகவும், சபை உறுப்பினராகவும் ஆக்கிவிட்டார்.

ரன்ஜித் சிங்கின் தர்பாரில் இந்துக்களைப் போன்றே முஸ்லிம்களும் மதிப்புக்குரிய ஸ்தானங்களில் அமர்ந்திருந்தனர். இவர்களுள் முக்கியமானவர் அஜீஜ் உத்தீன் பக்கிரி என்பவர். மகாராஜாவுக்கு அவரிடம் பெருமதிப்பு இருந்தது; ஆகவேதான் ஒரு தடவை அவரை ஆங்கிலேயரிடம் தமது தூதராக ரன்ஜித் அனுப்பிவைத்தார்.

ரன்ஜித் சிங் மக்களின் நன்மையில் மிகுந்த கவனம் செலுத்தினார். ஒரு சமயம் அவர் ஒரு குடியானவனின் வயலினூடே குதிரையைச் செலுத்திக் கொண்டு சென்றார். அதனால் பயிர் சிறிது சேதமடைந்தது. அவரைப் புரிந்து கொள்ளாத குடியானவன் அருகில் வந்து கூறினான்; "ஏ குதிரைக்காரா, இது ரன்ஜித் சிங்கின் ராஜ்யமென்பது உனக்குத் தெரியாதுபோலும். குடியானவருக்குத் தீங்கு செய்பவர்கள் இங்குக் கடுமையாகத் தண்டிக்கப்படுவர்."

குடியானவன் பேச்சைக் கேட்டுவிட்டு மகாராஜா மேற்கொண்டு செல்லாமல் திரும்பிவிட்டார்.

அவர் தமது படைகளை ஐரோப்பிய முறையிலே வகுத்திருந்தார். இது விஷயத்தில் அவருக்குப் பிரெஞ்சுப் படைத் தலைவர் வெண்டுரா என்பவரும், ஆங்கிலேயப் படைத் தலைவர்களான எல்லர்டு, கோட் என்பவர்களும் உதவி புரிந்தனர். அவரது படையில் 50,000 குதிரை வீரர்களும், அதே தொகை கொண்ட காலாட்படைகளும், 300 பீரங்கிகளும் இருந்தன.

கிழக்கிலிருந்து ஆங்கிலேயரும், மேற்கிலிருந்து ஆப்கானியரும் பஞ்சாபைக் கைப்பற்ற முயன்ற காலத்தில் மகாராஜா ரன்ஜித் சிங் தனது வீரம், படைவலிமை, போர்த் தந்திரம் ஆகியவற்றினால் அவ்விருவரது முயற்சிகளையும் பயனற்றவை யாக்கிவிட்டார். வலிமை வாய்ந்த ராஜ்யமாகப் பஞ்சாபை அவர் மாற்றியமைத்தார். இது அவரடைந்த மாபெரும் வெற்றியாகும். இதன் காரணமாக அவரது பெயர் இந்திய மகாபுருஷர்களின் மத்தியில் வரலாற்றிலே இடம் பெற்றுள்ளது.

இறுதியில் அவர் பக்கவாத நோய்க்கு ஆளாகிவிட்டார். அவரது உடல் முழுவதும் செயலற்றுப் போயிற்று; பேசக்கூட முடியவில்லை. ஆனால் அந்த நிலையிலும் பல்லக்கில் அமர்ந்து அவர் தமது படையின் அணிவகுப்பைப் பார்வையிடுவார். ஏனென்றால், படைபலமே நாட்டின் பாதுகாப்பிற்கு இன்றியமையாதது என்று அவர் கருதி வந்தார். இதே பக்கவாத நோயின் புதிய தாக்குதலுக்கு மறுபடியும் இலக்காகி அவர் 1839 ஜூன் 27-ந் தேதி விண்ணுலகெய்தி விட்டார்.

அவருக்குப் பிற்காலத்தில் சீக்கியரால் பஞ்சாபின் ஐக்கியத்தைக் காப்பாற்ற முடியவில்லை. ஒருவரோடு ஒருவர் கொண்ட அவநம்பிக்கை, பகை ஆகியவை காரண மாகச் சீக்கிய ராஜ்யமே சீர்குலைந்துவிட்டது. மகாராஜா ரன்ஜித் சிங் நிலைநிறுத்திச் சென்ற ஐக்கியத்தைச் சீக்கி யர்கள் காத்திருப்பராகில், பாரத நாட்டை விட்டு ஆங் கிலேயர் கி. பி. 1857-லேயே சென்றிருப்பர்.

இன்று நமது பாரதம் சுதந்திர தேசமாகி உயர்வு பெற்றுக் கொண்டிருக்கும் போது, நாம் கட்டாயம் மகா ராஜா ரன்ஜித் சிங்கின் வாழ்க்கையிலிருந்து பாடம் கற்றுக் கொள்ள வேண்டும்.



## மிர்ஜா காலிப்

பிரசித்திபெற்ற உருது விமர்சகரான ரஷீத் அஹமத் சித்தீகி என்பவர் ஓரிடத்தில் எழுதியுள்ளார்: முகலாயப் பேரரசு நமக்கு மூன்று முக்கிய செல்வங்களை அளித்துள்ளது. அவையே தாஜ்மஹாலும், உருது

மொழியும், கவிஞர் காலிப்பும் ஆகும். காலிப் மிக்க புகழ் வாய்ந்த உருதுக் கவிஞராக விளங்கினர். அதுமட்டுமல்ல, •அவர் ஒரு பாரசீகக் கவிஞருங்கூட.

அவரது முழுப் பெயர் மிர்ஜா அஸதுல்லபேக்கான் காலிப் என்பதாகும். அவரது தாத்தா கௌகான் பேக் கான் என்பவர் தமது தந்தையிடம் கோபித்துக் கொண்டு ஷா ஆலத்தின் ஆட்சிக் காலத்தில் சாமர்கண்டிலிருந்து இந்தியாவிற்கு வந்தார். • கௌகான் பேக் கானிற்கு நான்கு புத்திரர்களும், மூன்று பெண்களும் உண்டு. மிர்ஜா காலிப், முன்ஷி நபீபக்ஷ் ஹகீர் என்பவருக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார் : " சோதரரே, நானும் உம்மைப் போன்றே அனுதாபத்துக்குரிய நிலையை அடைந்துவிட்டேன் ; அதாவது செவ்வாயன்று மாலை எனது அத்தை இறந்துவிட்டாள். அவளையே நான் இது வரை என் தாயெனக் கருதி வந்தேன். அவளும் என்னைப் பெற்ற பிள்ளை போன்று மதித்து வந்தாள். இதற்கு முன்பு என் உறவினர் ஒன்பது பேர் இறந்துள்ளனர் என்பது தங்களுக்குத் தெரியும். மூன்று அத்தைகள், மூன்று சித்தப்பாக்கள், தந்தையார், தாத்தா, பாட்டி ஆகி யோரையே குறிப்பிடுகிறேன். இந்த அத்தை இருந்த வரை அவர்கள் ஒன்பது பேரும் உயிருடன் இருப்பதாகவே எண்ணி வந்தேன். அவரும் இப்போது இறந்தவுடன், அந்த ஒன்பது பேரும் இப்போது இன்னொரு முறை இறந்துவிட்டார்கள் என்று உணர்கின்றேன்."

காலிப்பின் தந்தை பெயர் மிர்ஜா அப்துல்லா பேக் கான் என்பது. ஆக்ராவில் இருந்த குவாஜா மிர்ஜா குலாம் ஹுஸைன் கான் கமிதான் என்பவரது மகளை

அவர் திருமணம் செய்து கொண்டார். காலிப் ஆக்ரா வில் கி. பி. 1792-ல் பிறந்தார். அங்குதான் இவரது இளமைப் பருவமும் கழிந்தது. ஆக்ரா வாசம் பற்றி முன்ஷி சிவநாராயணன் என்பவருக்கு அவர் பின்னர் இவ்வாறு எழுதினர்: "இப்போது சேட் லக்ஷ்மீ சந்த் விலைக்கு வாங்கியுள்ளாரே அதுவே எங்களது பெரிய பங்களா. அதன் வாயிலிலே கல் திண்ணையின்மீது நான் உட்காரும் இடம் இருந்தது. இதனருகில் ஒரு கட்டில் போட்ட வீடு; அதன் பக்கத்தில் சலீம்ஷாவின் இருப்பிடத் திற்கு அருகில் இன்னுமோர் வீடு; பின்னர் கருப்பு மாளிகையை ஒட்டி அடுத்த வீடு; இதைத் தாண்டி அப்பாற் சென்ருல் இடையர் சந்து என்ற பெயர் கொண்ட ஒரு சந்து உண்டு. இன்னுமோர் சந்து உண்டு; அதன் பெயர் காஷ்மீரன் வாலா என்பது. இச்சந்தின் ஒரு முனையிலிருந்து தான் நான் காற்ருடி விட்டு விளையாடுவது வழக்கம். நாங்கள் ராஜா பலவான் சிங்குடன் காற்ருடிப் போட்டி நடத்துவதுண்டு."

இந்த ராஜா பலவான் சிங் என்பவர் காசி அரசர் ராஜா சேத் சிங்கின் புதல்வராவார். இவருக்கு உரிய ராஜ்யத்தை வாரன் ஹேஸ்டிங்க்ஸ் அக்கிரமமான முறையிலே பறித்து விட்டார்.

காலிப் சிறுவராயிருக்கும்போதே தந்தையார் இறந்து விட்டார். அவரது சிற்றப்பா மிர்ஜா நஸருல்லா பேக்கான் அவரை வளர்த்து வரலானர். மிர்ஜா காலிப்பின் எட்டாவது வயதிலேயே அவரது சிற்றப்பாவும் காலமாகிவிட்டார். லோஹாருவின் நவாப்பாக இருந்த அகமத் பக்ஷிகான் இவ்வாறு காலிப்பின் சிறிய தந்தையும் இறந்தமை கண்டு

மிகவும் வருந்தினர்; துணையற்று நின்ற குழந்தைகளின் மீது அவர் இரக்கம் கொண்டார். எனவே, அவர் லேக் பிரவுவிடம் சிபாரிசு செய்து அவர்களுக்குப் பென்ஷன் கிடைக்குமாறு ஏற்பாடு செய்தார். இந்தப் பென்ஷன் மிர்ஜா நஸருல்லா பேக் கானின் உறவினருக்கும் சேர்த்து வழங்கப்பட்டது. ஐயாயிரம் ரூபாய் வருடாந்திரப் பென்ஷனில் காலிப்பின் பங்கு 750 ரூபாய்தான்.

மிர்ஜா ஆக்ராவிலிருந்து மௌல்வி முகம்மது முவஜ்ஜம், பாரசீகத்தைச் சார்ந்த மதகுரு அப்துஸ்ஸத் இருவரிடமும் பாரசீக மொழியைக் கற்றார். ஆயினும், அவ்வாசிரியர்களைவிட, காலிப்பிற்குக் கிடைத்திருந்த சூழ்நிலைதான் அதிகப் பயன் கொடுத்தது. ஆக்ராவில், எந்த வட்டாரத்தில் மிர்ஜாவின் இளமை கழிந்ததோ, அப்பகுதி குலாப்கானா என்று அழைக்கப்பட்டது. அந்நாட்களில் அப்பகுதி பாரசீக மொழியின் கேந்திரமாக அமைந்திருந்தது எனலாம்.

தந்தையும் சிற்றப்பாவும் இறந்துவிட்ட பின்னர் காலிப் வாலிப முறுக்குடன் விளையாட்டுக்களில் ஈடுபட வாரம்பித்துவிட்டார். அவரைத் தட்டிக் கேட்க யாருமில்லை. தமது இந்த வாலிபக் கேளிக்கைகளைப் பற்றி அவர் பல கட்டுரைகளில் குறிப்பிட்டுள்ளார். காலிப்பின் பதிமூன்றாவது பிராயத்திலேயே நவாப் அகமது பக்ஷிகானது தம்பியான இலாஹீ பக்ஷிகான் மாரூப் என்பவரது பதினோரு வயதுப் பெண் உமராவ் பேகம் அவருக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்டாள். திருமணத்திற்கு இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் நிலையாகத் தில்லியிலேயே வசிக்கலாயினர். இத் திருமணத்தைப்பற்றிக் காலிப் ஓரிடத்

தில் எழுதியுள்ளார்: "ஹிஜ்ரி ஆண்டு 1225, ராஜப் மாதம் ஏழாம் தேதியன்று எனக்கு ஆயுள் கைதியாகும் உத்தரவு கிடைத்து விட்டது. ஒரு விலங்கை (மனைவியை) என் கால்களில் மாட்டிவிட்டனர். தில்லி நகரையே என்து சிறைச்சாலையாக்கி விட்டனர். அச்சிறையிலே நான் தள்ளப்பட்டேன்."

காலிப் ஆக்ராவில் வசித்து வந்தபோது செலவுக்குத் தட்டில்லாமல் இருந்தது. உண்மையில் அப்போது தேவையை விடவும் மிக அதிகமான பணம் கிடைத்து வந்தது என்றே கூறலாம். தில்லிக்கு வந்தவுடன் ரூ. 750 பென்ஷன் நிச்சயமற்றதாகிவிட்டது. சில சமயம் கிடைக்கும், சிலபோது நின்று விடும். அந்தத் தொகையை வைத்துக் கொண்டு வாழ்க்கை நடத்துவது காலிப்பிற்கு மிகவும் கடினமாகிவிட்டது. இந்தப் பென்ஷன் தொகை நியாயமாகத் தனக்குக் கிடைக்க வேண்டியதைவிட மிகக் குறைவு என்பதையும் காலிப் உணர்ந்திருந்தார். இவ் விஷயத்தில் நியாயம் கோருவதற்காக அவர் கல்கத்தாவிற்குப் புறப்பட்டார். கி. பி. 1828-ல் அவர் கல்கத்தா போய்ச் சேர்ந்தார். அக்காலத்தில் புகைவண்டி கிடையாது. பெரும்பாலும் குதிரை மீதே சென்றார். இடையிடையே குதிரை வண்டியிலும், ஓடங்களிலும்கூடப் பிரயாணம் செய்ய நேர்ந்தது. கல்கத்தாவில் அவர் நோக்கம் வெற்றி பெறவில்லை. அங்கிருந்த இலக்கிய கர்த்தாக்கள் சிலருடன் சண்டையை விலைக்கு வாங்கிக் கொண்டார். அச்சண்டைகளில் மிர்ஜா கதீலுடனும், அவரது சீடர்களுடனும் காலிப் போட்ட சண்டை மிகப் பிரசித்தமானது.

காலிப்பின் பென்ஷன் வழக்கு. கி. பி. 1828-ல்

தொடங்கி 1844 வரை நடந்தது. வழக்கிற்காக அவர் வட்டிக் கடைக்காரரிடமிருந்து அதிக வட்டிக்குக் கடன் வாங்கிய ஆயிரக்கணக்கான ரூபாய்தான் செலவாயிற்று. துர்திர்ஷ்டவசமாகத் தீர்ப்பு அவருக்கு எதிராகவே ஆகி விட்டது. எஞ்சிய வாழ்நாள் முழுவதும் வாங்கிய கடனை அடைப்பதிலேயே கழிந்தது.

மிர்ஜா காலிப் பெரிதும் தன்மானம் கொண்டவர். ஒரே ஓர் உதாரணத்தின் வாயிலாக இதனை நாம் உணர முடியும். கி. பி. 1842-ல் மிர்ஜாவுக்கு டில்லிக் கல்லூரியில் தலைமை மொழியாசிரியர் பதவி வலுவிலே வந்து சேர்ந்தது. ஆனால், அவர் தன்மானம் காரணமாக அதனை மறுத் தளித்து விட்டார். மாகாணத்தின் லெப்டினண்டு கவர்னர் தாம்ஸன் கல்லூரியைப் பார்வையிட வந்தபோது காலிப்பை அழைத்துவரச் செய்தார். மறுநாள் காலிப் பல்லக்கிலமர்ந்து பங்களாவிற்குப் போய்ச் சேர்ந்தார். வாசலில் பல்லக்கை நிறுத்திக்கொண்டு தம்மை எதிர்கொண்டழைக்க யாரேனும் பெரிய மனிதர் வருகிறாரா என எதிர்ப்பார்த்தார்; யாரோ ஒரு மனிதன் வந்து, 'வாருங்கள்' என்றதும் காலிப் கூறினார்: "பெரிய மனிதர் எவரேனும் வந்து அழைத்துச் சென்றால்தான் இறங்கி வருவேன்."

இதைக் கேட்டு தாம்ஸனே வெளியே வந்து, "தாங்கள் வழக்கமான பேட்டிக்கு இப்போது வரவில்லை; வேலை நிமித்தமே வந்துள்ளீர்கள். எனவே, வரவேற்பதற்கு எவர் வருவர்?" என்று கேட்டார்.

மிர்ஜா பதிலிறுத்தார்: நான் வேலை பார்க்க விரும்புவது அதன் மூலம் என் மதிப்பு இன்னும் உயர வேண்டும் என்பதற்காகவே; முன்பிருந்த மதிப்பும் குறைந்து விடவேண்டும் என்பதற்காக அல்ல."

இவ்வாறு கூறிவிட்டு மிர்ஜா தம்து பல்லக்குத் தூக்கிகளிடம் திரும்பிச் செல்லுமாறு பணித்துவிட்டார்.

1850 ஜுலை 4-ந் தேதி பாதுஷா ஜாபரது அரசவையில் காலிப் ஆஜரானுர். பாதுஷா அவருக்கு 'நஜீம் உத்தௌலா தபீர் உல் முல்க் நிஜாம் ஜங்க்' என்ற பட்டத்தை வழங்கினுர்; ரூ. 50 மாதச் சம்பளமும் ஏற்படுத்தினுர். காலிப்பின் சேவையை நோக்கும் போது இந்தத் தொகை எம்மட்டு? அப்பணமும் ஆருவது மாதத்தில்தான் மொத்தமாகக் கிடைத்தது. முதல் ஆறு மாதங்களைப் பல்லைக் கடித்துக் கொண்டு தள்ளிவிட்டார். ஆனுல், 1851 ஜனவரியில் அரசரிடம் வேண்டுகோள் கவிதை ஒன்றைக் கொடுத்தார். அதன் கருத்து வருமாறு: "தங்களது ஊழியன் ஆடையின்றித் திரிவதா? தங்கள் பணியாளனுனை யான் கடன் வாங்கிப் புசிப்பதா? எனது சம்பளத்தை மாதாமாதம் கிடைக்குமாறு செய்யுங்கள். இல்லையெனில் வாழ்க்கை நடத்துவது எனக்கு மிகவும் கஷ்டமாகிவிடும். நீவீர் ஆயிரமாண்டுகள் வாழ்வீராக. நுமது ஒவ்வொரு ஆண்டும் ஐம்பதிஞயிரம் நாட்களைக் கொண்டதாகுக."

1857-ம் வருஷப் புரட்சியின்போது இந்த வேலையும் போய்விட்டது. ராம்பூர் நவாப் யூசுப் அலிகான் மிர்ஜாவின் முக்கியச் சீடர்களுள் ஒருவர். அவர் 1859-ல் மிர்ஜாவுக்கு ரூ. 100 மாதச் சம்பளம் ஏற்பாடு செய்தார். அப்படியும் அவரது பொருளாதாரக் கவலைகள் தீரவில்லை. அவர் எப்போதுமே தமது பற்ருக்குறை பற்றி அழுது கொண்டிருந்தார். அவர் அளவுக்கு மீறி மதுபானம் செய்பவர்; எனவே கடனும் தலைக்குமேல் ஏறிவந்தது. முதுமையில் அவரது உடல் நிலையும் கெட்டு வந்தது. வருவாய் குறைவு;

செலவோ மிக அதிகம். இக்கவலைகள் பற்றி அவர் 1866 டிசம்பர் மாதம் எழுதிய ஒரு கடிதத்தில் குறிப்பிடு கிறார்: "இம்மாதம், அதாவது ரஜப் மாதம் எட்டாம் தேதியிலிருந்து, எழுபத்திரண்டாம் வயது ஆரம்பித் துள்ளது. காலையுணவு ஏழு பாதாம் பருப்புகளை அரைத்துக் கற்கண்டுப் பாகில் கலந்து சாப்பிடுவதாகும். நடுப்பகலில் ஒரு சேர் மாமிசத்தை வற்றவைத்த சூப் அருந்துவது. கிட்டத்தட்ட மாலை வேளையில் நன்கு வதக்கிய சுமார் மூன்று மாமிசத் துண்டுகள், மாலை ஆறு மணிக்குப் பிறகு, ஐந்து ரூபாய் பெறுமான மதுவும், அதுபோன்ற வேறு பானமும். இந்த நிலையில் அசக்தி வேறு உடலை அழுத்து கிறது. கீழிருந்து எழுந்திருக்க கைகளையும் ஊன்றி நாலு காலன் ஆகவேண்டியுள்ளது. அங்கங்கள் நடுங்குகின்றன. நீரிழிவு உபத்திரவம் வேறு; பகற் பொழுதில் பத்துப் பன்னிரண்டு தடவைகள், இதுபோன்றே இரவு முழுவதும் சிறுநீர் கழிக்க எழுந்திருக்க வேண்டியுள்ளது. அதற்கும் எழுந்து செல்ல முடியாது கட்டிலுக்கு அருகிலேயே உள்ள சட்டியில் அதனைச் செய்யும் அவல நிலை; பின்கட்டி லேயே கிடக்க வேண்டியது. ரூ. 160 வருமானம், ரூ. 300 செலவு. மாதந்தோறும் ரூ. 140 பற்றுக்குறை. கூறுங்கள், என் வாழ்க்கை மிக்க கஷ்டமானதா இல்லையா?"

1869 பிப்ரவரி 15உ பிற்பகலில் இக்கலைஞரது ஆவி பிரிந்துவிட்டது. அவர் ஒருபுறம் இந் நாட்டில் பாரசீக இலக்கியத்தை மிகவும் உயர்வடையச் செய்தார். மற்றோர் புறம் உருது மொழியின் பழைய செய்யுள்—உரைநடை களின் போக்கைப் பழமை விலங்கிலிருந்து விடுவித்துப் புத்துருவமளிக்க அடிகோலினார். காலிப்பின் நடையைப் பின்பற்றிக் கவிதை இயற்ற எத்தனையோ புலவர்கள்

முயன்றுள்ளனர். ஆயினும், அவர்கள் பூரண வெற்றி பெற்றனர் என்று கூற இயலாது.

மீர்ஜாவுக்கு ஆணும் பெண்ணுமாக மொத்தம் ஏழு குழந்தைகள் பிறந்தன; ஆயினும் ஒன்றுகூட அதிக பட்சம் ஒன்றேகாலாண்டுக்குமேல் உயிர் வாழவில்லை. தனது மைத்துனியின் பிள்ளையான மிர்ஜா ஆரிப் என்பவனைத் தமது மகனாக அவர் சுவீகாரம் செய்துகொண்டார். பாவம், அப்பையனும் 1852-ல் காலிப்பின் கண்ணெதிரிலேயே மாண்டுவிட்டான்.

மிர்ஜா ஒரு பெரும் பணக்காரரது பிள்ளையாகவே பிறந்தார். பெரும் தனவந்தர்களை உறவினராகவும், நண்பராகவும் கொண்டிருந்தார்; பாதுஷாக்களுக்கும் நவாப்புகளுக்கும் ஆசிரியராக விளங்கினர். எனவே, ஆடம்பரமான போக்கு அவருக்கு இயல்பாகிவிட்டது. அவர் தமது வீட்டில் தில்லியின் பெரும்புள்ளிகள் போன்றே பைஜாமாவும், உயர்ந்தரக மேற்சட்டையும், அங்கியும் அணிந்து வந்தார். மெல்லிய மல் துணியினாலான, நல்ல ஜரிகை வேலைப்பாடமைந்த சிறிய தலைப்பாகை அவரது தலையை அலங்கரிக்கும். பனிக் காலத்தில் குளிரிலிருந்து காத்துக் கொள்ளக் கம்பளிப் பைஜாமாவும், மேலங்கியும் போட்டுக் கொள்வார். வெளியே கிளம்பும்போது, உயர்ந்தரக பைஜாமாவும், சட்டையும், கோட்டும் அணிவார். மேலே கனமான உயர்ந்த ரகத் துணியாலான ஷெர்வாணியும் அணிந்து கொள்வதுண்டு. கால்களில் தூக்கிய முனை கொண்ட ஜோடுகளும், கையிலே பூண் வைத்த நீண்ட பிரம்பும் இருக்கும்.

அவரது தோற்றம் பொலிவு மிகுந்தது. அகன்ற

மார்பும், உயர்ந்த உருவமும்; உறுதியான ஒற்றைநாடித் தேகம், வாட்சியான கைகால்கள்; யூதர் போன்ற முகவெட்டு, நிமிர்ந்த தோற்றம், பரந்த நெற்றி, உயர்ந்த மூக்குத் தண்டு, தூக்கிய தாடை எலும்புகள், அடர்ந்து நீண்ட புருவங்கள், பெரிய பொன்னிறக் கண்கள், பெரிய காதுகள், நல்ல சிவந்த நிறம், வாலிபத்தில் அவர் தாடியை எடுத்துவிடுவது வழக்கம். ஆனல் நரை விழத் துவங்கியதும் மீசை தாடியை எடுப்பதை விட்டுவிட்டார்.

இவர் தமது நண்பர்களுக்கும், சீடர்களுக்கும், உறவினர்களுக்கும் உருதுவில் எழுதிய கடிதங்களின் தொகுப்பு நூல்கள், 'உருது-ஏ-முவல்லா', 'ஊதே ஹிந்தி', 'மகாதி பே காலிப்' என்ற தலைப்புகளுடன் வெளியிடப் பட்டுள்ளன. அவரது உருதுக் கவிதைகளின் தொகுப்பு 'தீவான்-ஏ-காலிப்' மிகவும் பிரசித்தி பெற்றிருக்கிறது. நகைச்சுவை காலிப்பிற்கு மிகவும் கைவந்த விஷயமாகும். அவரது எந்தக் கவிதையிலும் ஒரு நையாண்டியோ கேலியோ இல்லாமலிருக்காது. அவரது சீடர்களில் பல மதத்தினரும் இருந்தனர். மௌலானா ஹாலி ஸைபுல் ஹக் அதீப், இஸ்மாயில் மோடி, பகாதுர்ஷா ஜாபர் ஆகியோருடன், ஹரகோபால் தத்தா, பாலமுகுந்த பேசபர், சிவநாராயணன் ஆராம், ஜவாஹர் சிங் ஜௌஹர், ஹீரா சிங் தர்த் ஆகியோரின் பெயர்களும் இலக்கிய வுலகில் மிக்க மதிப்புப் பெற்றவை. பரம்பரையாக வந்த பழைய பாதையை விடுத்து, ஒரு புத்தம் புதிய பாதையில் சென்றதே அவரது கவிதைகளின் தனிச்சிறப்பு.

அவர் இயற்றியுள்ள கஜல்கள் இன்னும் பலருக்குக் கண்ட பாடமாக உள்ளன. அக்கவிதைகளில், மனே

விஞ்ஞானம், மனிதரின் பல்வேறு மனப்பான்மைகளின் விசித்திரம், கடவுளைக் காதலிப்போரின் பேரன்புச்சுவை, நகைச்சுவை என்பனபோன்ற விலைமதிப்பற்ற கருவூலங்கள் நமக்குக் கிடைக்கின்றன.

மிர்ஜா காலிபின் கவிதையிலிருந்து சில கண்ணிகள் பின்வருமாறு:

கல்லோ கட்டியோ அல்ல இது, கனியும் மனித இதயம் இது;
ஆரேனும் எனை வருத்தினால் ஆயிரம் முறை அழுவேன்.

*　　　　*　　　　*

ஆலயமா, காபாவா, அயலார் வீடா இது?
நானிருப்பது நடைபாதை, நகரச் சொல்வது எங்ஙனம்?

(காபா: முஸ்லிம்களின் புனித ஸ்தலம்)

*　　　　*　　　　*

உச்சிக் கதிரவன் போல் அழகு ஒளிவீசும் போது,
முகத்தை நான் ஏன் மூடிக் கொள்ள வேண்டும்?

*　　　　*　　　　*

அவளுடைய அழகெனும் ஈட்டி ஆளைக் கொல்கிறது,
கண்வீச்சையோ தாங்கமுடியவில்லை;
எழில் முகத்தின் கோலங்களே அவை, என்றாலும்
நாம் ஏன் அவற்றில் சிக்க வேண்டும்?

*　　　　*　　　　*

உண்மையில் வாழ்வும் துயரமும் ஒன்றே,
இறக்கும் வரை துயரைத் தவிர்க்க இயலாது.

*　　　　*　　　　*

அழகுச் செருக்கு அவளுக்கு உண்டு.
அடியேனுக்கும் உண்டு தன்மானம்; அதனுல்,
'வீதியில் நாங்கள் சந்திக்க இயலாது,
அவள் வீட்டுக்கும் என்னை அழைக்கமுடியாது.

*     *     *

அல்லாவிடம் அவளுக்கு நம்பிக்கையில்லை,
அவளையும் யாரும் நம்ப முடியாது;
இதயம், உயிரைப் பேணுவோன் எவனும்
ஏன் அவள் வீதிவழி செல்ல வேண்டும்.

*     *     *

காலிப் இறந்தவுடன் உலகின் காரியம் எதுவும் நிற்கவில்லை,
எனின், கதறி அழுவது எதற்காக?''



## சுவாதித் திருநாள்

கேரள நாடு சங்கீத பரம்பரைக்குப் பிரசித்தி பெற்றது. மனிதர்களின் சமுதாய வாழ்விலும், மத வாழ்க்கையிலும் இசை ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றிருப்பதே அதற்குக் காரணம். எனவேதான் அந் நாட்டில் நாட்டியமும், இசைக் கலையும் நன்கு வளரும் வாய்ப்புக் கிடைத்துள்ளது. அங்கு பல்வேறு துறை களிலும் கலை வளர்ச்சி பெற்றமைக்கு இன்னுமொரு காரணமும் உண்டு; அதாவது அங்கே அரசாண்ட வேந்தர் கள் பலர் தாமே இசைக் கலையில் வல்லுனர்களாக விளங்கி

னர். திருவனந்தபுர மகாராஜா சுவாதித் திருநாள் ராம வர்மாவும் அவர்களுள் ஒருவராவார்.

சுவாதித் திருநாள் 1813 ஏப்ரல் 13-ந் தேதி தோன்றினர். பதின்மூன்று வயதிற்குள்ளாகவே, அவர் மலேயாளம், வடமொழி, பாரசீகம், தெலுங்கு, ஆங்கிலம், மராட்டி, கன்னடம், இந்துஸ்தானி ஆகிய மொழிகளிலே விசேடமான தேர்ச்சி பெற்றுவிட்டார். பதினேராவது வயதில் அவர் அரியணையில். அமர்ந்தார். சுமார் பதினெட்டு ஆண்டுகள் வரை அரசாண்டார்.

இக்குறுகிய காலத்திற்குள்ளாகவே, மக்களும் நாடும் எல்லாத் துறைகளிலும் முன்னேறுவதற்கான முயற்சிகளை அவர் மேற்கொண்டார். அவரது ஆட்சிக்காலத்தில் நாட்டில் செழிப்பும் அமைதியும் நிலவின. சுவாதித் திருநாள் திறமை மிகுந்த, இரக்க மனம் படைத்த அரசர் என்ற முறையில் மட்டும் பிரசித்தி பெற்றவரல்லர்; அவர் ஓர் உயர்ந்த புலவராகவும் கலைஞராகவும், இசைஞராகவும்கூட மதிக்கப்படுகின்றூர். வேதங்களிலும் புராணங்களிலும் பண்டிதராகவும், மிகச் சிறந்த கவிஞராகவும், கலை நுணுக்கங்களை அறிந்தவராகவும் அவர் விளங்கினர்.

ஹர்ஷ சக்கரவர்த்தியையும் போஜ மகாராஜாவையும் போன்றே சுவாதித் திருநாளும், ஒரு கவியின் மதிப்பு அரசரைவிட அதிகமானது என்பதை நிரூபித்தார். அவர் கர்னடக சங்கீதம், இந்துஸ்தானி இசை இரண்டினையும் நன்கு கற்றறிந்திருந்தார். வெவ்வேறு ராகங்களிலும் சரி, கீர்த்தனமோ, வர்ணமோ ஆயினும் சரி, பதம் அல்லது தில்லானு, துருபத் அல்லது கய்யால் ஆகியவற்றிலும் சரி, அவரது நடை ஒரே தன்மை வாய்ந்தாக விளங்கிற்று. ஒரு

நூற்றாண்டுக்கு முன்பேயே இக்கலை மன்னர் இந்துஸ்தானி மொழி, இந்துஸ்தானி இசை இரண்டையும் நன்கு அறிந்திருந்தார். தமது காலத்திய இசைப்புலவர்களுக்கு அவர் வேண்டிய உதவிகள் புரிந்து ஊக்கமளித்தார்; மேலும் தமது சாகித்தியங்களாலும் இசைக்கலையை அலங்கரித்தார்.

சுவாதித் திருநாள் சுமார் 350 கீதங்களைப் பாடியுள்ளார். அவை இன்றும் இசைக்கப்படுகின்றன. கீர்த்தனைகள் மட்டுமல்ல, பதம், வர்ணம், தில்லானா ஆகியவற்றையும் அவர் இயற்றினர். அவரது கர்னாடக இசையில் மகான் தியாகராஜரது கிருதிகளின் பாணியும் கலந்து விளங்குகின்றது. தமது காலத்தில் திருவாங்கூரில் பரவியிருந்த சோபானப் பாட்டு வகையை அவர் அடியோடு மாற்றியமைத்தார். அவர் ஏற்படுத்திய புதிய முறை அங்குள்ள கோயில்களில் இன்றும் கையாளப்படுகிறது. திருவாங்கூரில் அவருக்கு முன்பு, இந்துஸ்தானி இசைபற்றி யாருக்கும் தெரியாது. அதனை மக்கள் விரும்பும்படி செய்த பெருமை சுவாதித் திருநாளையே சாரும். அவர் இருவகை இசைப் பிரிவுகளிலும் பெருந்திறமை கொண்டவராதலால் திருவாங்கூரில் கர்னாடக இசையையும் வெகு சிறப்பாக வளர்ச்சி பெறச் செய்தார். தமது கருத்தைக் கீர்த்தனைகளில் சொல் செட்டுடன் வெளிப்படுத்தினர்; அவற்றின் தாள லயங்களும் மிக அழகானவை.

அவரது கர்னாடக இசைப் பாடல்களை ஐந்து பகுதிகளாகப் பிரிக்கலாம்—கீர்த்தனம், பிரபந்தம், வர்ணம், பதம், தில்லானா. கீர்த்தனங்கள் பெரும்பாலும் அவரது குலதெய்வமான பத்மனாப சுவாமிமீது பாடப்பெற்ற துதிகளாகவே அமைந்தன. இவற்றில் நவராத்திரி கீர்த்தனமும், நவரத்னமாலையும் மிகச் சிறந்தவை. ஒன்பது

பாடல்கள் அடங்கிய நவராத்திரி கீர்த்தனம், ஒவ்வோராண்டும் நவராத்திரி விழாவின் போது பாடப்படுகின்றது. நவரத்னமாலே என்பதும் ஒன்பது சிறந்த கீதங்களின் மாலேயாகும். பாகவத புராணத்தில் கூறப்பட்டுள்ள ஒன்பதுவகை பக்திச் சுவையும் அதில் அடங்கியுள்ளது. இந்தக் கீர்த்தனேகளில் ராக ஸ்வரங்களின் அக்ஷரங்கள் வெகு அழகிய முறையில் கையாளப்பட்டிருப்பது இவற்றின் தனிச் சிறப்பாகும். சுவாதித் திருநாள் பற்பல பிரபந்தங்களேயும் வர்ணங்களேயும் தில்லாணுக்களேயும் இயற்றியுள்ளார். இவை வடமொழி, தெலுங்கு, மலேயாளம் என்ற மூன்று மொழிகளிலும் உள்ளன.

இப்போது நாம் அவரது இந்துஸ்தானி கீதங்களேச் சிறிது நோக்குவோம். இவற்றில் 37 பாடல்கள் கிடைத்துள்ளன. அவை அச்சேறியுமுள்ளன. துருபத், கய்யால், டப்பா என்ற பிரிவுகளேச் சேர்ந்த கீதங்களும் இவற்றுள் அடங்கியுள்ளன. 'நந்த நந்த வ்ரஜபூர்ண' என்ற 'தணுஜீ' ராகப் பாட்டும், 'சலியே குஜ்ஜன்மே தும்' எனும் ஸாரங்க ராகப் பாட்டும் அவர் இயற்றியுள்ள இரு அழகிய துருபத் பாடல்கள். இன்னொரு ராகமாலிகை துருபத்தும் இருக்கிறது ; அதில் பல ராகங்களின் பெயர்களும் வருகின்றன. இதிலிருந்து அப்பேரரசருக்குக் கர்ணுடகம், இந்துஸ்தானி இரு இசைத் துறைகளிலும் சமமான பெருந் திறமை இருந்ததை நாம் உணர்கிரேம்.

அவர் எழுதிய, மிக்க இனிமை வாய்ந்த சுமார் பன்னிரண்டு 'கய்யால்'களும் பிரசித்தி பெற்றவை. அவர் இயற்றிய பஜனேக் கீதங்களாகிய 'பாஜத் பதாயீ நகரீ ரகுராயீ', 'ராமசந்த்ர பிரபு' முதலியவற்றில், மீராவின் பஜனேகளில் உள்ள புனிதமும் இனிமையும் மிளிர்கின்றன.

சுவாதித் திருநாள் பற்பல ராகங்களிலே தமது இசையைப் படைத்துள்ளார். அவற்றுள் சில மராட்டி, இந்துஸ்தானி ராகங்களும் உள்ளன. பற்பல இந்திய மொழிகளிலே பயிற்சி இருந்ததன் காரணமாக அவர் குறைந்த பட்சம் ஏழு மொழிகளிலே தமது பாடல்களை இயற்றியுள்ளார். மூன்றிலிரண்டு பங்குக் கீர்த்தனைகள் வடமொழியில் உள்ளன. கவிதைகளின் எதுகை-மோனை கள் பற்றிப் புலமை நிறைந்த புத்தகம் ஒன்றையும் சுவாதித் திருநாள் எழுதியுள்ளார். இந்நூல் இன்னும் மலையாள மொழியில் வெளியிடப் படவில்லையாயினும், இதன் சம்ஸ் கிருத மொழி பெயர்ப்பு சில ஆண்டுகளுக்கு முன்பு வெளி வந்தது.

மகாராஜா தகுதிபெற்ற கலைஞர்களுக்கு ஆதர வளித்து, கலைக்கும், இலக்கியத்திற்கும் அருந்தொண்டு ஆற்றினர். தில்லி, குவாலியர், மைசூர் ஆகிய இடங்களைச் சார்ந்த இந்துஸ்தானி இசைப் புலவர்கள் பலர் அவரது அரசவையில் நிலையான இடம் பெற்று நன்கு போஷிக்கப் பட்டனர். மேருஸ்வாமி, வடிவேலு போன்ற சங்கீத வித்துவான்கள் அவரது அவையை அலங்கரித்தனர். கோவிந்தமாரார் போன்ற தனிச் சிறப்பு வாய்ந்த இசை ஞரும் இறையிம்மன் தம்பி போன்ற இசைக்காரரும் அங்கு இருந்தனர். ஒரு இசைக் குழுவையே அரசர் அமைத் திருந்தார்.

அப்பேரரசர் தமது முப்பத்து நான்காம் வயதிலேயே அகால மரணம் அடைந்துவிட்டார். மக்களுக்கு மிகவும் பிரியமான அரசராக அவர் விளங்கினர். அவரை ஜனங்கள் முழு மனதுடன் நேசித்தனர். அரசவையில் பெரு

மதிப்பை நிலைநாட்டுவதில் நன்கு கவனம் செலுத்திய அரசர் அவர்.

• ·· சுருங்கக் கூறின் மகாராஜா சுவாதித் திருநாள் பல கலைகளில் மேதையாகத் திகழ்ந்தார். பன்மொழிப் புலவராகவும், அறிஞராகவும், சாஹித்தியகாரராகவும் இருந்த தோடல்லாமல், சீரிய மதப்பற்றும் கௌரவமும் வாய்ந்த வேந்தராகவும் அவர் விளங்கினர். எனவே, திருவாங்கூரை ஆண்ட மகாராஜாக்கள் அனைவரிலும் அதிகமாக மக்களின் நன்மதிப்பைப் பெற்ற அரசர் சுவாதித் திருநாள்தாம் என்று கூறலாம்.



**தாத்யா டோபே**

தாத்யா டோபே பாரத நாட்டின் வீர சேனாபதியாக விளங்கினார். 1857-ஆம் வருஷப் புரட்சியின்போது அவர் மிகுந்த வீரத்துடனும் திறமையுடனும் ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடினார். அந்நாட்களில், இங்கிலாந்தில் அவரது பெயர் பெரிய பெரிய ஆங்கிலத் தளபதிகளைவிடவும் அதிகப் பிரசித்தி பெற்றிருந்தது.

தாத்யா டோபே 1814-ல் பிறந்தார். அவரது இயற் பெயர் ராமசந்திர பாண்டுரங்கன் என்பது. அவரது தந்தை யாரின் பெயர் பாண்டுரங்க பட்டர். அவர் பாஜீராவ் பேஷ் வாவின் கொடை இலாகாத் தலைவராக இருந்தார். ஆங்கி லேயருடன் செய்து கொண்ட ஒப்பந்தப்படி பாஜீராவ் பேஷ்வா லக்னோவில் வசித்து வந்தபோது அவருடன் பாண்டுரங்க பட்டரும் வந்தார். அங்கு பாஜீராவின் சுவீ காரப் புத்திரரான நாஜு சாகிப்பும், தாத்யா டோபேயும் இளமையில் சேர்ந்து விளையாடி வந்தனர்.

1857–ல் புரட்சி நிகழ்ந்தபோது தாத்யா டோபே நாஜு சாகிப்பின் கீழ் ஒரு சாதாரண குமாஸ்தாவாகவே இருந்தார். கான்பூரில் ஆங்கிலேயர் தோல்வியடைந்து நாஜு சாகிப் பேஷ்வாவின் அரியணையில் அமர்ந்த போதும் தாத்யா அதே பதவியில்தான் நீடித்து வந்தார். ஆனால் சிறிது காலத்திற்குப் பின் நாஜு தோல்வி யடைந்து, கான்பூர் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தில் அடங்கிய போது தாத்யா டோபே தமது பேனாவை வைத்துவிட்டு, வாளேந் தத் துவங்கிவிட்டார்.

பிட்டூரை விடுத்து பதேஹ்பூர் சென்று விடுமாறு அவர் நாஜு சாகிப்பிற்கு யோசனை கூறிவிட்டு, தாம் ஆங்கிலேய ருடன் போராடிக் கொண்டிருந்தார். தோற்றுப் போன நாஜுவின் படையை அவர் புதிய முறையில் இணைத்துச் சீர்படுத்தினார். முதலில் அவர் பிட்டூரைக் கைப்பற்றி விட்டார். இச்செய்தியை அறிந்த ஆங்கில தளகர்த்தர் ஹேவ்லாக், லக்னோவில் போரை நிறுத்திவிட்டு கான்பூர் நோக்கி வந்தார். தாத்யாவின் படைக்கும், ஆங்கிலப் படைக்கும் இடையே வெகு மும்முரமான சண்டை நடந்தது. இந்த யுத்தத்தில் தாத்யாவுக்குத் தோல்வியே

கிட்டியது. ஆங்கிலப்படை பின்னுக்குத் தள்ளிக் கொண்டே சென்றது; அவருக்குப் பின்புறம் வெகு அருகில் கங்கை பெரு வெள்ளத்துடன் பாய்ந்து கொண்டிருந்தது. தாத்யா தமது சில குறிப்பிட்ட வீரரை மட்டும் ஆங்கிலேயருடன் சண்டையில் ஈடுபடுத்திவிட்டு, எஞ்சிய படை வீரரைக் கங்கையில் குதிக்கச் செய்தார், தாமும் அவ்வாறே குதித்து விட்டார். இவ்விதம் ஆகஸ்ட் 16-ந் தேதி தமது படையுடன் கங்கை வெள்ளத்திலே நீந்திச் சென்று, அவர் பதேஹ்பூரை அடைந்துவிட்டார். அங்கே படையைப் புதிய முறையில் திரட்டி உருவாக்கி, நாணாவின் தலைமையில் ஒப்படைத்துவிட்டு, கால்பி என்னும் இடத்துக்கு அவர் சென்றார். அங்கொரு புதுப் படையைத் திரட்டி, கால்பிக் கோட்டையைத் தாக்கிப் பிடித்துக் கொண்டார். கால்பியில் ஆங்கிலேயர் தரப்பில் சேர்ந்திருந்த இந்தியச் சிப்பாய்கள் யாவரும் தாத்யாவின் கட்சிக்கு வந்துவிட்டனர். பின்பு நாணா சாகிப்பின் படையும் அவருடன் வந்து சேர்ந்து கொண்டது. இரு படைகளும் இணைந்து கான்பூரின் மீது படையெடுத்தன; இரு தினங்கள் நடந்த கடும்போருக்குப் பின்னர் கான்பூர் மறுபடியும் நாணாவின் வசமாயிற்று. ஆனால், லக்னோவிலிருந்தும் அலகாபாத்திலிருந்தும் புதிய ஆங்கிலப் படைகள் கான்பூருக்கு வந்து சேர்ந்தன. தாத்யாவும் நாணாவும் உறுதியுடன் அப்படைகளை எதிர்த்து நின்றனர். ஆயினும் அவர்களது பலம் குறைந்து வந்தது; ஆங்கிலேயரின் படைபலம் அதிகரித்து வந்தது. எனவே, அப்போது நாணா சாகிப்பைப் போர்க்களத்தில் விட்டுவிட்டு, புதிய சேனை திரட்டி வருவதற்காகத் தாத்யா கால்பிக்குச் சென்றார். அது கண்டு ஆங்கில தளபதி கேம்ப்பெல்லும் கான்பூர் நோக்கிச் சென்றார். டிசம்பர் முதல் தேதியி

லிருந்து ஆரும் தேதி வரை கடும்போர் நிகழ்ந்த பின்னர் கான்பூர் ஆங்கிலேயருக்குட்பட்டு விட்டது. நானுசாகிப், ஷாஜஹான்பூருக்குத் தப்பிச் சென்று விட்டார். பின்னர் தாத்யா டோபேயை நானு சந்திக்கவே முடியவில்லை.

தாத்யா கால்பியை அடைந்து ஒரு பெரும் படையைத் திரட்டலானுர். நானு சாகிப்பைத் துரத்திச் செல்லும் ஆங்கிலப் படையைத் தாம் பின்னிருந்து தாக்க வேண்டு மென்பது தாத்யாவின் தீர்மானம். அதே சமயத்தில் ஜான்சியில் ராணி லக்ஷ்மிபாய் ஆங்கிலத் தளபதி ஸர். ஹியூ ரோஜை எதிர்த்துப் போரிட ஆயத்தம் செய்து கொண்டிருந்தாள். மார்ச் 24-ந் தேதி ஹியூ ரோஜ் ஜான்சியின் மீது படையெடுத்தார். எட்டு நாள் அவரை எதிர்த்து நின்ற பின்பு தாத்யாவின் உதவியை ராணி கோரினுள். எனவே, தாத்யா, லக்னே செல்வதாகயிருந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு, ராணிக்கு உதவி செய் வதற்காக ஜான்சி நோக்கிப் புறப்பட்டார். அவ்வமயம் அவர் வசம் 14,000-க்கும் அதிகமான சிப்பாய்கள் இருந் தனர். அவர் ஜான்சிக்கு அருகில் வந்து விட்டார்; தாம் உதவிக்கு வருவதை அறிவிப்பதற்காக வழியிலிருந்த உயர்ந்த குன்றுகளில் பெருந்தீயை மூட்டச் செய்தார். இதைக் கண்டவுடன் ராணிக்கும், ராணியின் படைவீரர் களுக்கும் மிகுந்த உற்சாகம் பிறந்தது. இரவில் அவர் ஹியூ ரோஜின் படையைப் பின்புறத்திலிருந்து தாக்க உத்தேசித்திருந்தார். ஆனுல் ஹியூ ரோஜிற்கு இச் செய்தி கிடைத்துவிட்டது. அவர் ஜான்சிக் கோட்டை மீது பீரங்கிப் பிரயோகத்தைத் தொடர்ந்து நடத்தியதோடு, பின்னேக்கியும் பீரங்கிகளைச் சுடுவதற்கு ஆயத்தப்படுத்தி வைத்து விட்டார். தாத்யாவின் படை முன்னேறியது.

அப்போது ஆங்கிலப் பீரங்கிகள் அனல் கக்கத் துவங்கின. அவற்றையும் பொருட்படுத்தாமல் தாத்யாவின் வீரர்கள் பேராபத்தை எதிர்த்து முன்னேறி வந்தனர். ஸர். ஹியூ ரோஜின் பீரங்கிகளையே கைப்பற்றிவிடத் தாத்யா தீர்மானித்திருந்தார். ஆனால் இம்முயற்சியில் தாத்யாவின் பெருவாரியான சிப்பாய்கள் கொல்லப்பட்டு விட்டனர்; ஆகவே அவர் திரும்பிச் செல்ல நேர்ந்தது. தாத்யாவின் உதவி வந்து சேரவில்லை யெனினும், வீராங்கனை லக்ஷ்மி பாய் போரிட்டுக் கொண்டுதானிருந்தாள். அவள் ஹியூ ரோஜை விரட்டியடித்திருப்பாள். ஆனால் ஜான்சியைச் சேர்ந்த இரண்டொரு நம்பிக்கைத் துரோகிகள் தெற்குக் கோட்டை வாயிலைத் திறந்து வைத்துவிட்டனர். ஆங்கிலப் படை கோட்டைக்குள் நுழைந்து விட்டது. தற்காப்புக்கான வேறு வழியின்மையால், ராணி கோட்டையிலிருந்து வெளி யேறி, கால்பிக்குச் சென்று தாத்யாவுடன் சேர்ந்து கொண்டாள்.

உடனே ஸர். ஹியூ ரோஜ் கால்பியை நோக்கி முன்னேறிச் சென்றார். கால்பியில் தாத்யா டோபே, குவாலியர் படையைத் தம்முடன் சேர்த்துக் கொள்வ தெனவும், குவாலியரைக் கைப்பற்றிக் கொண்டு அங் கிருந்தே யுத்தம் புரியலாமெனவும் திட்டம் போட்டிருந்தார்.

குவாலியர் அரசர் சிந்தியா ஆங்கிலேயருக்கு உதவி புரிந்து வந்தார். ஆனால், தாத்யாவைக் கண்டதும் சிந்தியாவின் படை சிந்தியாவுக்கு அடங்காமல் போய் விட்டது. எனவே, 1858 ஜூன் மாதத்தில் சிரமம் இல்லாமலே குவாலியர் கோட்டை தாத்யாவின் ஆதீன மாகிவிட்டது. சிந்தியா ஓடிப்போய்விட்டார். ஸர். ஹியூ ரோஜ் சிந்தியாவையும் சேர்த்துக் கொண்டு குவாலியர் மீது

படையெடுத்து வந்தார். பல நாட்கள்வரை சண்டை தொடர்ந்து நடந்து வந்தது. இதன் நடுவில் புரட்சிக்கனல் பலவிடங்களில் அணைந்து சாந்தமாகியிருந்தது. தில்லி, கான்பூர், லக்னோ, அலாகாபாத் ஆகிய இடங்கள் ஆங்கிலேயர் வசமாகி விட்டன. இவ்விடங்களிலிருந்தெல்லாம், ஆங்கிலப் படைகள் குவாலியரை நோக்கி முன்னேறி வந்தன. ஜூன் 18-ந் தேதி குவாலியரில் சண்டையிட்டுக் கொண்டே ராணி லக்ஷ்மிபாய் வீரசுவர்க்கம் புகுந்து விட்டாள். தாத்யாவிடம் அப்போதும் 14,000 படைவீரர்கள் இருந்தனர். உடனே அவர் நாக்பூர் சென்று, புதிய போர் முனையை ஏற்படுத்த நிச்சயித்தார். ஆங்கிலேயர் அவர் நருமதையாற்றைக் கடந்து விடக்கூடாது என விரும்பினர். ஆனால், போர்த் தந்திரத்தில் தேர்ச்சி பெற்ற வீரரான தாத்யா ஆங்கிலேயரது தந்திரங்களையெல்லாம் முறியடித்துக் கொண்டு நருமதையின் பெருவெள்ளத்தைக் கடந்து நாக்பூர் போய்ச் சேர்ந்துவிட்டார். புரட்சித் தீ அணைந்து போயிருந்தமையால் நம்பிக்கையுடன் சென்ற தாத்யாவுக்கு அங்கு போதிய உதவி கிடைக்காமல் போய் விட்டது. அவர் திரும்பவும் நருமதை நதியின் இக்கரைக்கே வந்துவிட்டார். ஆங்கிலேயருடன் கொரில்லாப் போர் புரியத் துவங்கிவிட்டார். நாற்புறமும் அவரைச் சூழ்ந்து ஆங்கிலப் படைகள் திரண்டு கொண்டிருந்தன. ஆனாலும் அவரைக் கைது செய்வதற்கு அவர்கள் கையாண்ட வழிகளெல்லாம் பயனற்றுப் போயின.

இதன் மத்தியில் புரட்சித் தீ முழுவதும் அணைந்து விட்டது; புரட்சிக்காரர்கள் தமது உயிரையே அர்ப்பணித்துச் சென்று விட்டனர். ஆனாலும், தாத்யா டோபே தொடர்ந்து போராடிக் கொண்டேயிருந்தார். மத்திய பிரதேசத்தி

லுள்ள அடர்ந்த காடுகளையும், ஆறுகளையும், வாய்க்கால் களையும், மலைத் தொடர்களையும், மேடுபள்ளங்களையும் அவர் நன்கு அறிந்து வைத்திருந்தார். எனவே தினமும் அவர் அறுபது மைல் தொலைவு வரை தமது கொரில்லாப் படையுடன் சஞ்சரித்து வந்தார். ஆங்கிலேயருக்கு அவரைச் சிறைபிடிப்பது மிகவும் கடினமாக இருந்தது, மேலும் அவர்கள் தாத்யா எங்கே, எப்போது, எவ்விதம் வந்து தாக்குவாரோ என்ற பயமும் கொண்டிருந்தனர். எனவே, அவர்கள் ஒரு வஞ்சனை முறையைக் கையாண்டனர். அவர்கள் தாத்யாவின் நெருங்கிய நண்பரான ஸர்தார் மான்சிங்கை தங்கள் கைக்குள் போட்டுக் கொண்டனர். தாத்யாவைக் கைது செய்வித்தால் அவருக்கு மன்னிப்பும், நாவர் ராஜ்யமும் அளிக்கப்படுமென்று பேராசை காட்டினர். மான்சிங் இந்தப் பேராசைக்கு உட்பட்டு விட்டார். அப்போது தாத்யா மான்சிங்குடனேயே பாராக் காடுகளில் ஒளிந்திருந்தார். 1859 ஏப்ரல் முதல் தேதியன்று நள்ளிரவில் தாத்யா ஆழ்ந்த நித்திரையில் இருந்தபோது, மான்சிங் ஆங்கிலேயச் சிப்பாய்களை அழைத்து வந்து அவரைக் கைது செய்வித்து விட்டார். மறுநாள் தாத்யா மேஜர் மீடியின் பாசறைக்கு அழைத்து வரப்பட்டார். அவரது கால்களில் பளுவான விலங்குகள் மாட்டப் பட்டன. மூன்று நாட்கள் அவரது விசாரணை நடந்தது. கேட்ட கேள்விகள் அனைத்திற்கும் தாத்யா ஹிந்தியிலே பதிலிறுத்தார். ஓர் ஆங்கிலேயன் கேட்டுக் கொண்டமைக் கிணங்க அவர் தமது நாள் குறிப்பை எழுதினர். ராணுவக் கோர்ட்டில் தாத்யா மீது வழக்குத் தாக்கலாயிற்று. தாத்யா தமது வாக்கு மூலத்திலே கூறினர் : "நான் செய்தவை யாவும் எனது எஜமானரது

கட்டளேப்படியே ஆகும். போர்க் களத்தைத் தவிர்த்து வேறு எந்த இடத்திலும் எந்த ஆங்கிலேயரையும் நான் கொன்றதில்லே. ஆங்கில நீதிமன்றத்தில் எனக்கு நியாயம் கிடைக்காது என்பதை நான் நன்கு அறிவேன். இதைவிட அதிகமாக இவ்வழக்கில் நானேதும் கூறவோ, பங்கெடுத்துக் கொள்ளவோ விரும்பவில்லே.''

ஆங்கிலேய ராணுவ நீதிமன்றம் அவருக்குத் தூக்குத் தண்டனே வழங்கிற்று. தாத்யா ஒரு புன்முறுவலுடன் அத்தீர்ப்பை ஏற்ருர். 1859 ஏப்ரல் 18-ந் தேதி யன்று தூக்குத் தண்டனே நிறைவேற்றப் பட்டது. அவர் சகஜமாக ஒருவிதச் சலனமுமின்றி, தூக்குமேடைமீது ஏறிஞர்; தமது கைகளிஞலேயே தூக்குக் கயிற்றின் சுருக்கினேத் தமது கழுத்தில் மாட்டிக் கொண்டார். அப்போது அவரது இறுதி விருப்பம் என்ன என்று கேட்கப்பட்டது. தாத்யா கூறிஞர்: "ஒரே ஒரு பொருளே மட்டும் நான் விரும்புகிறேன். எனது கிழட்டு தந்தையாருக்கோ, அல்லது எனது குடும்பத்தினருக்கோ எனது செயல்களில் பங்கேதும் கிடையாது. எனவே, என் காரணமாக அவர்களே யாரும் துன்புறுத்தக் கூடாது.''

இங்ஙனம், 1859 ஏப்ரல் 18-ந் தேதி தாத்யா டோபே தூக்கு மேடையிலே ஊஞ்சலாடித் தமது வாழ்க்கை விளேயாட்டினே முடித்துக் கொண்டார். அந்நியரது ஆட்சிக்கு எதிராகத் தேசபக்தியின் உன்னதக் காணிக்கையை அவர் இவ்வாறு செலுத்திஞர். தாத்யாவின் பிணம் மாலே வரை ஊசலாடிக் கொண்டேயிருந்தது. காவலர்கள் அதனருகினின்று நகர்ந்து சென்ற பின்னர்,

ஆங்கிலேயச் சிப்பாய்களே அவருக்கு வணக்கம் செலுத்தினர்; அவரது ரோமங்களைப் பிடுங்கி, அவற்றை உயர்ந்த நினைவுச் சின்னமாக எடுத்துச் சென்றனர்.

இத்தகைய பெரும் தியாகத்தின் வாயிலாக தாத்யா டோபே, இந்திய நாட்டு மக்களது உள்ளங்களிலே என்றுமே அணையாத சுதந்திரக் கனலை எழுப்பிச் சென்று விட்டார்.



## லக்ஷ்மிபாய்

ராணி லக்ஷ்மிபாய் பாரதம் பெற்றெடுத்த வீராங் கனைகளுள் ஒருத்தி. சுதந்திரத்திற்காகவும், சுய கௌர வத்திற்காகவும் போரிட்டு மடிந்த அவளுடைய திருநாமம் சரித்திரத்தில் என்றும் அழியாது நின்று விளங்கும். 1857-ஆம் வருஷப் புரட்சி உண்மையில் பாரத நாட்டின் சுதந்திரப் போராட்டமே யாகும். பெண் புலவர் சுபத்ரா குமாரி சௌஹான் லக்ஷ்மிபாய் பற்றி கூறுவதாவது:—

“1857-ல் அப் புராதனமான வீரவாள் மின்னியெழுந்தது. புந்தேல்கண்டின் ஹர்போல் வீர மக்களின் வாயிலாகவே நாம் அக்கதையைக் கேட்டோம். ஆண்மை நிறைந்த ஜான்ஸி ராணி உக்கிரமாகப் போர் புரிந்தாள்.”

மகாராணி அப்போரின் உயிர் நாடியாகவும், மூலாதாரமாகவும் விளங்கினாள். பகைவர்கள் கூட அவளது வீரத்தையும், பண்பினையும் பாராட்டிப் பேசினர். ஸர். ஹ்யூ ரோஜ் ராணியைப் புகழ்ந்து தமது நாட்குறிப்பிலே எழுதியுள்ளார்: “மகாராணியின் உயர் குடிப்பிறப்பு, அண்டியோரிடமும் சிப்பாய்களிடத்தும் அவள் காண்பித்த அளவற்ற தாராளம், மிக நெருக்கடியான நேரத்திலும் சிறிதும் அசைந்து கொடாத மனத் துணிவு ஆகிய நற்குணங்களே ராணியை வெல்வதற்கரிய எதிரியாக்கி விட்டன. எமது பகைவர் தரப்பிலே மற்ற யாவரினும் மேம்பட்ட வீரங்கொண்ட சேனைத் தலைவி அவளே யாவாள்.” இன்னொர் எழுத்தாளர் அவளைப் பற்றிக் குறிப்பிடும் போது, அவள் பிரெஞ்சு நாட்டின் ஜோன் ஆஃப் ஆர்க் என்ற தேச பக்த வீர அணங்கைப் போன்றவள் என எழுதியுள்ளார்.

ஆனால் அக்காலத்தில் அவளுடன் ஒத்துழைத்தவர்கள் அனைவரும் அவளது பெருமையை நன்கு உணரவில்லை. ராவ்சாகிப் முதலிய தலைவர்கள் அவளது தலைமையை ஒப்புக்கொண்டு செயலாற்றியிருந்தால் 1857-ன் போராட்டம் இன்று வெறும் புரட்சி என்று அழைக்கப்பட்டிராது.

அவள் பெண்மை நிறைந்தவள்; ஆயினும் போர்க் கலையில் வல்லவள்; தனது மார்பிலே குண்டுகளைத் தாங்கும் சக்தி படைத்தவள்; போர்க்களம் புகுந்து ஒரு பெண்

சிங்கமென முழங்கினள். மென்மையும் அழகும் கொண்டவளாயினும், அவள் மாவீரர்களைத் தோற்கடித்தவள்; தனது போர்த் திறமையினால் அவர்களையெல்லாம் வியப்புறச் செய்தவள். அவள் கற்பு நிறைந்த மங்கை, அபிமானம் நிறைந்த தாய். தன் கணவர் போனபின்பு அவரது கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றிய பெண்மணி. தனது சுவீகார புத்திரனான சிறுவன் தாமோதர ராவையும் அவள் போர்க்களத்தில் தனது முதுகில் சேர்த்துக் கட்டிக் கொண்டிருந்தாள்.

ராணி மதநம்பிக்கை மிகுந்த பெண்மணி; ஆயினும் அவளது படையிலே முகம்மதியர், பட்டாணியர் யாவருமே அவளது நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களாக இருந்தனர். அவளது தலைமையின் கீழ் இந்துக்களும், முஸ்லிம்களும் தோளோடு தோள் சேர்த்து நின்று போரிட்டனர். லக்ஷ்மிபாய் இந்து-முஸ்லீம் சிப்பாய்களுக்கு, இங்கிலாந்து மக்களது அபிமானம் பெற்ற வீர ராணி 'போடீஷியா' போன்று விளங்கினாள் என்று, ஸர். எட்வின் குறிப்பிட்டுள்ளார்.

வாருங்கள், இவ்வீர ராணியின் கதையைக் கேளுங்கள்.

புனாவில் அக்காலத்தில் பேஷ்வாவின் கை ஓங்கி நின்றது; பேஷ்வாவிடம் கிருஷ்ணராவ் தாம்பே என்ற ஒரு மராட்டிய அந்தணச் சிறுவனும் இருந்தார். அவர் பேஷ்வாக்களது நம்பிக்கைக்குப் பாத்திரமானவர். அவருடைய புத்திரர் பலவந்த்ராவ் தாம்பே வளர்ந்து பெரியவராகி பேஷ்வாக்களின் படையில் உயர்ந்த ராணுவ அதிகாரியானார். அவரது பிள்ளை மோரோ பந்த் என்பவரது வீட்டிலேதான் நம் கதாநாயகியான மனூபாய் பிறந்தனள்.

ஆங்கிலேயர்கள் பாஜீராவ் பேஷ்வாவை அரியணை யிலிருந்து இறக்கி, சிம்நாஜி அப்பா என்பவரை அரியணை யிலமர்த்தி தம்மிஷ்டப்படி செயல் புரியத் திட்டமிட்டனர், ஆனால், சுயமரியாதையுணர்வு கொண்ட சிம்நாஜி, மோரோ பந்தையும் அழைத்துக் கொண்டு குடும்பத்துடன் காசிக்குச் சென்றுவிட்டார். காசியிலேயே 1835 நவம்பர் 19-ந் தேதி லக்ஷ்மிபாய் பிறந்தாள். இவளது ஜாதகத்தைக் கணித்த சோதிடர்கள், இப்பெண்ணிற்கு ராஜயோகம் இருப்பதாகக் கூறினர்.

லக்ஷ்மிபாயின் இளமைப் பெயர் மணிகர்ணிகை அல்லது மனூபாய் என்பதாகும். அவள் நான்கு வயதுச் சிறுமியாக இருந்தபோதே அன்னை பாகீரதிபாய் விண்ணுல கெய்திவிட்டாள். மோரோ பந்த், பெண்ணையும் அழைத்துக் கொண்டு பீட்டூரில் இருந்த பாஜீராவிடம் வந்து சேர்ந்து விட்டார். மனூபாய் இளமையிலேயே பயமற்றவளாகவும், துறுதுறுப்புள்ளவளாகவும், வெகுளிப் பெண்ணாகவும், அழகி யாகவும் இருந்தனள். அரசவையிலிருந்த யாவருக்கும் அவள் மீது அன்பும் அபிமானமும் இருந்தன. அன்புடன் அவளை யாவரும் 'சபீலி' என்று அழைத்து வந்தனர். மனூபாய் இளமையில் பேஷ்வாவின் சுவீகாரப்பிள்ளை நானா சாகிப்புடன் விளையாடிப் பொழுது போக்குவாள். வில் வித்தையிலும், குதிரை சவாரியிலும், நீந்துவதிலும், ஏன் புத்தகப் படிப்பிலும்கூட, மனூ நானாவுக்குப் பின் தங்கி விடவில்லை; சிறு பிராயம் முதற்கொண்டே அவள் மிகவும் தன்மான உணர்ச்சி கொண்டிருந்தாள். சுபத்ரா குமாரி சௌஹான் பாடுகிறார்: 'அவள் இலக்குமி போலும்! துர்க்கை போலும்! அல்லது வீரத்தின் அவதாரமே போலும்! அவள் வாள் வீசிய திறன்' கண்டு மராட்டியர்

யாவருமே மெய்சிலிர்த்தனர். பொய்ப் போர் செய்வதும், அணிவகுப்பதும், வேட்டையாடலும், முற்றுகையிடலும் கோட்டையைத் தகர்த்தலுமே அவளது பிரியமான பாலிய விளையாடல்களாகும்.'

மனூ நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தனள். ஏழெட்டுப் பிராயத்திலேயே அவளது தோற்றம் பொலிவுற்றது. அப்போது ஜான்சியின் ஆஸ்தான சோதிடரான தீக்ஷிதர் என்பவர் பேஷ்வாவின் அவைக்கு வந்தார். மோரோ பந்த் அவரிடம் தமது கன்னிகைக்குத் தக்கதோர் மணாளனைக் கூறுமாறு வேண்டினர். தீக்ஷிதர் மனூவின் ஜாதகத்தைக் கண்டு பூரித்தார். சோதிடர் ஜான்சி திரும்பியதும் ஜான்சி அரசர் கங்காதரராவிடம் மனூவைப் புகழ்ந்து பேசினர். அவ்வளவுதான், மகாராஜா கங்காதரராவ் மனூபாயை மணம் புரிந்து கொண்டு ஜான்சிக்கு அழைத்து வந்துவிட்டார். திருமணத்திற்குப்பின் மனூவின் பெயர் லக்ஷ்மிபாய் ஆகிவிட்டது.

அந்நாட்களில் பாரதத்தின் நிலை கேடுற்றிருந்தது. கிழக்கிந்தியக் கம்பெனியின் செல்வாக்கு எங்கும் பரவியிருந்தது. சில சமஸ்தானங்கள் தவிர, இந்தியா முழுவதன் ஆட்சியும் கம்பெனிக்கு உட்பட்டுவிட்டது. தில்லி பாதுஷாவின் ஆட்சி வலுவிழந்து விட்டது. பஞ்சாப்பின் சீக்கியரும், வங்காளத்தின் நவாப்புகளும், மராட்டிய பேஷ்வாக்களும் மண்டியிட்டு விட்டனர். ஏதோ சாக்குபோக்குக் காட்டியும், வாரிசு இல்லை என்ற காரணம் காட்டியும் பல சமஸ்தானங்களைக் கம்பெனி வசப்படுத்திக் கொண்டது. ராஜ்யங்களின் உள் விஷயங்கள், சமஸ்தானாதிபதிகள் ஒருவரையொருவர் சந்திப்பது, திருமண சம்பந்தம், சுவீகாரம் எடுத்துக்

கொள்ளல் ஆகியவற்றிலும் கம்பெனியின் கட்டளையைப் பெறவேண்டிய நிலை வந்துவிட்டது. கங்காதர ராவ் கூடக் கம்பெனி ஆட்சியாளரது கைப்பாவையாக மாறியிருந்தார். அவரது ராஜ்யத்தில் கம்பெனிப் படையிருந்தது. அதன் செலவை ஜான்சியே ஏற்க நேர்ந்தது. ஆனால் இக்கஷ்ட காலத்திலும் கங்காதர ராவ் பிரஜைகளின் நன்மையை மறந்து விடவில்லை. ராஜ்யத்தைக் கடன் தொல்லையிலிருந்து அவர் விடுவித்தார். பிரஜைகளின் இன்பத்திற்கும், வசதிக்கும் பணத்தைச் செலவிட்டார். ராஜ்யத்தில் நல்ல அதிகாரிகளை நியமித்தார். அவரது அரசவையில் புலவர்கள் குழுமியிருந்தனர். ஜான்சியின் அருகிலுள்ள ராஜ்யங்களிலும் அவருக்கு நல்ல செல்வாக்கு இருந்தது.

சற்று நிம்மதியாக லக்ஷ்மிபாயுடன் தீர்த்த யாத்திரைக்கு மகாராஜா புறப்பட்டார். யாத்திரை முடிந்து திரும்பியபின், லக்ஷ்மிபாய் ஓர் ஆண்மகவைப் பெற்றெடுத்தாள். ராஜ்யம் முழுவதிலும் விழாக் கொண்டாடப் பெற்றது. தமது ஜான்சி, டல்ஹௌஸியின் பிடியிலிருந்து தப்பிவிட்டது, ஏனெனில் வாரீசு பிறந்துவிட்டான் எனக் கங்காதர ராவ் எண்ணினர். ஆனால் தெய்வ சித்தம் வேறு விதமாக அமைந்துவிட்டது. பிறந்து மூன்று மாதங்கள் நிரம்புவதற்குள்ளாகவே குழந்தை இறந்துவிட்டது. பின்பு மகாராஜாவுக்கு எங்குமே இருள்தான் தென்பட்டது. அவரால் இத்துன்பத்தைத் தாங்க இயலவில்லை; படுத்த படுக்கையாகி விட்டார். உயிர் துறப்பதற்குச் சில நாட்கள் முன்பு, அவர் தமது குலத்தைச் சார்ந்த ஆனந்தராவ் என்ற சிறுவனைத் தத்துப் புத்திரனுக்கிக் கொண்டார். அவன் பெயர் தாமோதர ராவ் என்று மாற்றி வைக்கப் பட்டது. கம்பெனி அரசாங்கத்திடம், 'தாமோதர ராவை

ஜான்சியின் வாரிசாக ஏற்குமாறு மகாராஜா வேண்டுகோள் விடுத்தார்.

அவர் காலமான பிறகு, அவர் செய்து கொண்ட சுவீகாரம் செல்லுபடியாகாது என்றும், கம்பெனி அதை அங்கீகரிக்கவில்லை என்றும் 1854-ல் வைசிராயிடமிருந்து தாக்கீது வந்து சேர்ந்தது. மேலும், ஜான்சியை வாரிசற்ற ராஜ்யமாகக் கருதி அதனை ஆங்கில ராஜ்யத்துடன் இணைத்துவிடப் போவதாகவும், ராணிக்கு 60,000 ரூபாய் பென்ஷன் அளிப்பதாகவும் அவள் கோட்டையை விட்டு விட்டு நகருக்குள் அமைந்த ஒரு மாளிகையில் வசிக்க வேண்டுமெனவும் ஆணை கிடைத்தது.

இது கண்டு ராணி மனம் புழுங்கிப் போனாள். எந்தச் சக்திக்கு முன்னால் பேஷ்வாக்கள் தலைகுனிந்து விட்டனரோ, தில்லி பாதுஷாக்கள் கைப்பொம்மைகளாகி விட்டனரோ, அந்தச் சக்தியின் முன்பு ஒரு பெண் என்ன செய்ய இயலும்? கம்பெனி அரசாங்கம் தனது அடக்கு முறையை எதிர்த்த அரசர்களையும் மக்களையும் நசுக்கி அழித்து வந்தது. ஆனால் துயரம் அளவு கடந்து விட்டால் அதுவே மருந்தாகிவிடுமன்றோ? மக்களின் பொறுமை எல்லை கடந்துவிட்டதும் புரட்சியாக வெடித்தது. இவ் வெடிப்பே 1857-ஆம் ஆண்டுப் போராட்டம். இது வெறும் சிப்பாய்க் கலகமல்ல. இப் புரட்சியில் அரசர் முதல் ஆண்டிவரை யாவரும் கலந்திருந்தனர். நானா சாகிப்பும், தாத்யா டோபேயும், பகதூர்ஷாவும், ராணி லக்ஷ்மிபாயுமே இப்புரட்சியின் உயிர் நிலையாக விளங்கினர். மீரட்டும், தில்லியும், லக்னோவும், காசியும், பாட்னாவும், புந்தேல் கண்டும்தான் இப்போராட்டத்தின் கேந்திரங்களாக அமைந்தன.

ராணி லக்ஷ்மிபாய் தனது நேரத்தைப் பெரும்பாலும் பூஜை பாராயணங்களில் கழித்து வந்தாள். தனது எஞ்சிய வாழ்நாளை துணையற்ற ஒரு விதவையாகக் கழிக்க அவள் விரும்பவில்லை. தேசப்பற்று மிக்க வீரப் பெண்மணியாகக் கழிக்கவே விருப்பம் கொண்டாள். இதனால்தான், அவள் வாட்பயிற்சி, குதிரையேற்றம் இரண்டையும் தொடர்ந்து நடத்திவந்தாள்.

1857 ஜூன் 14-ந் தேதி ஹவல்தார் குருபக்ஷ் சிங் ஜான்சியில் புரட்சிக் கொடியை உயர்த்திவிட்டார். ஜான்சி யின் ஆட்சிப் பொறுப்பை ராணியிடம் ஒப்படைத்துவிட்டு, கம்பெனிச் சர்க்கார்க்கு எதிராகப் புரட்சித் தீயைப் பரப்பிக் கொண்டு புரட்சிப் படை முன்னேறிச் சென்றது. புரட்சிக் காரர்கள் தமக்கிருந்த உணர்ச்சி வேகத்தில் ஜான்சி யிலேயே சில கொலைகளைப் புரிந்தனர். ஆனால், இக்கொலை களுக்கும் ராணிக்கும் தொடர்பேதும் கிடையாது.

பிற்காலத்தில் மார்ட்டின் என்ற ஆங்கிலேயரே (புரட்சிக் காரரிடமிருந்து தப்பிப் பிழைத்தவர்) ராணியின் தத்துப் புத்திரரான தாமோதர ராவிற்குப் பின்வருமாறு எழுதினார்: "உங்களது அன்னையாரிடம் ஆங்கில அரசாங் கம் மிகக் கொடுமை காட்டியது; அவருக்கு அநியாயம் புரிந்தது. உங்கள் அன்னையாரைப் பற்றி உண்மையில் நான் அறிந்துள்ளதுபோன்று வேறு யாரும் அறிய மாட்டார் கள். 1857-ல் ஜூனிலே ஜான்சியில் ஐரோப்பியர்கள் கொலையுண்டதற்கும் அப்பாவியான உங்களது அன்னைக் கும் சிறிதும் சம்பந்தமில்லை."

நிலைமைக்குத் தக்கவாறு செயலாற்றும் துணிவு மிக்க பெண்ணரசிகளுள் லக்ஷ்மிபாயும் ஒருத்தி. அவள்

எத்தனையோ உயர்வு தாழ்வுகளைக் கண்டறிந்தவள். ஓர் ஏழைப் பிராமணர் குடியிலே பிறந்து பின்னர் ராணியான நங்கை அவள். ஆயினும், அதிர்ஷ்டம் தலைகீழாக மாறி புத்திரனைப் பறிகொடுத்தாள்; கணவரையும் இழந்தாள்; கம்பெனிச் சர்க்கார் அவளது அரியணையையும் தன்னுடைய தாக்கிக் கொண்டது. இத்தனை நேர்ந்தும் ராணி நம்பிக் கையை இழந்துவிடவில்லை. அவள் எப்போதும் விழிப்புடன் இருந்து வந்தாள். பிற்கால சூழ்நிலைக்கு ஏற்பத் தன்னை ஆயத்தப் படுத்திக் கொண்டாள். ராஜ்ய பாரத்தை ஏற்ற வுடனே, முதற் கடமையாக மக்களது நலனில் அக்கறை காட்டினாள். தன் ராஜ்யத்தைப் பாதுகாப்பதற்காகச் சிறந்த படையினை அமைத்து வெடிமருந்து, பீரங்கி ஆகியவற்றை யும் சேகரித்தாள். அவள் மிக்க கௌரவமாகவும், தகுதி யுடனும் ஆட்சி நடத்தினாள். டேய்லர் என்னும் ஆங்கிலக் கனவான் எழுதியிருப்பது போல, "ராணி தனது பதவிக்கு ஏற்ற தைரியத்துடனும் உறுதியுடனும் செயல் புரிந்து வந்தாள்."

அழகும் கவர்ச்சியும் நிறைந்த அவளது தோற்றம், ஆடையலங்காரம் ஆகியவை பற்றி கிலீன் என்ற எழுத்தா ளர் வருமாறு குறிப்பிடுகின்றார்: "ராணி அணியும் அங்கி யின் மீது பொன் சரிகை வேலைப்பாடு கொண்ட இடுப்புப் பட்டை வரிந்து கட்டப்பட்டிருக்கும். வெள்ளிப் பூச்சும், நகாசு வேலைப்பாடும் அமைந்த ஒரு கைத்துப்பாக்கி அதில் தொங்கிக் கொண்டிருக்கும். அதனருகிலேயே விஷம் தீட்டிய குத்து வாளும் இருக்கும். புடைவைக்குப் பதில் அவர் தொள தொளப்பான பைஜாமா அணிவது வழக்கம். இந்த அழகிய ராணியை இவ்வுடையிலே காண்போர் மயக்கம் கொள்வர்."

ராணி அரியணையில் அமர்ந்து சில நாட்களே ஆகியிருந்தன. ஸதாசிவராவ் என்பவர் தாமே ஜான்சி அரியணைக்கு உரியவர் என்று கூறிக்கொண்டு, கரேரா என்னுமிடத்தில் தம்மை ஜான்சியின் அரசர் என்று அறிவித்துக் கொண்டார். இக்கலகத்தை அடக்கிவிட்டு ராணி நிம்மதியாக மூச்சு விட்டபாடில்லை. அதற்குள் ஓர்ச்சா சமஸ்தானத்தின் திவான் நத்தேகான் 20,000 வீரர்களுடன் ஜான்சிமீது படையெடுத்து விட்டான். ஆனால் ராணி தனது உறுதி காரணமாக மறுபடியும் வெற்றி பெற்றாள்.

இதுவரை கம்பெனி அரசாங்கம் வட இந்தியாவில் கலகத்தை அடக்குவதிலேயே ஈடுபட்டிருந்தது. அங்கு நிலைமையைச் சமாளித்துக் கொண்டு இருந்த தளபதி ஹ்யூ ரோஜ் முதலியோர், ஜான்சி ராணியை வெளியேற்றாத வரை மத்திய பாரதத்தின் புரட்சிக் காரரை ஒழிப்பது இயலாதென எண்ணினர். பல ஆங்கில அதிகாரிகள் ஜான்சி தான் புரட்சியின் கோட்டை என்று கருதினர். எனவேதான் ஸர். ஹ்யூ ரோஜின் தலைமையில் ஒரு பெரும்படை ஜான்சியை வந்து முற்றுகையிட்டது. அப்படை ஜான்சி நோக்கி வருகிறது என்ற செய்தியை அறிந்த ராணியும் தனது தலைநகரைப் பாதுகாப்பதற்கான ஏற்பாடுகளைத் தொடங்கிவிட்டாள். ஆங்கிலப் படைகளுக்கு உணவுப் பொருள்கள் கிடைக்காது போக வேண்டுமென்பதற்காக, ஜான்சியின் அருகிலுள்ள பகுதி முழுவதும் சூனியமாக்கப் பட்டது. ஆனால், ராணியின் இந்த இலட்சியம் நிறைவேற வில்லை. ஏனெனில், பீகம்கட்டின் அரசரும், சிந்தியாவும் சேர்ந்து கம்பெனிப் படைகளுக்கு எல்லாவித வசதிகளையும் தந்தனர்.

இப் போரில் ராணியே தனது பண்டயின் தலைமைப்

பொறுப்பை ஏற்றனள். கோட்டையினுள் மொத்தம் ஐம்பத்தியொன்று பீரங்கிகள் இருந்தன. அவற்றில், 'மின்னொளி' என்றும், 'முகில் முழக்கம்' எனவும், 'பவானி சங்கர்' என்றும் பெயர் பெற்ற பீரங்கிகள் குறிப்பிடத் தக்கவை. ராணியின் நம்பிக்கைக்குரிய பீரங்கிக்காரரான குலாம் கௌஸ்கான் ஒரு மாவீரரும் தீரருமாவார். படையில் புந்தேல்கண்டின் வீரர்களும், போர்ப் பிரியர்களுமான ஆப்கானியச் சிப்பாய்களும் இருந்தனர். ராணி இரவு தோறும் விழித்திருந்து நாற்புறமும் சகல ஏற்பாடுகளையும் மேற்பார்வையிட்டு வந்தாள். அணிகள் கலைந்தால் உடனே நேரில் சென்று சமாளித்தாள். மிகப் பயங்கரமான யுத்தம் நிகழ்ந்தது, கோட்டையின் வாயிலைக் காத்து நின்ற வீரர் குதாபக்ஷும், பீரங்கித் தலைவர் கௌஸ் கானும் கொல்லப்பட்டு விட்டனர். தவிர, வெடி மருந்துச் சாலையில் ஒரு குண்டு பாய்ந்து இடிமுழக்கம் ஏற்பட்டது; நூற்றுக் கணக்கான வீரர்கள் பஞ்செனப் பறந்து வீழ்ந்தனர்.

நகரினுள் பகைவரது படைகள் புகுந்து படுகொலை கள் நடத்தின. மக்கள் குய்யோ முறையோ என ஓலமிட் டனர். உதவிபுரிய வருமாறு தாத்யா டோபேக்கு ராணி அழைப்பு அனுப்பியிருந்தாள். ஆனால், ஆங்கிலேயர் வெளியிலிருந்து எந்த உதவியும் கிடைக்காதவாறு தடுத்து விட்டனர். ராணி இரு கைகளிலும் வாளேந்தி, வாயினால் கடிவாளத்தைக் கடித்துக் கொண்டு ரணசண்டிகாதேவி போன்று போர்க்களத்தில் குதித்தனள். பன்னிரு தினங் கள் வரை பயங்கரமான போர் நடந்தது. தளவாடங்கள் யாவும் குறைந்து வந்ததைக் கண்ட படைத் தலைவர்கள், இனி யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துவது இயலாதென ராணிக்குத் தெரிவித்தனர்.

'ஜான்சியைப் பகைவர் கையில் விட்டுச் செல்ல வேண்டுமே' என்ற எண்ணம் ராணிக்கு அளவு கடந்த வேதனை யளித்தது. படைத் தலைவர் ராணியிடம் அங்கிருந்து வெளியேறி தம்மைக் காத்துக் கொள்ளுமாறு கூறினர். 'நான் வெடிமருந்துக் குவியலுக்கு இடையில் புகுந்து அமர்ந்து நெருப்புவைத்துக் கொண்டு விடுகிறேன். நான் உயிருடன் இருக்கும் வரை ஜான்சியை விட்டுச் செல்லமாட்டேன்.' என்று அவள் பதிலுரைத்தாள்.

சுதந்திரப் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்துவதற்காக ராணி உயிருடன் இருக்க வேண்டிய அவசியத்தை அனுபவம் நிறைந்த தளபதிகள் ராணியிடம் வலியுறுத்தினர். "வருங்காலத்தில் ஜான்சிக்காக மட்டுமல்ல, பாரத நாடு முழுவதற்காகவும் போர் புரிய வேண்டும்" என்று ராணிக்கும் தோன்றியது. இவ்வாறு நிச்சயித்து, தனது சுவீகாரப் பிள்ளையை முதுகில் சேர்த்துக் கட்டிக் கொண்டு ஜான்சிக் கோட்டையினின்றும் ராணி வெளியேறினள். மறுநாள், எஞ்சியிருந்த சிப்பாய்கள் வீரப் போர் புரிந்து உயிரை விட்டனர்.

நள்ளிரவில் ஒளிந்து வெளியேறிய ராணி ஜான்சியிலிருந்து 21 மைல் தொலைவிலுள்ள பாண்ட்ரே என்ற கிராமத்தில் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டாள். ஸர். ஹ்யூ ரோஜிற்கு ராணி தப்பியோடிவிட்டாள் என்ற செய்தி எட்டிவிட்டது. அவர் சில முக்கியமான சிப்பாய்களை அனுப்பி ராணியைப் பின்தொடரச் சொன்னர். இச்சிப்பாய்கள் பாண்ட்ரே கிராமத்தை யடைந்தபோது ராணி உணவருந்திக் கொண்டிருந்தாள். தூரத்தில் வரும் சிப்பாய்கள் மீது அவள் பார்வை விழுந்ததும், உணவை அப்படியே போட்டுவிட்டு குழந்தையை முதுகில் 'கட்டிக் கொண்டு

குதிரையின்மீது அமர்ந்தாள். லெப்டினண்டு வாகர் என்பவன் ராணியின் பாதையில் குறுக்கிட முயன்றான். ராணி வாளால் வாகரை ஒரு வெட்டு வெட்டினாள். வாகர் தரை மீது மூர்ச்சித்து வீழ்ந்துவிட்டான். உடனே ராணி குதிரையை வேகமாகத் தட்டி விட்டாள். குதிரையைக் கடும்வேகமாக நூறு மைல் தூரம் செலுத்தி இரவு பன்னிரண்டு மணிக்கு கால்பிக் கோட்டையின் வாயிலை அவள் அடைந்தாள்.

அப்போது நானா சாகிப்பின் சோதரரான ராவ் சாகிப் அந்தக் கோட்டையில் இருந்தார். அவர் ராணியை வரவேற்றார். கால்பிக் கோட்டை மிக்க உறுதி வாய்ந்தது. அங்கு படையும் தளவாடங்களும் கணிசமான அளவில் இருந்தன. ஆனால், அவற்றை நன்கு அமைத்துச் சீர் படுத்துவதற்கு ஒரு நல்ல தலைவர் இல்லை. ராணி வந்து சேர்ந்ததும் இக்குறை நீங்கிவிடும் என்ற நம்பிக்கையும் மகிழ்ச்சியும் எல்லோரிடமும் எழுந்தன. பின்பு அங்கே பாந்தா நவாப்பும், பான்பூர் அரசரும் தங்கள் படைகளுடன் உதவி புரிவதற்கு வந்து சேர்ந்தனர்.

உறுதியான படை, அணிவகுப்பு, கட்டுப்பாடான முறையில் செயலாற்றல் ஆகியவற்றின் முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்தவள் ராணி. ஆனால், ராவ் சாகிப் முதலிய துணைவர்கள் ஒரு பெண்ணிற்கு உட்பட்டுப் பணியாற்று வதை மதிப்புக் குறைவு என்று எண்ணினர். இதன் விளை வாக, கால்பியிலிருந்து சிறிது தூரத்தில் உள்ள கோஞ்ச் என்னுமிடத்தில் ஆங்கிலேயருடன் போரிட நேர்ந்த போது, சரியான தலைமையில்லாமையால் கால்பியின் படை தோற்றுப் பின்வாங்கிவிட்டது. இதன் பிறகும் ராணியின் ஆலோசனையை யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை;

இல்லையெனில் கால்பியிலேயே இப்புரட்சிக்கு நல்ல முடிவு ஏற்பட்டிருக்கும்.

ஒத்துழைப்புக் கிடைக்காவிடினும், ராணி தனது கடமையினின்றும் பின்னடையவில்லை. அவள் 250 குதிரை வீரர்களுடன் யமுனை ஆற்றுப்பக்கத்தில் காவல் பொறுப்பை ஏற்றிருந்தாள். ஆனால் நல்ல அமைப்பு இல்லாத ராவ் சாகிப்பின் படையைப் பின்னாலிருந்து பகைவர் படை தாக்கியதும், அவர்கள் சிதறியோடத் துவங்கிவிட்டனர். இங்ஙனம் தோல்வி நெருங்குவதைக் கண்ணுற்றதும் ராணி



சடக்கென்று மின்னல் போன்று பாய்ந்து பீரங்கிப் படையினைத் தாக்கினள். பகைவர் தரப்புப் பீரங்கிப் படையாட்கள் நடுங்கி ஓட ஆரம்பித்தனர். ஆயினும், அவர்களுடன் புதிய படை வந்து சேர்ந்து கொண்டமையால், மீண்டும் அவர்கள் நின்று போராடலாயினர். இதைக் கண்டதும் பேஷ்வாவின் படை ஓட்டமெடுத்தது.

கால்பியிலிருந்து வெளியேறிய ராவ் சாகிப்பின்

துணைவர்கள் குவாலியரிலிருந்து 46 மைல் தூரத்தில் உள்ள கோபாலபுரத்தில் வந்து தங்கினர். அதற்குள், தா.த்யா டோபேயும் இவர்களுடன் வந்து இணைந்து கொண்டனர். இங்கு யாவரும் ஒன்று கூடினும், இனி யாது செய்வதென்பதைத் தீர்மானிக்க முடியவில்லை. அப் போதும் வீர ராணியே முன்வந்து யோசனை கூறினள். "கால்பியை நம்பியிருந்தோம், அது கையினின்றும் நழுவி விட்டது. நாம் போருக்கான கருவிகளையும் உறுதியான கோட்டைக் காவலையும் ஏற்படுத்திக் கொள்ளாதவரை ஆங்கிலேயரை எதிர்த்துப் போரிடுவது இயலாத காரிய மாகும். இப்போது நமக்கு ஒரே ஒரு வழிதான் உள்ளது. அதுதான் குவாலியரைக் கைப்பற்றிக் கொள்வது. மகா ராஜா ஜயாஜீராவும், அவரது அமைச்சர்களும் ஆங்கிலேய பக்தர்களாக இருப்பினும், குவாலியர் படை அவர்களிடம் பற்றுகொண்டதல்ல."

இந்த யோசனையை யாவருமே ஏற்று, குவாலியர் மீது படையெடுத்தனர். பேஷ்வாவுக்கு அடங்கிய அரசர் என்ற முறையில், சிந்தியா தம்மை வரவேற்று இடமளிப் பார் என்று ராவ் சாகிப் எண்ணியிருந்தார். எனவே, இந்த எண்ணத்துடன் அவர்கள் அலட்சியமாக இருந்தனர். சிந்தியாவோ இவர்கள்மீது எதிர்த்துப் பாய்ந்து போராட ஆரம்பித்தார். இவர்கள் படையில் ஓட்டமும் குழப்பமும் ஆகிவிட்டன. ராணி தனது திட்டத்தை வீணாக்க விடு வாளா ? அவள் பெண்சிங்கமெனத் துடித்து எழுந்தனள். நம்பிக்கை வாய்ந்த 250 வீரர்களுடன் அவள் சிந்தியாவின் பீரங்கிச் சாலையின் மீது பாய்ந்து சென்று தாக்கினாள். ராணியின் இத்துணிவைக் கண்டு இளைஞர் ஜயாஜீராவும் ஆத்திரமடைந்தார். இருதரப்பிலும் கடும்போர் நிகழ்ந்தது.

ராணி நாட்டின் சுதந்திரத்திற்காகப் போரிட்டுக் கொண் டிருந்தாள்; ஆனால் ஜயாஜீ ஆங்கிலேயரின் பாராட்டைப் பெறும் நோக்கத்துடன் போரிட்டார். ராணி அப்போது. துர்க்கா தேவியாகவே மாறியிருந்தனள். எனவே, பகைவ ரது படை புறமுதுகிட்டது. நல்ல தருணத்தில் தாத்யா டோபேயின் படை மறுபக்கத்தில் வந்து தாக்கியது. இவ்வாறு இருபக்க மோதல்களில் சிக்கிய சிந்தியா தௌல்புர் என்னும் இடம் நோக்கி ஓடிவிட்டார். பின்பு ஆக்ராவில் ஆங்கிலேயரது பாதுகாப்பில் போய்ச் சேர்ந்த பின்னரே அவருக்கு உயிர் வந்தது.

குவாலியர் கோட்டை வீழ்ந்துவிட்டது. நானு சாகிப்தான் அதன் பேஷ்வா என அறிவிக்கப்பட்டது. கோட்டை, படைபலம், பொக்கிஷம் ஆகியவை கிடைத்து விட்டபடியால் யாவரும் மகிழ்ச்சியில் கவலையற்று இருந் தனர். வருங்கால ஆபத்தைப் பற்றி நினைக்காமல் அவர்கள் விழாக்களிலும், களியாட்டங்களிலும் ஈடுபட்டுவிட்டனர். வெற்றிக் களிப்பில் மூழ்கி, தங்களுக்குப் பூரண சுயராஜ்யமே கிடைத்து விட்டதென அவர்கள் எண்ணிவிட்டனர். ராணியோ இதையெல்லாம் கண்டு மிகவும் வருந்தினாள்.

ஆங்கிலேயர் தமது ஆயத்த நிலையைப் பூர்த்தி செய்து கொண்டனர். ஸர். ஹ்யூ ரோஜ், கர்னல் நேபியர் இருவரது தலைமையிலும் ஆங்கிலப் படை முரார் என்னுமிடத்தைக் கைக்கொண்டது. ராவ் சாகிப்பைச் சார்ந்தோர் யாவரும் களியாட்டங்களின் களைப்பையே இன்னும் போக்கிக் கொள்ளவில்லை. கவலையற்றுக் கிடந்த அவரது படையை ஆங்கிலேயர் தாக்கினர். அப்போதுதான் யாவரும் விழித்துக் கொண்டனர். ஆனால் இனிமேல் என்ன செய்

வது? வெற்றிக் களியாட்டம் விபரீதமாகி விட்டது. துரதிர்ஷ்டம் சூழ்ந்து கொண்டது. ராணி தனது மனோரதங்களும் விருப்பங்களும் இங்ஙனம் அழிந்து போவதைக் கண்டு மனம் மறுகினாள்.

ஆனால், விதி சிரித்தது போலும்! கயிறு எரிந்து போயினும் முடிச்சுவிடவில்லை என்ற கதையாக அமைந்தது. ராவ் சாகிப்பின் மனத்தில் தாம் நானாவின் குடியில் பிறந்தவர் என்ற செருக்கு இருந்தது. எனவேதான் அவர் அந்நிலையிலும் ஒரு பெண்ணிடம் படைப் பொறுப்பை அளிப்பதா என்று இருந்து விட்டார். ராணியோ தன்னளவில் மிகுந்த ஜாக்கிரதையாகச் செயலாற்றினாள். குவாலியருக்கு வந்து சேரும் பாதைகளனைத்திலும் அவள் சிறு சிறு படைகளை நிறுத்திவைத்திருந்தாள். கிழக்குத் திசையில் காத்து நிற்கும் பொறுப்பைத் தானே ஏற்றுக் கொண்டாள். ஆணுடை தரித்து, போர்க் கோலத்துடன் அவள் வேகமான குதிரையில் ஏறியமர்ந்தனள். அவள் தனது நம்பிக்கைக்குரிய மெய்காப்பாளர்களாகிய, போர்த்திறம் வாய்ந்த மந்தாரா, காசி என்னும் இரு தோழிகளுடன் போர்க்களத்தில் இறங்கினாள்.

இரு தரப்புகளிலும் போர் வீரர்களது வாட்கள் மோதி யொலித்தன. குண்டுகளின் ஓசை, 'கொல்லு, வெட்டு' என்ற கூச்சல்கள், குதிரைகளின் கனைப்பு, போர்ப் பறையொலி ஆகியவை எங்கும் எதிரொலித்தன. தாகங் கொண்ட பூமிதேவி குருதியில் குளித்தாள். மகாராணி வகுத்திருந்த அணிகளைப் பிளந்து முன்னேறிச் செல்வது தளபதி ஹ்யூ ரோஜின் படைக்கு இயலாத செயலாகி விட்டது. ராணியிடம் மிக்க விசுவாசம் கொண்ட

பட்டாணியச் சிப்பாய்கள் ஆங்கிலப் படையினரைச் சிதற அடித்தனர். ஆனால் பகைவர்கள் தமது படையை மிகுந்த திறமையுடன் உபயோகித்தனர். விரைவிலேயே துணைப் படையும் வந்து சேர்ந்து கொண்டதும் பகைவர்களுக்கு ஒரு புதிய ஊக்கம் பிறந்து விட்டது. அவர்கள் முனைந்து முன்னேறினர். தளர்ந்து போன சிப்பாய்களும் தைரியம் கொண்டு, வேகமாகத் தாக்கினர். பிரிகேடியர் ஸ்மித் மறு பக்கம் திரும்புவதைக் கண்ட ராணி அவனது பாதையைத் தடுத்துவிட்டாள். சூரியன் அஸ்தமித்துக் கொண்டிருந் தான். ராணியை வெல்வது அரிதென அறிந்த ஆங்கி லேயர் பின்வாங்கினர். இவ்வாறு அவர்கள் அன்றைய வெற்றிப் பட்டத்தை ராணியின் தலையிலே கட்டினர். ஆனால், இப்போரில் ராணியின் அன்புக்குரிய குதிரை படுகாயமடைந்து விட்டது.

மறுநாளும் கொடிய யுத்தம் நடந்தது. இரு கட்சி களிலும் வெகு பல வீரர்கள் மாண்டனர். மூன்றும் நாள் ஸர். ஹ்யூ ரோஜ் வெகு மும்முரமாக ஆயத்தம் செய்து கொண்டு தாக்கினர். ராணியின் படைப் பகுதியை விடுத்து, அவர் இப்போது ராவ் சாகிப்பின் படையணியின்மீது பாய்ந் தார். ஒன்றன் பின் ஒன்றாக ராவ் சாகிப்பின் அணிகள் சிதைவுற்றன. படைத் தலைமை தளர்வுற்றதும் படையும் தளர்வடைந்து விட்டது. பேஷ்வாவின் படையினர் ஓடத் துவங்கினர். ராணி அவ்வமயம் மிக்கத் துணிவுடன் முன்னேறினாள். ஆங்கிலப் படை அவளை வளைத்துக் கொண்டது. இருகைகளிலும் வாளேந்திய ராணி, பகைவர் நடுவில் ரணகாளியாகவே காட்சியளித்தாள். அவளது வாள் வீச்சில் அகப்பட்ட எந்தப் பகைவனும் தாமதமின்றி எமனுலகம் போய்ச் சேர்ந்தான். எதிரிகளும் சிறிது நேரம்

செய்வதறியாமல் திகைத்துப் போயினர். சந்தர்ப்பம் பார்த்து ராணி தனது பத்துப் பன்னிரண்டு கூட்டாளிகளுடன் பகைவரது முற்றுகையினின்றும் வெளியேறிவிட்டாள். இச்செய்தியை அறிந்த கர்னல் ஸ்மித், பொறுக்கியெடுத்த சில குதிரைப் படை வீரரை ராணியின் பின்னால் விரட்டியனுப்பினான். ராணியின் குதிரை வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. அவளுடன் உயிர்த் தோழிகள் இருவரும் இருந்தனர். இருபக்கமிருந்தும் குண்டுகள் பாய்ந்து பறந்து வந்தன. ராணியின் காலிலும் ஓர் குண்டு பாய்ந்துவிட்டது. ஆயினும், அவ்வீராங்கனை தைரியமிழக்கவில்லை. ஏந்திய வாளுடன் குதிரையைச் செலுத்திக் கொண்டே சென்றனள். குதிரையின்மீது அவளுக்குப் பின்னால் சிறுவன் தாமோதர ராவும் இருந்தான். இத்தனையிருந்தும் ராணி பகைவரை நெருங்கவே விடவில்லை. ராணி தன்னைத் காத்துக் கொள்வதற்காக ஒரு சிப்பாயை வெட்டியும் வீழ்த்தினாள்; அப்போது அவள் காதில் தோழியின் அலறல் வீழ்ந்தது. ராணி சுழன்று வந்து தோழியை தாக்கிய ஆங்கிலக் கொலைகாரனது தலையை, சோளத் தட்டையைப் போல வெட்டி வீழ்த்தினாள். பின்னர் ராணி குதிரையை ஓட்டிக் கொண்டு முன்னேறிச் சென்றனள். பகைவரும் விடாமல் தொடர்ந்து வந்து கொண்டிருந்தனர். எதிரில் ஒரு வாய்க்கால் குறுக்கிட்டது. அது புதிய குதிரை; வாய்க்காலைக் கண்டதும் மிரண்டு நின்றுவிட்டது. ராணியின் துணைவர்களுள் ஐந்தாறு நபர்களே எஞ்சியிருந்தனர். அணியாக நின்று அவர்கள் சிறிது நேரம் போரிட்டனர். ஆனால், ஓர் ஆங்கிலக் குதிரை வீரன் பின்னாலிருந்து ராணியின் தலைமீது ஒரு வெட்டு வெட்டினான்; மார்பின் மீதிலும் வெட்டு விழுந்தது. இறந்து கொண்டிருந்த அந்த ராணி அக்குதிரை வீரனை விண்ணுலகனுப்பி விட்டாள்!

அங்கிருந்த வேறு வீரர்கள் பகைவருடன் போரிட்டுக் கொண்டேயிருந்தனர். இங்கே ராணியின் நம்பிக்கைக்குரிய மெய்காப்பாளரான ராசந்திர ராவ் ராணியின் பூதவுடலை ஒரு குடிசையருகில் சிதையில் கிடத்தித் தீ மூட்டி விட்டார்.

கவிஞர் சுபத்திராகுமாரி எழுதுகிறார் :

"ராணி உயிர் துறந்தாள்; சிதையே இப்போது அவளைத் தாங்கும் வாகனம் ஆயிற்று. ஒளியிலே ஒளி கலந்தது. ஒளியிலே கலக்கும் உரிமை படைத்தவளல்லவா ராணி? அவளது வயது இருபத்து மூன்றுதான். அவள் மானிடப் பெண் அல்ல, ஓர் அவதாரமே ஆவாள். அவள் நமக்கு உயிரூட்ட வந்த பெண்மணி; சுதந்திர வீராங்கனை.

அவள் நமக்கெல்லாம் வழிகாட்டிச் சென்றாள்; படிப்பினை போதித்துச் சென்றாள். புந்தேல்கண்டின் ஹர்போல் இனத்தவர் வாயிலாக நாம் அவளது கதையைக் கேட்கிறோம். ஜான்சிப் பேரரசி ஆண்மை நிறைந்தவளாய் முனைந்து போரிட்டாள்."



## நாஞ சாகிப் பேஷ்வா

கி. பி. 1857-ல் பாரத நாட்டின் பயங்கரப் புரட்சி நிகழ்ந்தது. இதனை ஆங்கிலேயர் 'கலகம்' என்றே குறிப்பிடுகின்றனர். ஆனால் இதுவே முதல் சுதந்திரப் போராட்டம் எனலாம். இப்போர் தில்லியின் இறுதிச் சக்கரவர்த்தி பகதூர் ஷாவின் பெயரால் நடத்தப்பட்டது. ஆயினும் இதன் உண்மைத் தலைவராக அமைந்திருந்தவர் நாஞ சாகிப் பேஷ்வாதான்.

நாஞவை இரண்டாவது பாஜீராவ் பேஷ்வா சுவீகார மகனாகப் பெற்றிருந்தார். பாஜீராவ் 1818-ல் ஆங்கி

லேயருடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தார். அதை அனுசரித்து அவர் வருடத்திற்கு எட்டு இலட்சம் ரூபாய் பென்ஷன் பெற்றுக் கொண்டு தனது ராஜ்யம் முழுவதின், அதிகாரத்தையும் ஆங்கிலேயரிடம் ஒப்படைத்துவிட்டு, கான்பூர் அருகிலுள்ள பிட்டூரிலே வசிக்கலாயினர். அப்போது நாணுவின் பெற்ருேர்கள் மகாராஷ்டிரத்திலே தானிருந்தனர். அங்கேதான் வேணு எனும் கிராமத்தில் கி. பி. 1824-ல் நாணு தோன்றினர். நாணுவின் தந்தை பெயர் மாதவராவ் நாராயண் பட்டர்; தாயின் பெயர் கங்கா பாய். ஆங்கிலேயருக்கு உட்பட்டுள்ள இடத்தில் வசிக்க அவர்கள் விரும்பவில்லை. அதனுல், கி.பி. 1827-ல் அவர்கள் பாஜீராவின் அருகே வசிக்க எண்ணி பிட்டூருக்கு வந்து சேர்ந்தனர். அப்போது நாணு இரண்டரை வயதுச் சிறுவன். பார்ப்பதற்கு அவர் மிகவும் அழகாகவும் அன்புக் குரியவராகவும் இருந்தார். அதே ஆண்டில் ஜூன் மாதம் பேஷ்வா பாஜீராவ் அப்பையனைத் தமது மடிமீது அமர்த்திக்கொண்டு அவரே தமது சுவீகாரப் புத்திரன் என்று அறிவித்தும் விட்டார். இங்ஙனம் கிராமத்துச் சிறுவன் பேஷ்வாவின் அரியணைக்கு அடுத்த வாரிசாக அமைந்தார். அதற்குத் தக்க முறையிலேயே அவர் வளர்க்கவும் பெற்ருர்.

வளர்ந்து வரும் பருவத்தில் இப்பிள்ளை பேஷ்வாக்களின் தலைமையில் மகாராஷ்டிரம் அடைந்த பெருமை வரலாற்றினைப் படித்தனன். அப்போது மனம் மிகவும் வருந்தியது. பேஷ்வா பாலாஜி பாஜீராவின் சீரிய தலைமையில் மராட்டியரது ராஜ்யம் அரபிக் கடலில் துவங்கி கிழக்கே வங்காள விரிகுடா வரை பரவியிருந்த அந் நாட்களெங்கே? அப்போது வங்காளத்திலிருந்து மட்டும் ஆண்டுதோறும் கப்பமாகப் பன்னிரண்டு லட்சம் ரூபாய் கிடைத்து வந்தது.

இப்போது பேஷ்வா பாஜீராவ் தமது ராஜ்யம் முழுவதையுமே ஆங்கிலேயருக்குத் தத்தம் செய்துவிட்டு, எட்டு இலட்சம் ரூபாய்ப் பென்ஷனுடன் பிட்டூரிலே வந்து வசிக்கும் இந் நிலை எங்கே? இது சுவீகாரத் தந்தை பாஜீராவிற்கு மிகப் பெரிய களங்கமாயிற்றே. தமது உயிரையே அர்ப்பணித் தாவது இந்த மாசைத் துடைத்துவிட வேண்டுமென நாணு தமது மனத்திலே நிச்சயித்துக் கொண்டார்.

நாணுவின் துணைவர்களாக இருந்தனர் ராணி லக்ஷ்மீ பாயும், தாத்யா டோபேயும். இம் மூவருமாக ஆங் கிலேயருடன் போரிட்டு அவர்களை நாட்டைவிட்டே துரத் தும் வழியை எண்ணி வந்தனர்.

கி. பி. 1851-ல் இரண்டாம் பாஜீராவ் பேஷ்வா இறந்து விட்டார். இறக்குமுன்பு அவர் தமது சொத்து, பென்ஷன் ஆகியவற்றுக்கு நாணுவை உரிமையாளராக்கி எழுதி வைத்திருந்தார். ஆனல், ஆங்கிலேயர்கள் பேஷ்வா வின் பென்ஷன் பணத்தைப் பெற நாணுவைத் தகுதி வாய்ந்தவரெனக் கருதவில்லை. நாணுவுக்குப் பென்ஷன் கிடைத்திருந்தாலுமே அவர் ஆங்கிலேயருடன் சண்டை யிடாமலிருந்திரார். இப்போது பென்ஷனும் நின்று விடவே அவரது சீற்றம் வலுத்தது. முழு மூச்சுடன் ஆங்கிலேயரை எதிர்த்துப் போராட இவர் திட்டம் வகுக்க லானர். இவ் விஷயத்தில் அவசரக் கோலமாக எதுவும் செய்ய அவர் விரும்ப வில்லை. அதனல், ஒரு பக்கம் பென் ஷன் சம்பந்தமான கோரிக்கைகளை விடுத்துக் கொண்டிருந் தார். மறுபுறம் தமது ஆயத்தத்தில் முனைந்தார்.

ஆங்கில அதிகாரிகளிடம் தமது வழக்கை எடுத் துரைப்பதற்காகத் தமது வக்கீல் அஜீமுல்லாவை அவர்

இங்கிலாந்திற்கு அனுப்பி வைத்தார். அவர் கொடுத் தனுப்பிய கடிதத்தில், எட்டு இலட்சம் ரூபாய் பென்ஷன் பெறும் உறுதிமொழியிலேதான் பாஜீராவ் தமது ராஜ்யம் முழுவதையும் கம்பெனியிடம் ஒப்படைத்திருப்பதாகக் குறிப் பிட்டிருந்தார். எனவே, இந்தப் பென்ஷன் நிலையாக அளிக்கப்படவில்லையெனில் ராஜ்யத்தின் ஆட்சியிலும் கம் பெனிக்கு எந்தவித உரிமையும் இல்லாமல் போய்விடும் என்பதையும் அறிவித்தார். ஒப்பந்தமென்றால் இரு தரப் பாரும் அனுசரித்து நடக்க வேண்டும்; அதுவே நேர்மை யாகும். ஒரு தரப்பினர் ஒப்பந்தத்தை அனுசரிக்க வேண்டும் மறு தரப்பினர் அனுசரிக்க வேண்டாம் என்பது எவ்வாறு நீதியாகும் என்று வினவினர்.

'பென்ஷனை நீங்கள் நிறுத்திவிட்டால் நானா, பேஷ் வாவின் ராஜ்யத்தைப் பெறுவதற்குக் கட்டாயம் போரிடு வார்' என்பது அக் கடிதத்தின் உட்பொருள். ஆங்கிலே யரோ தமது ராஜ்யம் வேரூன்றி விட்டதால் நானாவினால் என்ன செய்ய முடியும் என்று எண்ணினர். எனவே இக் கடிதத்தை அவர்கள் பொருட்படுத்தாமல் அவரது வேண்டு கோளை மறுத்தளித்து விட்டனர்.

ஆனால், நானா சாகிப் இதனைப் பொருட்படுத்தவு மில்லை, நம்பிக்கையிழக்கவுமில்லை. அவர் பேஷ்வாவுக் குரிய ஆடம்பரங்களைச் சிறிதும் குறைத்துக் கொள்ள வில்லை. பிட்டூரில் தமது அரண்மனையில் சர்வவல்லமை வாய்ந்த சக்கரவர்த்தி போன்றே அமர்ந்திருந்தார். அவரது மாளிகை எல்லா அலங்காரங்களுடனும் விளங் கிற்று. அவரது அலுவலறையில் சத்ரபதி சிவாஜி, முதலா வது பாஜீராவ், மாதவராவ், நானா பட்நவீஸ் முதலிய அரசி யல் அறிஞர்களது படங்கள் மாட்டப்பட்டிருந்தன. அவர்

களது பாதையிலேதான் நாணுவும் செல்ல வேண்டியவர் என்பதைச் அச் சித்திரங்கள் போதித்துக் கொண்டிருந்தன. நாணுவின் கிரீடத்திலே வைரங்கள் பதிக்கப்பெற்றிருந்தன. அவர் விலையுயர்ந்த பீதாம்பரங்களை உடுத்திவந்தார். இரத்தின மயமான ஆபரணங்களால் அவரது மேனி ஒளிவீசிக் கொண்டிருக்கும். அவரது ஒளிமிக்க முகத்தினையும் சிங்கக் கண்களையும் கண்டதும், ஆங்கிலேய உயரதிகாரிகளின் சிரங்கள் தாமாகவே தாழ்ந்தன.

•

பேஷ்வாவின் அரியணைமீது அமர்ந்திருந்தவாறே பாரதம் முழுவதிலும் ஆங்கிலேயருக்கு எதிரான போராட்டப் பிரசாரத்தை அவர் நடத்தி வந்தார். ஹிந்து-முஸ்லிம் மதத் தலைவர்கள் வாயிலாக மக்களிடையேயும், தமது நம்பிக்கைக்குரிய தூதுவர்கள் வாயிலாக மற்ற அரசர்களிடையேயும், ஆங்கில அரசாங்கத்தை எதிர்த்து ஒற்றுமையுடன் திரண்டெழ வேண்டும் என்ற உணர்ச்சியை அவர் பரப்பி வந்தார். ரொட்டியும் தாமரை மலர்களும் புரட்சிக்குரிய சின்னங்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டன. கிராமங்கள் தோறும் இச்சின்னங்கள் தென்படலாயின. ஒரு ரொட்டி பெற்றவன், அதுபோன்ற பல ரொட்டிகளைத் தயாரித்து மற்றும் பலருக்கு அனுப்பி வந்தனர். போர், மரணம் இரண்டுக்கும் தயாராகுங்கள் என்பதே இதன் உட பொருள்.

பாரதம் முழுவதுமே புரட்சித்குத் தயார் என்ற நம்பிக்கை பிறந்த பின்னரே, அவர் அதற்கோர் இறுதியுருவம் அமைப்பதற்காகத் தீர்த்த யாத்திரை என்ற சாக்கில் தாமே புறப்பட்டார். அவருடன் வழக்கறிஞர் அஜீமுல்லாவும் இருந்தார்.

1857 ஏப்ரல் 17-ம் தேதி நடந்த செய்தி: ஆக்ரா வில் இருந்த மோர்லண்டு என்ற ஆங்கில நீதிபதியொரு வர் நானுவைச் சந்திக்க வந்தார். நானு அளித்த வரவேற் பினைக் கண்ட நீதிபதியினுல் அவரது மனநிலை யாதென் பதைச் சிறிதும் புரிந்துகொள்ள இயலவில்லை. தமது தீர்த்த யாத்திரையின் போது, நானுசாகிப் தில்லி சென்று பகதூர்ஷாவையும் சந்தித்தார். முகலாய வம்சத்தின் இறுதிப் பாதுஷாவையும், அவரது ராணி ஜீனத் மஹலையும், மே, 31-ம் தேதி ஆங்கிலேயருக்கு எதிராகப் புரட்சிக் கொடி தூக்குமாறு தூண்டிவிட்டார். தில்லியில் ஏற்பாடுகளனைத் தையும் செய்துவிட்டு, நானு அம்பாலா சென்றுர். அம் பாலாவிலிருந்து லக்னே சேர்ந்தார். லக்னேவின் சாலை களிலே அவருக்கு ஊர்வலம் நடத்தப் பெற்றது. குதிரை வீரர்கள், ஒட்டகங்கள், காலாட்படைகள், மக்கள் ஆகியோர் உடன் வர அவர் யானை மீதமர்ந்து ஊர்வலம் வந்தார். கலகம் செய்வதற்கு மக்கள் துடித்துக் கொண்டிருந்தனர். அன்றைய தினமே ஆங்கிலப் பிரதம கமிஷனரின் ஸாரட் டின்மீது மக்கள் கல்லெறிந்தனர். லக்னேவிலிருந்து நானு கால்பிக்கு வந்தார். இங்கு அவர் பீஹாரின் புரட்சித் தலை வரான மாவீரர் குமார சிங்கைச் சந்தித்தார். ஏப்ரல் மாத இறுதியில் அவர் பிட்டூர் திரும்பினுர். புரட்சி மே 31-ம் தேதி துவங்க விருந்தது. ஆனுல், இந்தியப் படைகள் பொறுமையிழந்து வந்தன. இதன் மத்தியில் மாமிசப் பிளிச்சை தடவிய தோட்டாச் சரங்கள் சிப்பாய்களுக்கு ஆங்கிலேயர்களால் வினியோகிக்கப்பட்டன. பல்லால் கடித்தே தோட்டாக்களைத் திறக்க வேண்டியிருந்தது. சிப்பாய்கள் இதனைத் தமது மதத்திற்கு இழைக்கப்படும் அவமதிப்பு என்று கருதி கொதித்தெழுந்தனர். முன்பு

நிர்ணயித்தபடி மே 31-ம் நாள் வரை அவர்களால் சகித்துக் கொண்டிருக்க இயலவில்லை. அவர்கள் மீரட்டில் மே 10-ம் தேதியே கலகம் செய்யத் துவங்கி விட்டனர். அவர்கள் ஆங்கிலேயரது வீடுகளைக் கொளுத்தினர், கொலைகளையும் புரிந்தனர். இதைத் தொடர்ந்து தில்லி, லக்னோ, அம்பாலா ஆகிய இடங்களிலும் கொலைப்படலம் ஆரம்பித்து விட்டது.

கான்பூரிலிருந்த ஆங்கிலேயர்கள் இன்னமும் நானாவைத் தங்கள் நண்பராகவே எண்ணிவந்தனர். தங்கள் குதிரைப் படையினர், காலாட் படையினர் ஆகியோரின் போக்கைக் கண்ட ஆங்கிலேயர் நானாவிடம் உதவி கோரினர். நானாவும் தமது 300 சிப்பாய்களுடன் அங்கு வந்து அரசாங்கப் பொக்கிஷத்தைக் காத்து ஆங்கிலேயரிடம் ஒப்படைத்தார். எனவே, நானா மிக ரகசியமாகச் செய்திருந்த புரட்சித் திட்டத்தை, அப்போதும் ஆங்கிலேயர்கள் புரிந்து கொள்ள முடியவில்லை. தில்லியில் கலகம் துவங்கியது என்ற செய்தி எட்டியதும், கான்பூரிலும் துவங்கி விட்டது. ஆங்கிலேயர் தங்கள் மனைவி மக்களுடன் படகுகளில் ஏறித் தப்பியோடினர். ஆனால், சிப்பாய்கள் இப்பகுதிகளின் மீதும் குண்டு போட்டனர். அதனால் ஒரு சில ஆங்கிலேயரே உயிர் தப்பினர். கான்பூரில் ஆங்கில ஆட்சியின் அறிகுறிகள் யாவும் மிச்சமின்றி ஒழிந்தபின்னர் நானா அரசவை கூட்டினார். அவரைக் கௌரவிக்க இருபத்தோரு பீரங்கி வேட்டுகள் சுடப்பட்டன. இவ்வாறு தமது தோள் வலிமையினால் பேஷ்வாவின் அரியணையிலே அவர் அமர்ந்தார்.

ஆனால், காலம் அவருக்குத் துணை செய்யவில்லை. நாற்புறமிருந்தும் ஆங்கிலப்படைகள் அவரை நோக்கி

வந்தன. அவரது வலிமையும் குன்றி வந்தது. அவர் கான்பூரை விட்டுச் செல்ல நேர்ந்தது. சுமார் ஓராண்டு முழுவதும் ஆங்கிலேயருடன் போரிட்டுக் கொண்டு, புதிய புதிய படைவகுப்புகளைத் தயாரித்தார். சில சமயம் பின் வாங்கவும் செய்தார். இறுதியில் காலம் மாறி விட்டது என்ற உண்மையை அவர் உணர்ந்து கொண்டார். எனவே, எஞ்சிய சில போர் வீரர்களை உடன் அழைத்துக் கொண்டு நேபாளத்தின் காடுகளுக்குள் மறைந்தே போய் விட்டார். அதன் பின் அவர் எங்கு சேர்ந்தார், அவருக்கு யாது நேர்ந்தது என்பதை யாருமே அறிய இயலவில்லை.

நானா சாகிப் பேஷ்வா ஓர் உண்மையான தேச பக்தராக விளங்கினார் என்பதையும், தம் தாய் நாட்டின் விடுதலைக்காக அவர் தமது உடல், உயிர், செல்வம் யாவற்றையுமே அர்ப்பணித்து விட்டார் என்பதையும் தெரிந்து கொள்கிறோம். ஆங்கிலேயரது பெண்களையும் குழந்தைகளையும் யாரும் துன்புறுத்தக் கூடாதென அவர் கட்டளையிட்டிருந்தார். முதலில் ஆங்கிலேயரைப் பாரதத்தை விட்டு விரட்டிவிட வேண்டும் என்பதும், பின்பு இந்திய ஐக்கிய சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க வேண்டும் என்பதுமே அவரது இலட்சியமாகும்.

தமது தியாகத்தின் வாயிலாக அவர் இந்திய மக்கள் அனைவரது மனங்களிலும் சுதந்திரக் கனலை மூட்டினார். அந்த அக்கினி உள்ளூறக் கனிந்துக் கொண்டேயிருந்தது. இறுதியில், ஆங்கிலேயர் நாட்டை விட்டுச் செல்லவே நேர்ந்தது.



## சையத் அகமத் கான்

நமது நாட்டில் கல்வியைப் பரப்பி; சமூகச் சீர் திருத்தப் பணியை முன்னேற்றிய பெரியார்களுள் சையத் அகமத்கானும் ஒருவராவார். தில்லி நகரத்தில், மத நம்பிக்கையும் செல்வாக்கும் பெற்ற குடும்பத்திலே 1817 அக்டோபர் 17-ந் தேதி அவர் தோன்றினர். மீர் முத்தகி என்ற பெயர் கொண்ட இவரது தந்தையார், ஹஜரத் முகம்மதுவின் பரம்பரையைச் சார்ந்தவர். மீர் முத்தகியின் முன்னேர்கள் உமய்யாக்களின் கொடுமையினுல் முதலில் ஈரானிலும், பின்னர் அங்கிருந்து ஆப்கானிஸ்தானத்திலும் வந்து குடியேறியிருந்தனர். இந்தக் குடும்பம் பாதுஷா ஷாஜஹான் காலத்தில் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தது என ஊகிக்கப் படுகிறது. அப்போதிருந்து இக்குடும் பத்தைச் சார்ந்தோர் முகலாய அரசவையிலே மிகப் பெரிய பதவிகளில் பணியாற்றி வந்தனர். ஆனுல், சையத் அகமத்

கானின் தந்தையார் உலக அனுபவக் குறைவின் காரண மாக மிகவுயர்ந்த பதவியை அடைய இயலாமற் போயிற்று.

சையத் பிறந்த காலத்தில் தில்லியின் நிலை எவ்வளவோ மாறுதலடைந்திருந்தது. கி. பி. 1803-ல் வெல்லெஸ்லி பிரபு தில்லியைக் கைப்பற்றியிருந்தார். ஆட்சி அதிகாரம் முழுவதையும் ஆங்கிலேயர்கள் கைப்பற்றி விட்டனர். ஆயினும், செங்கோட்டையினுள் முகலாய பாதுஷா ஷாஆலம் தமது ஆடம்பரங்களுடன் தர்பார் நடத்த அனுமதி அளித்திருந்தனர். ஷா ஆலத்திற்குப் போதிய பணமும் அளிக்கப்பட்டது. எனவே அவர் வெளிப் பகட்டுகளை விடாமல் வைத்துக் கொள்ள முயன்றார்.

புராதன முகலாய ஆட்சியின் சிறப்பின் வெளித் தோற்றமும், எங்கும் பரவி வந்த ஆங்கில ஆட்சிப் பிடிப்பும் கலந்து நின்ற தில்லி நகரிலே சையத் அகமத் கானின் இளமைப் பருவம் கழிந்தது. அவர் தமது தந்தையாருக்குப் பதிலாக முகலாய தர்பாரில் ஆஜராகும் வாய்ப்புகளைப் பெற்றார். இதனால் அவர் முகலாய அரசவையின் நடை முறைகளை நன்கு தெரிந்து கொண்டார்.

இளமையில் சையத் மிகப் புத்திசாலியான மாணவரா யிருந்தார் என்று கூற முடியாது. மற்ற மாணவர்களை விட தமது படிப்பின் தரம் குறைந்துதானிருந்தது என்பதை அவரே ஒப்புக் கொண்டிருக்கிறார். ஆனால் உடல் வலிமை யிலே அவர் மற்ற எல்லா மாணவர்களையும் விட மிக மேம் பட்டவராயிருந்தார். நீந்துவதிலும், வில்வித்தையிலும் சையத் பயிற்சி பெற்றிருந்தார். இவ்விரண்டு பயிற்சிகளை யும் அவர் தமது தந்தையாரிடமிருந்து பெற்றார். குரான்

வேதத்தையும் சிறிது கற்ருர். பின் ஒரு பள்ளியில் சேர்ந்து பாரசீகம், அரபி ஆகிய மொழிகளேயும் பயின்ருர்.

சையத்தின் பிள்ளேப் பிராய வாழ்க்கையை உருவாக்கியவர்களுள் முக்கியமானவர் அவரது. தாயார்தான். அவ்வம்மை உயர்ந்த குடியிலே தோன்றியவள். அவள் பாரசீகப் பண்பாட்டையும், முஸ்லிம் கலாசாரத்தையும் நன்கு உணர்ந்திருந்தாள். சையத்தை அவள் தனது கண்டிப்பான மேற்பார்வையில் வளர்த்து வந்தாள். தமது அன்ஃனயைப் பற்றிய ஒரு நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு சையத் இவ்வாறு எழுதுகிருர்: "அப்போது எனக்குப் பதினேரு வயது இருக்கும். ஏதோ ஒரு விஷயத்தில் நான் எங்களது கிழட்டு வேஃலக்காரஃனக் கேலி செய்து சிரித்தேன். எதிர்பாராதவிதமாக இதை என் அன்ஃனயார் கண்டுவிட்டார். அவர் கோபித்துக் கொண்டு என்ஃன வீட்டைவிட்டு வெளியேற்றி விட்டார். மூன்று நாட்கள் வரை சிற்றன்ஃனயின் வீட்டிலே இருந்தேன். அந்த வேஃலக்காரனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்ட பின்புதான் அன்ஃனயார் என்ஃன வீட்டில் நுழைய விட்டார்."

சையத் அமகத் கானின் பத்தொன்பதாவது வயதில் அவரது தந்தையார் காலமாகிவிட்டார். இதனுல் குடும்பப் பொறுப்பு அவர் மீது விழுந்தது. அவரும் தந்தையைப் போன்று அரசவையில் உத்தியோகம் பார்க்க வேண்டுமெனக் குடும்பத்தினர் விரும்பினர். ஆனுல் சையத்தோ கம்பெனி அரசாங்கத்தினரிடம் வேஃல பார்க்க விரும்பினுர். உலக நடை முறைகளில் அவர் நல்ல திறமை பெற்றிருந்தார். முகலாய சாம்ராஜ்யத்தின் செல்வாக்கு மூழ்கிவிட்டதென்பதை அவர் புத்திசாலித்தனத்தினுல் அறிந்து

கொண்டார். சையத் கானின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய மௌலானா ஹாலி இதுபற்றிக் கூறுகிறார்: "சையத் அகமத்கான் அரண்மனைச் சூழ்நிலையிலே வளர்ந்தவர். எனவே அவர் முகலாய அரசர்களது ஆட்சியை விரும்பவில்லையென்பது இயல்புதான். ஆனால், அவரது அறிவு கூர்மையானது. முகலாயப் பேரரசு மங்கிவிட்டது இயற்கையானது என்று அவர் கருதவில்லை. ஆட்சி நடத்தும் சக்தியை அது இழந்துவிட்டது என்பதையும் அவர் உணர்ந்து கொண்டார்."

சையத்துக்கு கம்பெனி சர்க்காரின் தில்லி நீதி மன்றத்தில் சரிஸ்தேதார் பதவி முதலில் கிடைத்தது. ஆங்கிலக் கோர்ட்டுகளில் வழக்கு நகல்களை இந்திய நாட்டு மொழியில் எழுதி வைத்துக் கொள்பவர்க்கு சரிஸ்தேதார் என்று பெயர். சில ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் ஆக்ரா ஜில்லாவில் பதேஹ்புர் ஸீக்ரியில் முனிசீப் பதவியில் நியமிக்கப்பட்டார். நாணயமும், உழைப்பும் கொண்ட அதிகாரியாக சையத் இருப்பினும், போதிய ஆங்கில மொழியறிவு இல்லாமை காரணமாக அவர் அரசாங்க உத்தியோகத்தில் சிறிய கோர்ட்டின் முனிசீப் பதவிக்கு மேல் உயர்வு பெற இயலாது போய்விட்டது.

1857-ஆம் வருஷ எழுச்சியினால் நாடு முழுவதிலும் குழப்பம் பரவியது. இப்புரட்சியை இந்துக்களும் முகம்மதியர்களும் இணைந்தே நடத்தினர். இரு தரப்பாருமே பகதூர் ஷாவை மறுபடியும் தில்லிப் பேரரசராக்க விரும்பினர். ஆனால், அப்புரட்சி வெற்றி பெறவில்லை. பகதூர்ஷாவே நாடு கடத்தப்பட்டார். முகலாய ஆட்சியும் அடியோடு முடிந்து விட்டது.

புரட்சிக் காலத்தில் சையத் அகமத் கான் பிஜ் நோரின் முனிசீப்பாக வேலைபார்த்து வந்தார். அதுவரை அவர் இருபது ஆண்டுகள் அனுபவம் எய்திவிட்டார். அவர் மிக்க நன்றியுணர்வுடன் ஆங்கிலேயரின் உயிரையும் உடைமையையும் பாதுகாத்தார். எனினும் சையத் ஆங்கி லேயரது அடிவருடியாக இருக்கவில்லை. ஆங்கிலேயரது வெற்றிகளையும் கண்டு பிடிப்புகளையும் அவர் பாராட்டி வந்தார். ஆங்கிலக் கல்வியும் அவசியமெனக் கருதினார். ஆங்கிலேயருக்கும் இந்தியருக்கும் இடையே பரஸ்பர நல்லெண்ணம் இன்மையாலேயே அப்புரட்சி விளைந்தது என்று அவர் கருதினார். பின்னர் இது பற்றி அவர் ஒரு புத்தகமும் எழுதினார். சையத்தின் மனத்தில் புரட்சியால் விளைந்த பயன் யாது என்பதை ஹாலி பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

"எவ்வாறு சூரிய வெப்பத்தினால் நீர்ப்பரப்பின் மட்டம் சிறிது உயர்ந்து விடுகிறதோ அதே போன்று புரட்சியினால் அவரது இரத்தத்தின் கொதிப்பு மிகவும் அதிகமாகி விட்டது."

1857-ஆம் வருஷப் புரட்சிக்குப் பின்னர் ஆங்கில அரசாங்கம் முஸ்லிம்களைத் தனது பகைவராக எண்ணியது என்று சில வரலாற்று ஆசிரியர்கள் எழுதுகின்றனர். எத்தனையோ முஸ்லிம் குடும்பங்கள் கொடுமைக்குள்ளாயின. சீரும் செழிப்பும் கொண்ட எத்தனையோ குடும்பங்கள் அடியோடு அழிந்துவிட்டன. முஸ்லிம் மதகுருமார்கள் பிரிட்டிஷ் ஆட்சியை எப்போதுமே ஏற்க இசையவில்லை. அதுவரை இந்துக்களும், முஸ்லிம்களும் தமது மதங்கள் வேறுபட்டிருந்தாலும் தேசிய ஐக்கியத்திற்காக உழைத்து

வந்தனர். முதலில் சையத்துங்கூட அவ்வாறேதான் எண்ணியிருந்தார். ஒரு அழகியின் இரு கண்கள் போன்றவை இவ்விரு மதங்களும் என்று அவர் கருதினர்; இவ்விரண்டில் ஒன்று போனாலும் கூட பெரிய நஷ்டம் என்று சொல்லியும் வந்தார். ஆனல் பிற்காலத்தில் சையத்தின் மனப்பான்மை மாறிவிட்டது. முஸ்லிம்கள் காங்கிரஸை விட்டுத் தனித்துப் போகும் கொள்கைக்கு ஆதிக் காரணம் அவர்தான் என்றும் கூறப்படுகிறது.

கி. பி. 1866-ல் சையத் மகம்மது அலிகாருக்கு மாற்றலாகிச் சென்ருர். பிற்காலத்தில் இங்குதான் அவரது திட்டங்கள் உருவாகி நிறைவேறின. அலிகார் போய்ச் சேர்ந்து நான்கு ஆண்டுகளுக்குப் பின்னர், அவர் தமது இரு புத்திரர்களுடனும் இங்கிலாந்து சென்ருர். 1876-ல் அரசாங்க உத்தியோகத்தினின்றும் ஓய்வு பெற்ருர். ஓய்வு பெற்ற பின் அவர் ஜீவித்திருந்த இருபத்திரண்டு வருடகாலமும் மிகுந்த ஊக்கத்துடன், அயராது உழைத்து வந்தார். முகம்மதிய சமுதாயம் இழிநிலை அடைந்திருந்ததைக் கண்டு அவர் மனம் மிக்க துயருற்றது. முஸ்லிம்கள் எதிலும் நம்பிக்கை என்ற போர்வையைப் போர்த்திக் கொண்டு விட்டனர், எனவே இனிச் செய்யப்படவேண்டிய கடமை எதுவும் இல்லை என்று அவர்கள் எண்ணுவதாக சையத் கூறுவார். இதனை அவர் ஒரு பெருங்குற்றமாகக் கருதினர்.

முஸ்லிம் சமூகத்தின் இழிவைத் தடுப்பதில் அவர் தமது ஆற்றல் முழுவதையும் செலவிட்டார். அவருடைய ஆங்கிலேய நண்பர் ஒருவர் இவ்வாறு கூறுகின்ருர்: "ஒரு சமுதாயம் முழுதும் அடைந்துள்ள தாழ்வைத் தடுக்கும்

சுவராக எழும்பி நிற்றல் என்பது, ஒரு தேவதூதனது செயலே தவிர சாதாரண மனிதரின் செயலல்ல.''

... சையத் முஸ்லிம்களின் நிலையைச் சீர்திருத்துவதற்கு ஆங்கில மொழியையும், ஆங்கிலக் கருத்துக்களையும் பரப்புவது அவசியமென்ற முடிவுக்கு வந்தார். இது சம்பந்தமாக அவர் பல முயற்சிகள் எடுத்துக் கொண்டார். 'அலிகார் விஞ்ஞானக் கழகம்' என்ற பெயரிலே ஒரு மொழி பெயர்ப்புக் கழகத்தை நிறுவினார். 'தஹ்ஜீப்-உல்-அக்லாக்' என்ற மாதாந்தரப் பத்திரிக்கையைத் துவக்கினார். அலிகாரிலேயே அவர் 'முகம்மதிய ஆங்கிலோ ஓரியண்டல் கல்லூரி' ஒன்றையும் ஏற்படுத்தினார். இதுவே வருங்காலத்தில் 'முஸ்லிம் பல்கலைக் கழகமாக' வளர்ச்சியுற்றது.

சையத் பற்பல நூல்களையும் எழுதினார். அவரது நூல்களின் தொகுப்பு சுமார் 6,000 பக்கங்கள் கொண்டது. பலவகை விஷயங்கள் பற்றி அவர் எழுதினார். அரசியல், கல்வி சம்பந்தமாக அவர் எழுதிய பல கட்டுரைகள் உள்ளன.

தமது வாழ்நாளிலேயே அவருக்கு மிகுந்த பெயரும் புகழும் கிடைத்தன. வைசிராய் லார்டு லாரென்ஸ் அவருக்குத் தங்கப் பதக்கம் அளித்தார்; 'ஸர்' பட்டமும் சூட்டப்பட்டது. சட்டமன்றத்தின் மேல் சபை அங்கத்தினராகவும் அவர் நியமிக்கப்பட்டார். மேலும், கல்விக் கமிஷனது ஓர் அங்கத்தினராகவும் அவர் பணி புரிந்து வந்தார்.

சையத் அகமத் கான் எவ்வாறு காங்கிரஸ் கட்சியிலிருந்து மிகத் தொலைவில் விலகி நின்றார் என்பதுபற்றி, டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் தமது 'பிளவுபட்ட பாரதம்'

என்ற நூலில் எழுதியுள்ளார்: "காங்கிரஸ் மகாசபையின் மூன்ருவது மாநாடு கூடும் சமயத்திலேயே, லக்னேவில் முகம்மதியக் கல்வி மகாசபையும் கூடிற்று. இதன் பின்னர் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் சையத் கான் முதலில் தடவையாக காங்கிரஸை எதிர்த்துச் சொற்பொழிவாற்றினர். அதுமட்டுமல்ல, மேல்சபை அங்கத்தினர்களைத் தேர்தலின்றி நியமனம் செய்யவேண்டும் என்றுகூட வற்புறுத்திக் கூறினர். தேர்தல் மூலம் வந்தால் மிகச் சாதாரண மனிதர்களுங்கூட அங்கத்தினராகிவிடுவர், அவர்களை வைசிராய் பிரபு 'எனது மதிப்புக்குரிய தோழரே' என்று அழைக்க நேரும்; தகுதியற்றவர்களை எவ்வாறு அவர் அங்ஙனம் அழைக்க முடியும்? மேலும் பெரும் பட்டதாரிகளாயிருப்பினும் அம் மனிதர்களை அரசர்களும், பெருந் தனிகர்களும் கலந்து கொள்ளும் விருந்து முதலியவற்றில் எவ்வாறு ஒன்ருக அமர்த்த இயலும்? இவ்வாறு அவர் விவாதித்தார். அவர் ஐ. சி. எஸ். பரீட்சையை இங்கிலாந்திலும் இந்தியாவிலும் ஒரே சமயத்தில் நடத்துவதையும் ஆட்சேபித்தார். ஏனெனில், இங்கிலாந்து தேசத்தில் எந்தக் குடிமகனும், பெருந்தனவந்தனுயினும் சரி, ஒரு தையற்காரனுயினும் சரி அதில் கலந்துகொள்ள முடியும்; ஆயினும் இந்தியாவில் இதைப்பற்றிய அறிவு இன்மையால் அம்மனிதனது ஆட்சியை ஏற்க நேரிடும் அல்லவா? ஆனல், இந்தியாவில் நற்குடிப் பிறந்த மனிதர்கள் அம் மாதிரி தாழ்ந்த வகுப்பிலிருந்து வந்தவனின் அதிகாரத்திற்கு உட்படச் சம்மதிக்க மாட்டார்கள். அவர்கள் அவனது குடும்ப அடிப்படை விஷயங்களை நன்கு உணர்ந்தவரன்றே? தியோடர் மாரீஸன் என்பவர் அலிகார் கல்லூரியின் வரலாற்றிலே எழுதுகிறர்: 'சையத் அகமத்

கானின் காரணமாகவே, அவரது பேச்சின் பயனுகவே முஸ்லிம் மக்கள் காங்கிரஸை கட்டோடு விட்டுவிட்டனர்; இந்தியாவில் பிரதிநிதித்துவக் கழகங்களை நிறுவுவதைப் பெரிதும் எதிர்த்தனர்!' அவர் எழுதியுள்ளதில் ஆச்சரியப் பட ஏதும் விஷயமில்லை அல்லவா?"

கி. பி. 1898-ல், எண்பத்தோரு வருடங்கள் பூரண மாக வாழ்ந்து விட்டு சையத் இவ்வுலகை நீத்தார். அவரது அரசியல் கருத்துக்கள் எங்ஙனமிருப்பினும் சரி; அவர் ஒரு கரும வீரராகவும், அஞ்சா நெஞ்சினராகவும், ஒளிவு மறை வற்ற பேச்சாளராகவும் விளங்கினுர் என்பதில் ஐயமில்லை.



## ஈசுவர சந்திர வித்தியாசாகர்

இப்பெரியார் கி. பி. 1820-ல் வங்காளத்தின் மேதினி பூர் ஜில்லாவைச் சேர்ந்த வீரசிம்மம் என்ற கிராமத்தில் உதித்தார். இவரது தந்தையாரின் பெயர் டாகுர்தாஸ் பண்டோபாத்தியாயர் என்பதாகும், தாய் பகவதி தேவி.

ஒரு தடவை படித்தவுடனேயே பாடங்கள் இவரது மனதில் உறுதியாகப் பதிந்தன. தமது பதினேராவது வயதிலேயே இவர் இலக்கணப் பரீட்சையில் தேர்வு பெற்று,

இலக்கிய வகுப்பில் பயிலத் துவங்கினர். இவ்வகுப்பு மாணவர்களில் இவரே முதல்வராயிருந்தார்; உபகாரச் சம்பளமும் இவருக்குக் கிடைத்துவந்தது. பதினருவது வயதிலே அலங்கார சாத்திரத்திலும் தேறிவிட்டார். அதன் பின், வேதாந்தம், தரும சாத்திரங்கள், தத்துவ சாத்திரங் கள் முதலியவற்றில் பரிசுகளுடன் தேர்வு பெற்றுவந்தார். அவர் பல விஷயங்கள் பற்றிய நூல்களை மனப்பாடம் செய்துவிடுவார். இவரது புலமையைக் கண்டு இவருக்கு 'வித்யாசாகர்' (கல்விக் கடல்) என்ற பட்டம் சூட்டப்பட்டது. அதன்பின் இவர் ஈசுவரசந்திர வித்தியாசாகர் என்றே அழைக்கப்பட்டு வந்தார்.

ஈசுவர சந்திரர் கல்விக் கடல் மட்டுமல்லர், கருணைக் கடலாகவும் திகழ்ந்தார். ஒரு தடவை அவரது இளமைப் பிராயத்தில் பையன் ஒருவன் அவரிடம் ஓர் அணு கேட்டான். அவர் அவனிடம் பின்வருமாறு கேட்டார்: "நான் உனக்கு ஒரு ரூபாய் கொடுத்தால் என்ன செய்வாய்?"

"விற்பதற்காக நாலணுவிற்குப் பொரி வாங்கிக் கொள்வேன், நாலணுவிற்குக் கடலை வாங்குவேன். மீதியுள்ள எட்டணுவிற்கு எங்களது குடும்பம் முழுவதும் இரண்டுவேளை உணவு சாப்பிடமுடியும்."

பையன் கூறிய உண்மையான பதிலைக் கேட்டதும் வித்யாசாகர் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்; அவனுக்கு ஒரு ரூபாய் கொடுத்தார். அப்பையனும் பெரு மகிழ்வுடன் துள்ளியோடிச் சென்றான்.

இதன் பின்னர் எத்தனையோ ஆண்டுகள் கழிந்து

விட்டன. ஒரு நாள் வித்யாசாகர் கடை வீதியில் சென்று கொண்டிருந்தபோது, திடீரென ஒரு மனிதன் வந்து அவரது பாதங்களைத் தொட்டுக் கும்பிட்டுவிட்டுக் கூறினுன்: "அன்னமிட்ட பிரபுவே, தாங்கள் எனது வீட்டிற்கு அவசியம் வருகை தரவேண்டும். தங்களது கருணையினுல் தான் நான் பெரிய வியாபாரி ஆகியுள்ளேன். தங்களை நன்கு அடையாளம் கண்டு கொண்டேன். அதே சிறிய திருவுருவம், அதே உடை."

அப்போது வித்தியாசாகர் கூறினுர்: "ஐயா! உம்மை எனக்குத் தெரியவில்லையே. நீர் யாரென நீரே எடுத்துரையும். நான் என்றும் யாருக்கும் ஏதும் கொடுக்க வில்லையே."

"ஐயா! நீங்கள் அன்று அளித்த ஒரு ரூபாயினுல் நான் ஒரு பெட்டிக் கடை வைத்து, சிறுகச் சிறுக உயர்வு பெற்று இவ்வளவு பெரிய வியாபாரியானேன்."

பிறகு அவன் அவரை மிகவும் வேண்டி தனது வீட்டிற்கு அழைத்துச் சென்ருன்.

ஈசுவர சந்திரர் தமது கல்விப் பயிற்சி முடிவுற்றதும் ஆசிரியர் தொழிலில் இறங்கினுர். முதன் முதலில் அவர் போர்ட் வில்லியம் கல்லூரியிலே 50 ரூபாய் மாதச் சம்பளத்தில் வேலை பார்த்தார். அந்தக் கல்லூரியில் வடமொழி, வங்காளி இரண்டும் படிப்பதற்காக ஐரோப்பாவிலிருந்துங் கூட மாணவர்கள் வந்தனர். ஈசுவர சந்திரர் ஆங்கில மொழியையும் நன்கு அறிந்திருந்தார். அவர் இரக்கச் சித்தமும் பரோபகார குணமும் நிறைந்தவர். அவர் வேண்டிக்கொண்டபடி ஹார்டிஞ்சு பிரபு வங்காள மாகாணத்

தில் சுமார் 100 பள்ளிகளை ஏற்படுத்தினார். ஈசுவர சந்திர ரிடம் தியாக மனப்பான்மை நிறைந்து விளங்கியது. அவர் ஐம்பது ரூபாய் பெற்று வேலை பார்த்து வந்த காலத்தில் அதே கல்லூரியில் 200 ரூபாய் மாதச் சம்பளத்திற்கு ஒரு பதவி காலியாயிற்று. அவரை அப்பதவிக்கென தேர்ந் தெடுத்து விட்டனர். ஆனால் அவர் அந்தப் பதவியை ஏற் காமல், தமது ஏழை நண்பர் பண்டித் தாராநாத் அவர்களை, அறுபது மைல் கால் நடையாகச் சென்று அழைத்து வந்து அதில் அமர்த்தினார்.

வித்தியாசாகர் போர்ட் வில்லியம் கல்லூரியிலே முக்கிய நிர்வாகியாக நியமிக்கப்பட்டார். ஆனால் சில தினங்களிலேயே அவர் அதை ராஜிநாமா செய்துவிட்டு சம்ஸ்கிருதக் கல்லூரியின் முதல்வர் பதவியை ஏற்றார். கல்லூரியின் முன்னேற்றத்திற்கான ஓர் அறிக்கையை அவர் தயாரித்தார். அதைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியுற்ற நிர்வாகக் கமிட்டியினர் அவரது சம்பளத்தை ரூ. 150 லிருந்து ரூ. 500 ஆக உயர்த்தினர். ஈசுவர சந்திரர் தமது கல்லூரி ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் ஒழுங்கும் கட்டுப் பாடும் வேண்டும் என்று வற்புறுத்தி வந்தார். அவர் கல் லூரிக்கு உரிய நேரத்திற்குள் வந்துவிடுவார்; யாவரும் அவ் வாறு வரவேண்டுமென அவர் விரும்பினார். அவர் முதல்வரா யிருந்த கல்லூரியில் சில பேராசிரியர்கள் அவருக்கே ஆசிரியர்களாக இருந்தவர்கள். அவர் யாரிடம் தர்க்க சாஸ் திரத்தைப் பயின்றாரோ, அப்பேராசிரியர் எப்போதும் நேரங் கழித்தே கல்லூரிக்கு வந்து கொண்டிருந்தார். ஈசுவர சந்திரர் அவரிடம் ஒன்றும் பேசாமலேயே, வணக்கத்தைச் செலுத்திவிட்டு அவரை வகுப்பிற்குச் செல்ல அனுமதித்து வந்தார். தினம் நடைபெற்று வந்த இந்த மறைமுகமான

கண்டனம் பேராசிரியரையே கலங்க வைத்து விட்டது. ஒரு நாள் அப்பேராசிரியர் ஈசுவர சந்திரரிடம் மனம்விட்டுக் கேட்டு விட்டார். "நீ ஏன் என்னிடம் ஏதுமே கேட்கவில்லை? நான் உனது மௌனத்தை இனிப் பொறுக்க இயலாது. நான் நாளை முதல் சரியான நேரத்தில் வந்து விடுவேன்." அதன் பின்னர் அப்பேராசிரியர் ஒருபோதும் நேரங்கழித்து வந்ததில்லை.

மாணவர்களிடம் ஈசுவர சந்திரர் தாராள மனப்பாங்குடன் பழகியபோதிலும் கடுமையான கட்டுப்பாடு வாதியாகவும் இருந்தார். ஒரு தடவை அவர் இளைஞர் ஒருவரைப் பேராசிரியராக நியமித்தார். அவ்விளைஞர் வகுப்புக்குச் சென்றதும் அவரை மாணவர்கள் அவமதித்தனர். ஈசுவர சந்திரர் இதை விசாரித்தார்; குற்றம் செய்த மாணவர்களின் பெயர்களைக் கேட்டார். எந்த மாணவனும் எழுந்து நிற்கவில்லை. உடனே அவர் அந்த வகுப்பு மாணவர்கள் அனைவரையும் கல்லூரியை விட்டு வெளியேற்றி விட்டார். மாணவர்கள் ஈசுவர சந்திரரை வேலையை விட்டு நீக்குமாறு மேலதிகாரிகளுக்கு வேண்டுகோள் விடுத்தனர். அவமான வாழ்க்கை நடத்துவதைக் காட்டிலும், காய்கறி விற்றோ, சலூன் வைத்தோகூடப் பிழைத்துக் கொள்ளலாம் என்று ஈசுவர சந்திரர் முன்பே சொல்லி வந்தார். பையன்களுக்கு இவ்விஷயம் தெரியுமாதலால் பரிகாசம் செய்தனர்.

வித்தியாசாகரிடம் இவ்விஷயம்பற்றி விளக்கம் கேட்கப்பட்டது. தாம் செய்தது கல்லூரியில் கட்டுப்பாட்டை நிலைநாட்டுவதற்கே என்றும், இதில் மேலதிகாரிகள் தலையிடுவது முறையல்ல என்றும் அவர் எழுதியனுப்

பினார். மேலதிகாரிகள் அவரது விளக்கத்தை அவருக்கே திருப்பியனுப்பிவிட்டு, மாணவர்களின் கோரிக்கையைப் புறக்கணித்து விட்டனர். பின்னர், மாணவர்கள் தமது பேராசிரியரிடமும், ஈசுவர சந்திரரிடமும் மன்னிப்புக் கேட்டனர். ஈசுவர சந்திரர் பல ஜில்லாக்களில் கல்வித் தணிக்கையதிகாரியாகவும் பணியாற்றினார். அவரது கோரிக்கையின் பேரிலேயே வங்காளத்தில் பல பள்ளிகள் திறக்கப் பெற்றன. ஒருநாள் ஏதோ ஒரு விஷயத்தில் கல்வி இலாகா டைரக்டர் ஒருவருடன் தகராறு நேர்ந்துவிட்டது. இனித் தமது காரியங்கள் அமைதியாக நடப்பது அரிது என உணர்ந்து அவர் தமது வேலையை விட்டு விட்டார்.

வேலையினின்று விலகியதும் அவர் இலக்கியத் தொண்டில் இறங்கினார். அதில் மிகுந்த உயர்வையும் கண்டார். ஒரே இரவிற்குள், 'ஸரள் ஸீபோத் ஸம்ஸ்க்ருத் வ்யாகரன்' என்ற இலக்கண நூலை எழுதி முடித்துவிட்டார். வடமொழி, வங்காளி, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் ஐம்பதுக்கும் மேற்பட்ட புத்தகங்களை அவர் எழுதினார். ஜீவனசரிதம், மேகதூதம், ப்ராந்தி விலாசம், போதோதயம், சகுந்தலா, விதவா விவாகம், வர்ண பரிசயம், பஹுவிவாகம் முதலியவை இவரது நூல்களுள் பிரபலமானவை.

நாட்டிலே கல்வியறிவு இன்றி யாருமே இருக்கக் கூடாது என்று அவர் எண்ணினார். அவர் எடுத்துக் கொண்ட முயற்சியின் பலனாகத்தான் கல்கத்தாவிலுள்ள பேதூன் பள்ளியும், மேலும் மேதினிபூர், பர்த்வான், ஹுக்ளி, நதியா மாவட்டங்களில் ஐம்பது பெண் பள்ளிகளும் நிறுவப்பட்டன. கல்வி இலாகாவிற்கும் அவருக்குமிடையே மனக்கசப்பு ஏற்பட்டிருந்தமையால் இப்பள்ளிகளை

நடத்தும் பொறுப்பையும் அவர் தாமே ஏற்றுக்கொண்டார். வங்காள மொழியைப் போதிப்பதற்காக அவர் 101 பள்ளிகளை நிறுவினர்; மேலும், பகலில் உத்தியோகம் பார்க்கும் மனிதர்களின் உயர் கல்விக்காக இரவுப் பள்ளிகளையும் ஏற்படுத்தினர்.

வித்தியாசாகர் மூலம் ஸ்தாபிக்கப்பட்ட பள்ளிக்கூடங்களிலே ஆயிரக்கணக்கான மாணவர்கள் கட்டணமின்றிப் படித்தனர். மாணவர்களுக்குப் புத்தகப் பணமும், ஆசிரியர்களுக்குச் சம்பளமும் அவரே அளித்துவந்தார்.

ஈசுவர சந்திரரின் பேராசிரியர் ஒருவர் முதுமையில் தமது முதல் மனைவி இறந்தவுடன் ஓர் இளம் பெண்ணை மணந்துகொண்டார். ஈசுவரர் இதனை ஆட்சேபித்தார். பேராசிரியர் மிகவும் பிடிவாதமாக ஈசுவர சந்திரருக்குத் தமது புது மனைவியை அறிமுகம் செய்து வைப்பதற்காக அவரைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். ஆனல் வீடு சென்று அப்பெண்ணைக் கண்டதும் ஈசுவரர் உரக்க அழத் துவங்கி விட்டார். பேராசிரியர் அவரை மிகவும் தேற்றி, ஏதேனும் சாப்பிடும்படி வேண்டிக் கொண்டார். ஆனல் ஈசுவரரோ அவரது வீட்டில் ஒரு துளி நீர்கூட அருந்த முடியாது என்று கூறி எழுந்துசென்று விட்டார்.

இந்நிகழ்ச்சிக்குப் பின் ஈசுவரருக்கு இந்து சமூகத்தில் உள்ள இத்தகைய தீய பழக்கங்களை விலக்க வேண்டுமென்ற பேரார்வம் எழுந்துவிட்டது. விதவைகள் மணம் செய்து கொள்ளும் வழக்கத்தைப் பரப்புவதற்காக அவர் விசேஷ முயற்சிகள் செய்தார்.

ஈசுவர சந்திரர் நாட்டின் கல்வி நிலையை ஓங்கச் செய்ததுடன், வேறு பல சீர்த்திருத்தங்களையும் இயற்றினர்.

அவரது மனம் எப்போதும் நாட்டின் சீர்த்திருத்தப் பணிகளிலேயே ஈடுபட்டிருந்தது. கைம்பெண்களின் இழி நிலையைப் போக்குவதில் அவர் மிக்க உறுதி பூண்டார்; விதவா விவாகம் சம்பந்தமாகப் பல நூல்களை எழுதி, அவற்றில் சாத்திரச் சான்றுகள் பலவற்றையும் காண்பித்து மூட நம்பிக்கைக் காரர்களுக்குத் தெளிவு ஊட்டினர். கைம் பெண்கள் மறுமணம் செய்து கொள்வது சாத்திரங்களுக்கு விரோதமான செயல் அல்ல என்று அவர் கூறினர். ஆனல் ஆரம்பத்தில் இந்தப் பணியினல் மக்களிடையே பயனேதும் ஏற்படவில்லை; மாருகப் பலர் அவருக்கு விரோதிகளாகி விட்டனர். பிறருக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் வகையிலே அவர் தம் ஒரே அருமை மகனை ஒரு கைம்பெண் யுவதிக்குத் திருமணம் செய்து வைத்தார். உடனே வங்க நாடு முழுவதும் சமுதாயச் சீர்த்திருத்த வேகம் பரவியது. 'வித்தியாசாகர் வாழ்க' என வாழ்த்தொலி எழுந்தது. இத்தகைய புரட்சிக் கருத்துகள் கொண்டவராயினும், வித்தியாசாகர் மிக எளிய முறையிலே வாழ்ந்து வந்தார். அவர் ஒரு முழு இந்தியராகவே விளங்கினர்.

யாரேனும் கஷ்டப்படுவதைக் கண்டால், உடனே வித்தியாசாகர் அத்துயரைத் துடைக்க முயல்வார். நோயாளிகளையும், துக்கப்படுவோரையும் விசாரித்து அறிந்து அவர்களது வீடுகளுக்குச் சென்று முழு மனதுடன் சேவை செய்வார்; அவர்களது துன்பம் நீங்குவதற்கு உதவி புரிவார்.

செல்வந்தர், ஏழை என்ற பாகுபாடு இன்றி எல்லோருடனும் சமமாக அவர் கலந்து பழகினர். ஒரு சமயம் கல்கத்தாவில் ஒரு பெரிய ஜமீந்தாரைச் சந்திக்க

அவர் போய்க் கொண்டிருந்தபோது சிறியக் கடைக்காரன் ஒருவன் அவரை அழைத்தான். அவன் ஒரு கோணியை விரித்து அதன் மீது வித்தியாசாகரை அமரச் செய்தான். ஈசுவர சந்திரர் அவனுடன் மிக சுவாரசியமாக உரையாடிக் கொண்டிருந்தார்; அப்போது மிக உயர்ந்த ரகக் குதிரைகள் பூட்டிய சாரட்டிலமர்ந்து ஜமீன்தார் அவ்வழியாக வந்தார். ஈசுவர சந்திரரைச் சந்திப்பதற்காக ஜமீன்தார் சாரட்டிலிருந்து இறங்க நேரிட்டது. ஜமீன்தாருக்கு இந்த நிலைமை அவ்வளவாகப் பிடிக்கவில்லை. இரண்டாவது தடவை அவர் ஈசுவர சந்திரரைச் சந்தித்தபோது, "நீர் ஏன் கண்ட இடங்களிலெல்லாம் அமர்ந்து விடுகிறீர்? உமக்குச் சுய கௌரவத்தைப் பற்றிய சிந்தனை கிடையாதா?" என்று கேட்டார்.

வித்தியாசாகர் கூறினார்: "தாங்கள் வேண்டுமானால் என்னுடன் நட்பை விட்டுவிடுங்கள். அப்போதுதான் தாங்கள் என்மீது இங்ஙனம் குறை கூருமலிருக்க முடியும். ஏழை என்ற ஒரே காரணத்திற்காக நான் எனது நண்பரான கடைக்காரரை அவமதிக்க முடியாது."

ஈசுவர சந்திரரது வாழ்க்கையின் ஒவ்வோர் நிகழ்ச்சியும் நமக்கெல்லாம் ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறது. கி. பி. 1891-ல் இம்மகான் விண்ணுலகெய்தினர். ஈசுவர சந்திர வித்தியாசாகர் இன்று இவ்வுலகில் இல்லையென்ருலும் அவரது புகழ் நம்மிடையே இறவாமல் இருந்து வருகிறது.



## மைக்கேல் மதுசூதன் தத்தர்

வங்காளி மொழியில், யாப்பிலக்கணத்துக்கு அடங்காத எளிய செய்யுட்களை எழுதுவதற்கு வித்திட்ட கவிஞரான மதுசூதன தத்தரின் வாழ்க்கை விசித்திரமானது. வங்காளத்தில் சாகர்தடி என்ற கிராமத்தில் 1824 ஜனவரி 25-ந் தேதி ராஜ்நாராயணன் என்பவரது இல்லத்திலே அவர் பிறந்தார். ராஜ்நாராயணுக்கு நான்கு மனைவியர்கள் இருந்தனர். முதல் மனைவியிடம் பிறந்தவர் மதுசூதனர். அவருக்கு இரண்டு தம்பிகளும் ஒரு தங்கையும் இருந்தனர்; ஆனால் இளமையிலேயே அவர்கள் அனை

வரும் இறந்துவிட்டனர். இதனுல் பெற்ருேர்கள் மது சூதனிடம் அளவுகடந்த அன்பு கொண்டிருந்தனர். ராஜ் நாராயணன் வக்கீலாக இருந்தார்; அவருக்கு நல்ல வரு மானம் கிடைத்து வந்தது.

மதுசூதன் அதிகச் செலவு செய்யும் இயல்பினர். இப்பழக்கம் தந்தையிடமிருந்து வந்ததாகும். தமது அன்னே ஜாஹ்நவி தேவியிடமிருந்து கவிதை புனேயும் ஆற்றலே அவர் பெற்ருர். இந்தத் திறன் காரணமாக அவர் அழியாப் புகழ் பெற்று விட்டார்.

மதுசூதன் பள்ளிப் படிப்பில் மிகுந்த நாட்டம் கொண்டிருந்தார். பிற்கால வாழ்விலே பெரும் புகழ் பெறப் போகிருேம் என்பதை அவர் இளமையிலேயே உணர்ந் திருந்தார்.

விதிமுறைகளுக்கு உட்படுவது அவரது இயல்பு அல்ல. எனினும் அவரிடம் செருக்கு கிடையாது. எவ ரேனும் துன்பத்தில் அகப்பட்டுக் கொண்டால் அவர் ஓடிச் சென்று உதவிபுரிவார்.

கிராமப் பள்ளிப் படிப்பு முடிந்ததும் ராஜ்நாராயண் மதுசூதனேக் கல்கத்தா இந்துக் கல்லூரியில் சேர்த்தார். அக்காலத்தில் இந்தியாவில் பாரதக் கலாசாரத்திற்கு எதி ரான கல்வி பரவி வந்தது. ஆங்கில நாகரிகம், ஆங்கில அரசியல், ஆங்கிலக் கலாசாரம், கிறிஸ்தவ மதம் ஆகிய வற்றில் ஆர்வமூட்டுவதே அக் கல்வியின் முக்கிய நோக்க மாகும். செல்வந்தரான தந்தையின் செல்லப் பிள்ளே என் பதால், மதுசூதனிடம் இயல்பாகவே சபலபுத்தி குடிகொண் டிருந்தது. இப்போது இப்புதிய இடத்தின் கவர்ச்சிக்கு

அவர் வசமாகிவிட்டார். உணவு, உடை முதலிய யாவற் றிலுமே அவர் ஒரு துரை போல ஆகிவிட்டார். ஆங்கில நடையுடைகளுடனே, ஆங்கில மொழிக் கல்வியிலும் திறமைபெற்றார். தாய்மொழி வங்காளியை விட்டு, ஆங் கிலத்திலேயே பேசலானார்; அம்மொழியில் கவிதைகள் இயற்றவும் துவங்கிவிட்டார்.

தந்தையார் இவருக்கு ஒரு வங்காளி ஜமீந்தாரது அழகிய பெண்ணைத் திருமணம் செய்துவைக்கத் தீர் மானித்தபோது மதுசூதன் தம் தாயிடம் கூறினார்: "நான் வங்காளிப் பெண்ணை மணக்க மாட்டேன். ஏனெனில் வாங்காளிப் பெண் ஆங்கில யுவதிபோல அழகும் பண்பும் படைத்தவளாக இருக்க முடியாது."

திருமண ஏற்பாடுகள் நடைபெற்றுக்கொண்டிருந்த போது, அவர் ஒரு நாள் வீட்டை விட்டு ஓடிவிட்டார். 1843 பிப்ரவரி 9-ந் தேதியன்று அவர் கிறிஸ்தவமதத்தில் சேர்ந்து விட்டார். மதமாற்றத்திற்குப் பின் வெறும் மது சூதன், 'மைக்கேல் மதுசூதன்' ஆனார்.

தாய் தந்தையர்க்கு மகன் மீது பாசம் சிறிதும் குறையவில்லையாயினும், வேறு மதத்தவனை மகனை வீட்டில் வைத்துக் கொள்ள இயலவில்லை. தவிர, மகனது அடங்காத போக்கைக் கண்டு மிகவும் மனம் நொந்த தந்தை அவருக்குப் பண உதவி செய்வதை நிறுத்தி விட்டார். இதனால் மதுசூதனுக்குப் பல கஷ்டங்கள் நேர்ந் தன. நிலைமை மாறிவிட்டபடியால் அவர் பணம் சம்பாதிப் பதற்காகச் சென்னை நகர் செல்ல நேரிட்டது. சென்னை யிலும் மதுசூதன் மிகவும் கஷ்டப் படவேண்டியிருந்தது.

அங்கு கிறிஸ்தவக் குழந்தைகளுக்குப் படிப்பு சொல்லிக் கொடுக்கும் வேலை கிடைத்தது. ஆனால் இதில் கிடைத்த வருமானம் அவருக்குப் போதவேயில்லை. கல்லூரிப் படிப்பின்போது மதுசூதன் தமது மகிழ்ச்சிக்காக இலக்கியம் எழுதியதுண்டு. இப்போது தம் வயிற்றுக்காக அதை மேற் கொள்ள நேரிட்டுவிட்டது. நாளடைவில் அவர் ஓர் எழுத் தாளர் எனப் பெயர் பெற்றார்.

மதுசூதன் இயற்றிய ஆங்கில நூலான 'கைதிப் பெண்' விரைவிலேயே வெளியிடப்பட்டது. ஆங்கிலத்தில் மதுசூதன் ஓர் எழுத்தாளராகி விட்டார். அவரது இளமை நண்பரான கௌரதாஸ் வசாக் என்பாரும் இந்தியாவில் பெண் கல்வியைப் பரப்பிய பேதுன் அவர் களும் அவரிடம் கூறினர்: "வேற்று நாட்டான் ஒரு வனுக்கு ஆங்கிலேய இலக்கியத் துறையிலிருந்து உதவிப் பணம் கிடைக்காது; எனவே நீர் நமது தாய்மொழியான வங்காளியிலேயே இலக்கிய சிருஷ்டி செய்ய வேண்டும்" இது மதுசூதனின் தவறான கருத்தை நீக்கியது. அவர் வங்க மொழியைப் பயிலத் தொடங்கினார்.

சென்னையில் மதுசூதன் ரெபேகா மியாவட்மிஸ் என்னும் ஸ்காட்லாந்துப் பெண்ணை மணம் புரிந்து கொண் டார். ஆனால், பின்பு தம் இயல்பின் காரணமாகவும், வேறு வழியின்மையாலும் இந்த விவாகத் தொடர்பை அறுத்துக் கொள்ளும் நிலை வந்து விட்டது. இதன்பின் மதுசூதன் சென்னைக் கல்லூரி முதல்வருடைய பெண்ணை மணந்தார். அப்போது அவர் ஒரு தினசரிப் பத்திரிகையின் உதவியாசிரியராகவும், ராஜதானிக் கல்லூரியில் ஆசிரிய ராகவும் பணி புரிந்து வந்தார். ஆனால், இவ்வுத்தியோகங்

களால் கிடைத்த ஊதியமும் அவருக்குப் பற்றவில்லை. எட்டு ஆண்டுகளுக்குப் பின்னர் அவர் வங்காளத்திற்குத் திரும்பிச் சென்றார்.

மதுசூதன் சென்னையிலிருந்த போது அவருடைய தாய் தந்தையர்கள் காலமாயினர். உறவினர்கள் மதுசூதனும் இறந்திருப்பார் என்று எண்ணிவிட்டனர். எனவே அவர்கள் அவரது தந்தையின் சொத்துக்கு உரிமை பாராட்டினர். மதுசூதன் வங்காளத்திற்குத் திரும்பி வந்தபோது உறவினர் யாருக்கும் அவனை அடையாளம் கண்டுகொள்ள இயலவில்லை. கல்கத்தாவும் அவருக்குப் புதிதாகப்பட்டது.

சமூகப் பிரஷ்டராகவும், பணமற்றவராகவுமிருந்த மதுசூதன் ஒரு காரியாலயத்தில் அலுவல் பார்க்க நேர்ந்தது. இப்போது அவர் வங்காளி மொழியில் நாடகங்கள் எழுத ஆரம்பித்தார். அவற்றுள் 'சர்மிஷ்டை' 'பத்மாவதி' முதலியவை பிரசித்தமானவை. காவிய மியற்றியதால் தான் மதுசூதனின் புகழ் மிகவும் ஓங்கியது. அவரது காவியங்களில் 'மேகநாதவதம்' ஒன்று மட்டுமே அவரது பெயரை என்றென்றும் நிலைக்க வைக்கப் போதுமானதாகும்.

தமது மனைவி மக்களை கல்கத்தாவில் விட்டு விட்டு, மதுசூதன் பாரிஸ்டர் படிப்பிற்காக மேல்நாடு சென்றார். பின்னர், கல்கத்தாவில் அவரது மனைவிக்கும் குழந்தைகளுக்கும் பணத்தேவை ஏற்பட்டமையால் அவர்களும் அயல் நாட்டிற்குச் சென்று விட்டனர். அயல் நாட்டிலே கடன் பெருகிவிட்டது. எவரிடமிருந்தும் உதவி கிடைக்கவில்லை. இறுதியில் அவர் ஈசுவரசந்திர வித்தியாசாகருக்கு எழுதினார். அவரது உதவி பெற்று பாரிஸ்டர் படிப்பை

முடித்து விட்டார். 1867-ஆம் ஆண்டிலே மதுசூதன் கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் பாரிஸ்டர் வேலையைத் துவக்கினார். இந்த வேலையின்மூலம் கிடைத்த வருமானமும் அவருக்குப் போதவில்லை. கடன் மேலும் மேலும் வளர்ந்து கொண்டே வந்தது. இந்த நிலையிலும் மதுசூதன் தாராளமாகத் தானம் செய்து வந்தார்.

மதுசூதனின் எஞ்சிய வாழ்நாள் மிகவும் வருந்தத் தக்க நிலையில் கழிந்தது. மனைவியும் இறந்த பின்னர், 1873 ஜூன் 29-ந் தேதி அலிப்பூரிலுள்ள மருத்துவ நிலையத்தில் அவர் காலமானார்.



## தயானந்த சரஸ்வதி

குஜராத்தில் காத்தியவாட் பிரதேசத்தைச் சார்ந்த மோர்வி சமஸ்தானத்தின் ஒரு கிராமத்திலே பண்டித அம்பாசங்கர் வசித்துவந்தார். கி. பி. 1824-ல் அவருக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு மூலசங்கர் என்ற பெயர் சூட்டப்பட்டது. விளையும் பயிர் முளையிலே தெரியும் என்பது மூலசங்கர் விஷயத்தில் மெய்யாயிற்று. அவன் தனது பாடங்களை ஊன்றிப் படித்து மனப்பாடம் செய்து விடுவான். ஆசிரியர்கள் அனைவரும் அப்பையனிடம் மிகவும் அன்பு கொண்டிருந்தனர். பதினான்காம் ஆண்டிற்

குள் அவனுக்கு யஜுர் வேதம் மனப்பாடமாகிவிட்டது. நன்கு சிந்திக்கும் ஆற்றல் அவனுக்கு இருந்தது.

சிவராத்திரி நோன்பு வந்தது. தனது தந்தையாரின் சொற்படி சிறுவன் மூலசங்கரும் விரதம் இருந்தான். கோவிலில் நள்ளிரவு வரை பஜனை நடந்தது. அதன் பின், மற்றவர்கள் யாவரும் தூங்கி விட்டனர்; ஆனால் மூலசங்கர் மட்டும் விழித்திருந்தான். மிகுந்த சிரத்தையுடன் அவன் சிவ மந்திரத்தை ஜபம் செய்து கொண்டு, பெருமானது விக்கிரகத்திற்கு முன்னால் அமர்ந்திருந்தான். அப்போது ஏற்பட்ட நிகழ்ச்சியொன்று மதம் சம்பந்தமான அவனது கருத்தையே மாற்றி விட்டது. அதாவது, ஒரு சுண்டெலி சிவபிரானது விக்கிரகத்தின் மீது ஏறிச் சென்று அங்கு அர்ப்பணம் செய்யப்பட்டிருந்த பிரசாதங்களாகிய பண்டங்களைச் சுவைத்துச் சாப்பிடுவதை மூலசங்கர் கண்டனன். இதைக் கண்டதும் விக்கிரக வழிபாடு என்பது வெறும் போலிச் செயல் என்று அச்சிறுவனின் மனத்தில் பட்டது. ஓர் எலி தன் மீது ஏறி அசுத்தப்படுத்துவதைத் தடுத்துக் கொள்ள சக்தியற்ற ஒரு விக்கிரகமா என்னைக் காப்பாற்றி விடப் போகிறது?' இந்த நாஸ்திக வாதத்தைத் தந்தையிடம் கூறியதும், அவர் பிள்ளையைக் கடுமையாக அதட்டினார். இதன் பின்னர், ஒரு நாள் அவனது சகோதரி இறந்து விட்டாள்; அவன் கலங்கிப் போனான்.

இன்னும் சில நாட்கள் கழிந்து அவனது சிற்றப்பாவும் காலமானார். அவன் விம்மி விம்மி அழுதான். 'இவ்வாழ்க்கை ஒரு நீர்க்குமிழி. மனிதன் தன் வாழ்க்கையின் முழுப் பயனையும் எய்தும் வகையிலே செயல் புரிய வேண்டும். போலி ஆசாரம், தன்னலம், பிறரை வாட்டுதல் முதலியவை

மிகவும் தீய செயல்கள்.' இவ்வாருன எண்ணங்களிலே முழ்கிய மூலசங்கர் பற்றற்றவன் போன்று நடக்கலானுன். பையன் எங்கேனும் துறவிக் கோலம் பூண்டு நழுவி விடுவானே என்ற அச்சம் தந்தைக்குத் தோன்றியது. எனவே, அவனது திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யத் துவங்கினர். ஆனல், மூலசங்கர் யார் கண்ணிலும் படாமல் சித்தபூரில் நடந்த விழாவிற்குச் சென்று அங்கு துறவியாக மாறி, தலையை மொட்டையடித்துக் கொண்டு, காவி வஸ்திரமும் உடுத்திக் கொண்டுவிட்டார். தந்தைக்கு இத்தகவல் எட்டியதும் வேண்டியவர்கள் சிலருடன் வந்து மகனை வளைத்துக் கொண்டார். ஆயினும், இரவில் எல்லோரும் நன்கு தூங்கிய சமயம் மூலசங்கர் அங்கிருந்து தப்பிச் சென்று விட்டார். ராஜபாட்டையிலே செல்லாமல், வயல் வெளிகளிலேயே பிரயாணம் செய்து உத்தரப் பிரதேசத்திற்கு அவர் போய்ச் சேர்ந்தார். மூன்ருண்டுக் காலம் இங்குமங்குமாகத் திரிந்துவிட்டு, இறுதியில் அவர் மதுராவில் சுவாமி விரஜானந்தரது ஆசிரமத்தினை அடைந்தார். அங்கு தமது குருபக்தி, சேவை உழைப்பு ஆகியவற்ருல் குருவிரஜானந்தரை மகிழ்வுறச் செய்தார். சுவாமி விரஜானந்தர் முன்கோபக்காரர். இருப்பினும் மூலசங்கர், 'தயானந்தரா'கப் பெயர் மாற்றம் கொண்டு மிக்க துணிவுடனும் ஊக்கத்துடனும் அவரிடம் கல்வி கற்ருர். கல்வி முடிந்தபின் ஆசிரமத்தை விட்டு அகலும் தருணத்தில் குரு விரஜானந்தர் பாக்கிய சாலியான தம் சீடரிடம் உரைத்தார்: "குழந்தாய் பாரத நாட்டு மக்கள் தற்போது இருளில் மூழ்கிக் கிடக்கின்றனர். அவர்களது சமூக அமைப்பாம் உடலிலே, குழந்தைக் கல்யாணம், பொருந்தாத் திருமணம், கல்வியின்மை முதலிய தீய

30

பழக்கங்களாகிய நோய்கள் புரையோடிச் சென்றுள்ளன. இதனால், நீ மக்களுக்கு நல்வழிகாட்டி, அவர்களைப் போலிப் பழக்க வழக்கங்களினின்றும் கைதூக்கி விட்டு உண்மை யான வைதிக மதத்தைப்பற்றிய நல்லறிவை அவர்களுக்குப் புகட்டுவாய் என நம்பிக்கை கொண்டுள்ளேன்."

அந்நாட்களிலே பாரத நாட்டில் பற்பல தீய பழக்கங்கள் நிலவின. சில மனிதர்கள் புண்ணியத் தலங் களுக்குச் சென்று அங்குள்ள தீர்த்தக் கரைப் பண்டாக் களுக்கு (புரோகிதர்களுக்கு) நல்ல நகைகளையெல்லாம் அணிந்த தமது அழகிய மனைவியரையே தானமாக அளித்து வந்தனர். இவ்வாறு தானம் செய்வதால் அடுத்த பிறவி யிலும் தமக்கு அழகிய மனைவியரும், செல்வமும் கிடைக்கும் என்பது அம்மூட மக்களது நம்பிக்கையாகும்! பின்பு, தானம் கொடுக்கப்பட்ட அம் மனைவியரை, ஏதோ பண்டத்தை விலை கொள்வது போன்று, பண்டாக்களுக்குப் பெருந் தொகையை விலையாகக் கொடுத்துத் திரும்பப் பெற்று வந்தனர். சிலர் தமது பெண்களைக் கோவில்களில் மூர்த்திக்குப் பணி புரிவதற்காக அர்ப்பணம் செய்துவிடுவார் கள். பின்னர் அப்பெண்கள் தேவதாசிகளாக மாறி வெறுக்கத்தக்க வாழ்க்கை நடத்தினர். பல மக்கள் தமது இளங் குழந்தைகளை கங்கை நதிக்கு அர்ப்பணம் செய்து விடுவர். பண்டாக்கள் நீரிலே விடப்பட்ட அக்குழந்தை களைக் காப்பாற்றி எடுத்துவந்து, தாய் தந்தையினரிடம் பெரும் விலைக்கு விற்று வந்தனர். சில சமயம் அப்பச்சிளங் குழவிகள் நதியிலே மூழ்கிப் போவதுமுண்டு. இந்த அளவிற்கு மோசமடைந்திருந்த சமுதாயத்தைச் சீர் செய் வது இலகுவான காரியமா?

தயானந்தர் தமது குருவின் ஆணையைத் தாங்கி கிராமம் கிராமமாக, நகரம் நகரமாகச் சுற்றுப் பயணம் செய்தார். கங்கையிலே குளித்ததுமே பாபமெல்லாம் நீங்கிவிடும் என்ற கொள்கையைக் கண்டித்து மக்களிடையே அவர் பிரசாரம் செய்தார். யோகிகளில் தலைசிறந்து விளங்கிய கிருஷ்ண பகவான் வெண்ணெய் திருடினார் என்பதும், பதினாறு ஆயிரம் ராணிகள் அவருக்கு இருந்தனர் என்பதும் வெறும் கட்டுக் கதையாகும். கிருஷ்ண பரமாத்மா ஒரு மகா புருஷர்; போகப் பிரியர்களான கவிகள் அம்மகாபுருஷரைப் பற்றி இவ்வித வருணனைகளை எழுதி மக்களையும் பாதை தவறச் செய்துவிட்டனர். என்று அவர் கூறிவந்தார்.

அவர் எடுத்துரைத்த இம்மாதிரியான உபதேசங்களால் கர்ணவாஸ் என்னும் ஊரில் இருந்தவர்கள் அவரது பகைவராயினர். ஒரு நாள் கர்ணசிங் என்ற ராஜபுத்திரன் அவரை வாளெடுத்துக் கொல்ல வந்தான். சுவாமி அவனுடைய வாளைச் சடக்கெனப் பிடுங்கி இரு துண்டாக ஒடித்தெறிந்து விட்டார். அப்போது அப்போக்கிரி வேறு சில போக்கிரிகளுக்கு ஆசை காட்டி சுவாமிஜியைக் கொல்லுமாறு தூண்டிவிட்டான். ஆனால் கொல்ல வந்த போக்கிரிகளால் சுவாமிஜியின் ஒளிக்கு முன்பு நிற்க முடியவில்லை. ஏனைய மக்களுக்குக் கர்ணசிங் செய்த சதி தெரிந்ததும், அவர்களனைவரும், "உனக்கு ஒரு துறவியைத் துன்புறுத்த வெட்கமாக இல்லையா?" என்று கூறி அவனை அதட்டினர். தீவினைப் பயன் எப்போதுமே கொடியதல்லவா? கர்ணசிங் நோய்வாய்ப்பட்டும், பின்னர் பைத்தியம் பிடித்தும் அலைந்து கடைசியில் இறந்துவிட்டான்.

சுவாமிஜி தாம் சென்ற இடங்களிலெல்லாம் கல்வி

யறிவற்ற பார்ப்பனர்கள், பூசாரிகள், பண்டாக்கள் ஆகியோரது வஞ்சனைகளை அம்பலமாக்கி அறிவுப் பிரசாரம் செய்தார்; உண்மையான மதம் யாதென மக்களுக்கு அறிவுறுத்தினர்; கெட்டவர்களுக்குத் தானமளிப்பதைத் தடுத்தார். இதன் பயனாகப் புரோகிதர், பண்டாக்களுடைய வருவாய் குறையலாயிற்று. எனவே, அவர்கள் யாவரும் சுவாமிஜியிடம் கடும் பகைமை பூண்டனர். பகை கொண்ட ஒரு பிராமணன் ஒரு நாள் சுவாமிஜிக்கு வெற்றிலையில் விஷத்தைக் கலந்து கொடுத்துவிட்டான்; விஷயமறிந்ததும் சுவாமிஜி நிறையத் தண்ணீரைத் குடித்துக் குடித்து வாந்தியெடுத்து தமது குடலைக் கழுவிக் கொண்டார். அந்த நகரில் இருந்த தாசில்தார் ஒரு முகம்மதியர். அவர் சுவாமிஜியிடம் மிக்க பக்தி கொண்டவர். அவர் அந்தப் பிராமணனின் செயலைக் கேள்விப் பட்டதும், அவனைக் கைது செய்வித்து சிறைச்சாலையிலே தள்ளிவிட்டார். ஆனால் தாராள மனம் படைத்த சுவாமிஜி அவனை மன்னித்து விடுவிக்கச் செய்தார்.

வேறொரு நகரிலும் இதுபோன்றே நிகழ்ந்தது. ஒரு பிராமணன் சுவாமிஜிக்கு மிட்டாய் கொண்டு வந்தான். சுவாமிஜிக்கு அதில் விஷம் கலக்கப்பட்டிருப்பது நன்றாகப் புரிந்து விட்டது. உடனே அவர் அதில் கொஞ்சம் மிட்டாயை எடுத்து அப்பிராமணனிடம் கொடுத்து உண்ணுமாறு சொன்னார். பார்ப்பனனது முகம் வெளிறிவிட்டது. சுவாமிஜி அதட்டிக் கேட்டார்: "ஏன் உண்ணாமல் தயங்குகிறாய்? இதில் விஷம் கலந்திருக்கின்றதா?" இச் சொற்களைக் கேட்டதும் அவன் அங்கிருந்து ஓடிவிட்டான்.

பம்பாய் நகரில் கோசாயி வகுப்பினர்கள் சுவாமிஜி

யிடம் வாதத்தில் தோல்வியுற்று, அவரது உணவிலே நஞ்சைக் கலந்து கொடுக்கச் சதி செய்தனர். இதற்காக அவர்கள் சுவாமிஜியின் சமையற்காரனுக்கு ஆசை காண்பித்தனர். முதலில் அவனிடம் அவர்கள் ஐந்து சேர் மிட்டாயும், ஐந்து ரூபாயும் அளித்துவிட்டு, அவன் சுவாமிஜியைக் கொன்ற பின்னர் ஓராயிரம் ரூபாய் தருவதாகவும் கூறினர். அவர்கள் இவ்வொப்பந்தத்தை அவனிடம் எழுதியும் கொடுத்தனர். இவ்விஷயம் சுவாமிஜிக்கு எவ்வாறோ எட்டிவிட்டது. அவர் சமையற்காரனைக் கூப்பிட்டு விசாரித்தபோது, அவன் வெடவெடவென நடுங்கிப் போனான்; நடந்ததை யெல்லாம் ஒன்றுவிடாமல் அவரிடம் கூறிவிட்டான். சுவாமிஜி நினைத்திருந்தால் தக்க சான்றுகளுடன் அவர்களை நீதி மன்றத்தில் கூண்டேறச் செய்திருக்க முடியும்; ஆனால் அவர் அவ்வாறு செய்யாமல் அப்பகைவர்களையும் மன்னித்தருளினார்.

சுவாமிஜி போலி மதத் தலைவர்களைக் கண்டித்தார்; உண்மையான மதக் கருத்துக்களை விளக்கினார். உண்மையான தருமம் என்பது கருணை தருமம்தான் என்று சாத்திர வாதங்கள் மூலம் நிரூபித்தார். அவர் 'ஆரிய சமாஜம்' என்ற ஸ்தாபனத்தை நிறுவினார். அதைப் பின்பற்றியவர்கள் 'ஆரிய சமாஜிகள்' என்று அழைக்கப்பட்டனர். அறிவற்ற போலிகளுக்கு அவரது பிரசாரம் கட்டோடு பிடிக்கவில்லை. அவருக்கு எவ்விதமாவது கஷ்டம் ஏற்படுத்தவும், அவருடைய பெயருக்குக் களங்கம் விளைவிக்கவும் அவர்கள் சமயம் பார்த்திருந்தனர்.

ஒரு இடத்தில் அவர் சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்த போது ஒருவன் ஒரு கருநாகத்தை அவர் மீது வீசி

எறிந்தான். பாம்பு ஊர்ந்து அவர் காலடியில் வந்ததும், அதனைக் காலால் நசுக்கிவிட்டு, தமது சொற்பொழிவைத் தொடர்ந்து நடத்தினார். ஒரு சமயம் அவர் ஜலந்தர் நகருக்குச் சென்றபோது அங்கு ஒரு பணக்கார சீக்கியரான விக்கிரமசிங் என்பவர் கேட்டார்: "மகாராஜ், தாங்கள் பிரம்மச்சரிய வாழ்வைப் பற்றிப் பிரசங்கம் புரிகிறீர்களே, அதைக் கண் கூடான சான்றுடன் காண்பியுங்கள் பார்க்கலாம்."

சுவாமிஜி அதைக் கேட்டு மௌனமாகவே இருந்தார். ஆனால் சர்தார்ஜி தமது நான்கு குதிரை சாரட்டில் ஏறிப் புறப்பட்டபோது, சுவாமிஜி பின்னால் சென்று சாரட்டினை இழுத்துப் பிடித்துக் கொண்டார். வண்டிக்காரன் சாட்டைகளினால் குதிரைகளை எவ்வளவோ அடித்தும், சாரட்டு ஓரடிகூட நகரவில்லை. வியப்படைந்த விக்கிரமசிங் பின்னால் திரும்பிப் பார்த்தபோது தான் சுவாமிஜி வண்டியைப் பிடித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. சுவாமிஜி சிரித்துக்கொண்டே "பார்த்தீரா பிரம்மசரியத்தின் வலிமையை?" என்று கேட்டார்.

ஒரு சமயம், தை-மாசிக் கடும்பனியிலே திறந்த உடம்புடன் இமயமலைச் சாரலில் சுவாமிஜி சமாதி புரியலானார். ஐரோப்பிய தம்பதிகள் இருவர் மேலங்கியும் வேறு பல கம்பள ஆடைகளும் அணிந்தும் கூட குளிரிலே வெட வெடத்துக் கொண்டே அவ்வழியாக வந்தனர். இத்தனை கடும்பனியிலும் ஒரு சந்நியாசி வெற்றுடம்புடன் அமர்ந்திருப்பதைக் கண்டு அவர்கள் பேராச்சரியம் அடைந்தனர். சுவாமிஜியின் தியானம் முடிந்ததும் அவர்கள் அவரிடம் தங்கள் சந்தேகத்தைத் தெரிவித்தனர். "பிராணாயாமப்

பயிற்சி, பிரம்மசரிய வாழ்வு முதலியவற்றினுல் மனிதன் தனது புலன்கள் மீது வெற்றிபெற முடியும்'' என்று அவர் களுக்கு அவர் பதிலுரைத்தார்.

அவ்வளவு குளிரிலும் சுவாமிஜி தமது உடலிலிருந்து வியர்வை சொட்டச் செய்து அத்தம்பதிகளை இன்னும் வியக்கச் செய்தார் என்றும் கூறப்படுகிறது.

தருமப் பிரசாரம் செய்து கொண்டே ஒரு சமயம் அவர் மதுராவுக்குச் சென்ருர்; அங்கே மத வேடதாரிகளைக் கடுமையாகத் தாக்கிப் பேசினுர். தமது கருத்துக்களை நிரூபணம் செய்ய அவர் வேதங்களை மேற்கோள் காட்டினுர். உடனே அங்கிருந்த பண்டாக்களும் பூசாரிகளும் நடு நடுங்கிப் போயினர். சுவாமிஜியின் புலமைக்கு எதிரில் அவர்களால் ஏதும் செய்ய இயலவில்லை. அவர்கள் வாதத் தில் தோல்வியுற்றனர். சுவாமிஜிக்கு வேறு விதத்தில் அவப்பெயர் ஏற்படுத்த எண்ணி ஓர் அழகிய பரத்தை மாதின் உதவியை நாடினர். "நீ அவர் இருக்கும் தோட்டத் தினுள் சென்று அவருடன் சண்டைபோடத் துவங்க வேண்டும். பின்னர் நாங்கள் அவருக்குக் களங்கம் கற்பித்து அங்கிருந்து அவரை விரட்டி விடுவோம். இச்செயலில் நீ வெற்றிபெற்ருல் உனக்கு மிக்க பணமளிப்போம்'' என்று அவளுக்கு அவர்கள் ஆசை காட்டினர்.

முதலில் அவ்விலைமாது மிகவும் தயங்கினள்; ஆனுல் பண்டாக்கள் அவள் முன்பு அனேக தங்க நகைகளை வைத்து ஆசை காட்டியதும், அவள் வலையில் வீழ்ந்து விட்டாள். மறுநாள் திட்டப்படி சுவாமிஜியின் தோட்டத் திற்கு அவள் சென்ருள். அப்போது சுவாமிஜி சமாதி நிலையில் ஆழ்ந்திருந்தார். அவரது கபடமற்ற, ஒளி

நிறைந்த திரு முகத்தைக் கண்டதுமே அம்மாதின் மனத்தில் தனது கெட்ட எண்ணத்திற்காகப் பச்சாத்தாபம் ஏற்பட்டது. சுவாமிஜியின் சமாதி கலைந்ததும் அவர் தமக்கு முன்பு ஓர் அழகிய ஸ்தீரீ இருப்பதைக் கண்டு வியப்படைந்தார். அவள் குனிந்து அவரது பாதங்களைத் தொட்டு வணங்கி மிக்க பச்சாதாபத்துடன் நடந்த விஷயங்கள் அனைத்தினையும் சொன்னாள். அதோடு தனக்களிக்கப்பட்ட நகைகளை யெல்லாம் கழற்றி அவரது திருவடிகளிலேயே சமர்ப்பித்து விட்டாள். சுவாமிஜி அவற்றைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, "தாயே செல்; இனி நல்லவளாக வாழ்ந்திடுவாய். இவ்வுலகில் நேர்மையுடன் வாழ்க்கை நடத்துவதுதான் எல்லாவற்றிலும் மேம்பட்ட தவமும், செல்வமுமாகும். இவ்வாபரணங்களை நீயே எடுத்துச் செல்," என்று கூறினார்.

பண்டாக்கள் இந்த மனமாற்றத்தைக் கண்ணுற்று பெருவியப்படைந்து தோல்வியுடன் அங்கிருந்து நழுவி விட்டனர்.

சுவாமிஜி சிரித்த முகத்துடன் எல்லோரிடமும் கலந்து பழகும் இயல்பினர். அவர் வெற்று அனுஷ்டான வாதிகளான பிராமணர்களின் வார்த்தைகளைச் சிரித்துக் கொண்டே கண்டித்து வந்தார். கங்கையில் குளிப்பதாலும், தலையை மொட்டையடித்துக் கொள்வதாலும், உடலெல்லாம் சாம்பலைப் பூசுவதாலும் சுவர்க்கம் கிடைத்து விடுமாயின், மீனும், ஓநாயும், கழுதையும் மற்றவர்களைவிட அதிகமான சுவர்க்க உரிமை கொண்டவையாகும் என்று அவர் கபீர்தாசரைப் போன்றே கூறினார். "விக்கிரக வழிபாட்டில் மட்டும் நாட்டம் கொள்வது அறிவின்மை தவிர

வேறில்லை. உங்களது முன்னோர்களுக்கு மரியாதை செலுத்த விரும்பினால் அவர்களது நல்வார்த்தைகளை அனுசரித்து நடந்து கொள்க; உயிருடன் இருக்கும்போது அவர்களைத் துன்புறுத்திவிட்டு, இறந்த பின்னர் அவர்களுக்குச் சிராத்தம் செய்வதும், பார்ப்பனரை உண்பிப்பதும் அவர்களது ஆத்துமாவுக்கு ஏதும் மகிழ்வு தராது," என்றெல்லாம் அவர் எடுத்துரைத்தார்.

சுவாமிஜி தலைசிறந்த சீர்த்திருத்தவாதியாகத் திகழ்ந்தார். பாலியத் திருமணம், தீண்டாமை ஆகியவற்றை அவர் தீவிரமாக எதிர்த்து நின்றார். பிறப்பினால் யாரும் உயர்ந்துவிட முடியாது, ஒரு ஹரிஜன் கூட தனது நற்பணிகளால் பார்ப்பனன் ஆக முடியும் என அவர் கருதினார். "சுத்தி இயக்கம்" என்ற இயக்கத்தையும் அவர் ஆரம்பித்தார், கல்விப் பிரசாரம் புரிந்தார். அநாதாசிரமங்களையும், விதவாசிரமங்களையும் ஏற்படுத்தினார். இச்சீர்த்திருத்தப் பணிகள் காரணமாகப் பலர் அவருக்குப் பகைவர்களாயினர்.

அக்காலத்திலேயே பல சமஸ்தானங்களில் மக்கள் மிகவும் பின் தங்கியிருந்தனர். அவர்கள் மீது சுவாமிஜியின் கவனம் சென்றது. அவர் அங்கெல்லாம் சென்று மக்களுக்கு நல்லுபதேசம் புரிந்தார். அவரது புகழ் பரவியது. திரளான மக்கள் அவர்முன் கைகட்டி நின்றனர். இவ்வளவு செல்வாக்கான நிலையில் வேறு ஒருவராக இருப்பின், தமக்கென நிதி திரட்டிவிடுவார். சமஸ்தானத்தையே கேட்டுப் பெறுவார். ஏதேனும் மடத்திற்கு அதிபதியாகி ஆனந்த வாழ்வு நடத்துவார்; ஆனால் ஆசை சுவாமிஜியை அணுக

வில்லை. சமஸ்தானங்களில் விழிப்பு ஏற்படுத்திய வண்ணம் சுவாமிஜி ஜோத்பூருக்கு வந்து சேர்ந்தார். ஜோத்பூர் அரசர் அவரைத் தடபுடலாக வரவேற்றார். மன்னர் ஏராள மான காணிக்கைகளைச் சமர்ப்பித்து சுவாமிஜியின் முன் தரையில் உட்கார்ந்து கொண்டார். சுவாமிஜி அரசரைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்று ஆசனத்தில் அமர்த்தினார்; அவருக்கு அரச நீதிகளை உபதேசித்தார். மன்னரைப் போலவே பிரஜைகளும் அவரது உபதேசங்களை ஆர்வ முடன் கேட்டனர். தினமும் மாலையில் சுவாமிஜியின் சொற்பொழிகள் நடைபெற்றன.

அந்நாட்களில் ஜோத்பூர் அரசர் 'நன்ஹிஜான்' என்ற விலை மாதிடம் மிக்க மயக்கம் கொண்டிருந்தார். ஒரு நாள் சுவாமிஜி அரசவைக்கு வந்த சமயம் அவ்விலைமாது அங்கே அமர்ந்திருந்தாள். சுவாமிஜி அதைக் கண்டு அரசரைக் கடிந்து கொண்டார்; உடனே தம் இருப்பிடம் சென்று, அப்பரத்தையின் தொடர்பை விட்டு விடுமாறு அரச ருக்குக் கடிதமெழுதினார். அரசருடைய தயவு விட்டுப்போன தும் அந்த ஸ்திரீக்கு சுவாமிஜியின் மேல் ஆத்திரம் பிறந் தது. அவள் சுவாமிஜியின் சமையற்காரன்மூலம் அவர் அருந் தும் பாலில் நஞ்சைக் கலக்கச் செய்தனள். பாலைக் குடித்த சில நிமிடங்களில் சுவாமிஜி இதை அறிந்துவிட்டார். அவர் தமது சமையற்காரனை அழைத்து, "நீ எனக்கு விஷங் கலந்த பாலை ஏன் கொடுத்தாய்?" என்று கேட்டார்.

அவன் உடனே திடுக்கிட்டுப் போனான். சுவாமிஜி யின் திருவடிகளிலே விழுந்து வணங்கி விம்மியழுதனன். வேறு மனிதராக இருப்பின், கொலைகாரனைப் பிடித்து அதிகாரிகளிடம் ஒப்படைத்து விடுவார்கள்; ஆனால் வீரமும்

கருணையும் கொண்ட சுவாமிஜி அவனுக்கு ஊதியமும் வழிச் செலவும் அளித்து, "நீ இங்கிருந்து உடனே ஓடிவிடு. மக்களுக்குச் செய்தி தெரிந்தால் உன்னைக் கொன்று விடுவார்கள்." என்று கூறினர்.

மறுதினம் சுவாமிஜியின் உடல்நிலை கெட்டுவிட்டது. பெரிய பெரிய மருத்துவர்கள் வந்து சிகிச்சை செய்தனர். அவரை அங்கிருந்து ஆபுவுக்கு அழைத்துச் சென்றனர். பின்னர் ஆபுவிலிருந்து ஆஜ்மீருக்குக் கொண்டு வந்தனர். அப்படியும் அவர் உடல் நிலை கட்டுக்கு அடங்கவில்லை. 1983-ம் ஆண்டு அக்டோபர் 30-ந் தேதி தீபாவளி தினத் தன்று சுவாமிஜி தனது பூத உடலைத் துறந்து அமரரானர். அவர் உயிர் பிரியும் தருவாயில் "ஏ பிரபு உனது லீலையை என்ன வென்று கூறுவேன். உனது இச்சை பூர்த்தி யாகட்டும்." என்று கூறினர்.

சுவாமிஜியின் பிரசார நடவடிக்கைகள் வட இந்தியா வில் சிறப்பாகப் பரவி வந்தன. குறிப்பாக பஞ்சாபில் இன்றும் கூட அவரைப் பின்பற்றுபவர்கள் அதிக அளவி லாக உள்ளனர்· சுவாமிஜியின் உபதேசங்களின் பலனாக இந்நாட்டில் பல சமூகங்கள் மேம்பாடு கண்டன. பாலர் விவாகம், பர்தா பழக்கம், தீண்டாமை மற்றும் ஆகிய பழக்க வழக்கங்களின் தீமைகள் பற்றி மக்கள் பெரிதும் உணர லாயினர். இளம் விதவைகளின் மறு விவாகங்களுக்கு ஆரிய சமாஜத்தில் ஏற்பாடு செய்யப்பட்டன. சிறுவர் சிறுமியர்களின் கல்வி வளர்ச்சிக்கு பிரசார ஏற்பாடுகள் துவக்கப்பட்டன. பல குருகுலங்களும், கல்லூரிகளும் துவக்கப்பட்டன. இவ்வகையிலாக கல்வித் துறையில் ஆரியசமாஜம் பெரும் பங்கு எடுத்து வந்தது. சுவாமி

தயானந்தர் பண்டைக் கால பாரதத்தின் உதாரண புருஷராகவும் ஸ்வராஜ்ய கோஷத்தின் முன்னேடி உபதேசராகவும், மற்றும் நாட்டை அந்நியருக்கு அடிமையாக்க வந்தவர்களின் பரம விரோதியாகவும் விளங்கி வந்தார். நாட்டில் 1857-ம் ஆண்டில் நிகழ்ந்த விடுதலைப் போராட்டத்திற்குப் பின்னர் விடுதலை ஆர்வம் மக்களிடையே ஓங்கி வந்ததையடுத்து சுவாமிஜி சிறிதும் பயமின்றி நாட்டின் விடுதலையே எல்லாவற்றைக் காட்டிலும் சிறந்ததென முழங்கி வந்தனர்.

இங்கிலாந்தின் மிகப் பெரிய பாதிரி ஒருவர் 1873-ம் ஆண்டில் கல்கத்தா வந்து சேர்ந்தார். அக்காலத்தில் சுவாமி தயானந் கல்கத்தாவில் தமது உபதேசங்களை நிகழ்த்தி வந்தார். அவருடைய அறிவு நிறைந்த வியாக்யானங்களை கேட்டு பாதிரி அவர்கள் மிகவும் பரவசமடைந்தார். அவர் அச்சமயத்தில் பிரிட்டிஷ் அரசின் வைசிராயாகப் பதவி வகித்து வந்த நார்த் ப்ருக் என்பவருடன் தயானந்தர் பேட்டி தருவதற்கு ஏற்பாடு செய்தார். பிரபு நார்த்ப்ருக் தயானந்த சரஸ்வதியை நோக்கி "உங்களுடைய வியாக்கியானங்களைக் கேட்டு பலர் உங்களுக்கு விரோதியாகத் திரும்பி உள்ளனர். உங்களைப் பாதுகாப்பதற்கு காவல் தேவையெனில் ஏற்பாடு செய்து தருகிறேன்" என்று கூறினர்.

சுவாமிஜி வைஸிராய்க்கு நன்றி தெரிவித்து எனக்கு யாதொரு ஆபத்தும் ஏற்படாது; என்னுடைய உபதேசங்களை பரப்புவதற்கு எனக்கு முழு உரிமை உள்ளது என்று கூறினர்.

அதன் பேரில் வைஸிராய் "ஆங்கிலேயர் அரசு ஏற்பாட்டின் கீழ் உங்களுக்கு இத்துணை அளவு உரிமை இருந்துவரின் ஆங்கிலேய அரசு ஏற்பாடு பற்றி உங்களுடைய உபதேசங்களில் பிரபலப்படுத்த வேண்டு" மென்று கூறினர். சுவாமி தயானந்தர் அவருக்கு பதிலளிக்கையில் "நான் அவ்வாறு செய்யமாட்டேன். ஏனெனில் எனது நாடு முழு விடுதலை பெறவேண்டுமென்ற அவா எனக்கு உள்ளது. நான் தினந்தோறும் ஈஸ்வரனை நோக்கி பிரார்த்தனை செய்து வருவது யாதெனில், அந்நியரின் அடிமைப் பிடியிலிருந்து எனது நாடு விடுதலை பெற வேண்டும் மென்பதேயாகும்" என்று கூறினர்.

ஹிந்தி மொழியில் தம்முடைய சிறப்பு நூலான சத்தியார்த்தப் பிரகாஷ் என்னும் நூலை வெளியிட்டுள்ளதின் மூலம் சுவாமிஜி நாட்டின் ஒருமைப் பாட்டுக்கு வழி வகுக்கும் பாதையில் ஹிந்தி மொழியை ராஷ்டிர மொழியாக்குவதில் வெற்றி கண்டுள்ளார்.

சுவாமி தயானந்தர் ஒரு ஈடு இணையற்ற சன்னியாசியாக விளங்கினர். அவர் நாட்டு மக்களின் அறிவுக் கண்களைத் திறந்ததுடன் அந்நிய அரசின் அடியாட்களின் பிடியிலிருந்து விடுவிப்பதற்கும் பெரிதும் வகை செய்தார். அவர் மக்களின் மேம்பாட்டுக்கு அயராது சேவை செய்து வந்த மகான் என்று கூறினல் மிகையாகாது. மேலும் மக்களை விழிப்படையச் செய்வதில் அவருடைய பங்கு மிகப் பெரியதாகும்.

—:o:—

# இந்திய சர்க்கார் பிரசுரங்கள் வெளியீட்டுப் பிரிவு

## தமிழ் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| காந்திஜி (மறுபதிப்பு) | ... | 2·50 |
| ஜுவாலாமுகி (நாவல்)—அனந்தகோபால சென்டே | ... | 3·00 |
| விஞ்ஞானத்தின் சில அம்சங்கள்—சி. வி. இராமன் | ... | 1·75 |
| வளம் தரும் திட்டங்கள் | ... | 0·80 |
| நல்ல பிரஜையின் இலட்சணங்கள் | ... | 1·25 |
| இந்திய வன விலங்குகள்—ஸ்ரீராம் சர்மா | ... | 4·00 |
| இந்தியாவின் கல்வித்துறைச் சீரமைப்பு—டாக்டர் ஜாஹிர் ஹுசேன் | | 1·75 |
| கல்வி அல்லது நாகரீகத்தின் எதிர்காலம்—டாக்டர் ராதாகிஷ்ணன் | | 1·25 |
| சுபிட்சப் பாதை—கே. ஸ்ரீ சடகோபன் | ... | 1·00 |
| இந்தியா இன்றும் நாளையும்—ஜவஹர்லால் நேரு | ... | 0·75 |
| இந்திய அரசியல் அமைப்பு | ... | 1·50 |
| நாம் அறிந்த காந்திஜி | ... | 1·50 |
| ஆதிவாசிகள் | ... | 0·50 |
| இந்திய வரலாறு (பாலர் பதிப்பு)—ஷீலா தர் | ... | 3·50 |
| பாரதப் பெரியார்கள் (முதல் பாகம்) | ... | 3·00 |
| பாரதப் பெரியார்கள் (இரண்டாம் பாகம்) | ... | 3·10 |
| பாரதப் பெரியார்கள் (நான்காம் பாகம்) | ... | 5·40 |
| இந்தியாவின் வீரப் புதல்வர்கள் | ... | 0·60 |
| ராதாகிருஷ்ணன் கண்ட நேரு | ... | 0·75 |
| நமது கொடி | ... | 1·00 |
| ஹிந்துச் சட்ட சீர்திருத்தம் | ... | 1·00 |
| வெளிநாட்டு கிராமியக் கதைகள் | ... | 0·75 |
| நமது தேசீயச் சின்னம் | ... | 0·50 |
| மஹாத்மா காந்தியின் போதனைகள்—ஸ்ரீ யு. எஸ். மோஹன் ராவ் | | 1·50 |
| நமது பட்சிகள் | ... | 3·00 |

—:o:—

மூன்று ரூபாய் மதிப்புள்ளதும் அதற்கு மேற்பட்ட மதிப்புள்ளதுமான புத்தகங்கள், தபால் செலவு ஏதுமின்றி வி. பி. பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.

**புதுடில்லி :** பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், பாட்டியாலா ஹௌஸ்।

**சென்னை :** சாஸ்திரி பவன், 35, ஹாடோஸ் ரோட், நுங்கம்பாக்கம்.

# திட்டம்

## யோஜனாவின் தமிழ்ப் பதிப்பு

( இரு வாரங்களுக்கொரு முறை பிரசுரம் )

நாட்டின் திட்ட வளர்ச்சி பற்றிய விஷயங்களையும், தென்னிந்திய மக்களுக்கு விசேஷ அக்கறையுள்ள பிரச்சனைகளையும், திட்ட சாதனைகளையும் விளக்கியுரைக்கும் சிந்தனை ஏடு.

சந்தா :

ஆண்டுக்கு ரூ. 5·00
தனி இதழ் ரூ. 25 காசு
( தபால் செலவு கிடையாது )

பதிப்பகம் : யோஜனா பவன்
பார்லிமெண்ட் தெரு
புதுடெல்லி-1

தொழிலகம் : பிஸினஸ் மானேஜர்
பப்ளிகேஷன்ஸ் டிவிஷன்
பாட்டியாலா ஹௌஸ்
புதுடில்லி-1

